உ

சிவமயம்

திருநணா என்னும் பவானி கூடல் திருபண்ணார் மொழியம்மை

பாகத்து நண்ணாவுடைய சிவபிரான்

ஸ்ரீ சங்கமேஸ்வர சுவாமி திருக்கோயில்




# மகா கும்பாபிஷேக விழா மலர்

விண்ணுக்கும் மண்ணுக்கும் நாதனுமாம் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து.

மகா கும்பாபிஷேக மலர் வெளியீட்டுக் குழுவினர்

பிலவங்க ஆண்டு ஆனித் திங்கள் 30-ஆம் நாள்

14 - 7 - 1967

# முன்னுரை

சிவமணம் கமழும் நம் செந்தமிழ் நாட்டின் கொங்கு நாட்டுத் திருத் தலங்களாக விளங்கும் ஏழனுள் பவானி கூடலெனப்படும் திருநணுத் தலம் பழமையும் பெருமையும், ஞானசம்பந்தப் பிள்ளையார் பாடல் பெற்ற அருமை யும் உடையதாகும். பேரருள் ஊற்றுக்களாக விளங்கும் ஆலயங்களை அமைப்பதிலும் புரப்பதிலும் தமிழரசர்கள் பெரு விருப்பம் காட்டி வந்தனர். பல்லாண்டுகளாக நிலைபெற்று வரும் இவ்வருளாலயங்களைப் போற்றிப் புதுப்பிக்கும் கடன் நம்மக்களின் தலையாய கடனாகும். அவ்வகையில் பல திருக்கோயில்களில் திருப்பணிகள் இப்போது நடைபெற்று வருகின்றன.

திருநணுத் திருக்கோயிலை ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்க் கொங்குநாட்டுச் சிற்றரசர்களான கெட்டிமுதலியார் பரம்பரையினர் புதுப்பித்தனர். காவேரி-பவானி கூடல் பகுதியில் கருங்கல்லால் செப்பமுற அமைக்கப்பட்ட இவ் வாலயத்தில் காலத்தின் நெடுமையாலும் வெள்ளத் தின் கொடுமையாலும் சில பகுதிகள் சீர்குலைந்தன. இதனைக் கண்ணுற்றுக் கவன்ற உள்ளங்களின் இடையறாத முயற்சியால் இன்று மகா கும்பாபி ஷேகம் மாண்புற நடைபெறுகிறது. கடந்த பதினோர் ஆண்டுகளாக இந்தப் பணி இனிதே நடந்து இன்று நிறைவெய்துகிறது. ஒப்பற்ற அருள் உள்ள அண்ணலாகத் திகழும் திரு கே. கே. சுப்பண்ணக் கவுண்டரின் முயற்சியினை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

மகா கும்பாபிஷேகம் நடைபெறும் இந்நன்னாளில் பவானித் திருத்தலத் துடன் தொடர்பு கொண்ட செய்திகளைத் தொகுத்தும், சமயநெறிக் கட்டுரை களைச் சேர்த்தும் ஒரு மலர் வெளியிடக் கருதினோம். எங்கள் விருப்பத்திற் கேற்பக் கட்டுரைகள் தந்து உதவிய அன்பர்களின் ஒத்துழைப்பால் எங்கள் முயற்சி நிறைவேறியிருக்கிறது.

எண்ணி அளவிட்டால் எட்டுப் பத்து நாட்களிலேயே இந்த மலர்ப் பணி தோன்றி நடந்தது என்றால் மிகையாகாது. எனினும் வேண்டிய வுடனே அருட்பெரியார்கள் ஆசி வழங்கியும் அறிஞர்கள் கட்டுரை எழுதியும் இந்த மலரை அழகியதாக்கியுள்ளனர். அவர்களுக்கெல்லாம் எங்கள் மனங்கனிந்த நன்றி. மலர்ப்பொறுப்பை ஏற்று உதவிய கலைமகள் ஆசிரியர் திரு கி. வா. ஜகந்நாதன் அவர்களுக்கும், திருப்பணிக் குழுவினர்க்கும், அன்பர் பலர்க்கும் எங்கள் அன்பு கலந்த நன்றி. குறுகிய காலத்தில் இம்மலரை வெளியிட நேர்ந்ததால் குறைகளைப் பொறுத் தருளுமாறு பணிவுடன் வேண்டுகின்றோம். தேனார் மலர் கொண்டு அடியார் அடிவணங்கும் திருநணுவில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ பண்ணார் மொழியம்மை பாகத்து நண்ணுவுடைய சிவபிரான் திருவடிகளில் எளிய இம்மலரை வைத்து வணங்குகின்றோம்.

*மலர் வெளியீட்டுக் குழு*



உ

சிவமயம்

திரு ஞானசம்பந்த சுவாமிகள் அருளிய

# தேவாரம்

## திருநணுவெனும் பவானி - பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

பந்தார் விரல்மடவாள் பாகமா நாகம்பூண் டேற தேறி
அந்தா ரரவணிந்த வம்மா னிடம்போலும் அந்தண் சாரல்
வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில் வண்டு பாடச்
செந்தேன் றெளிியொளிரத் தேமாக் கனியுதிர்க்குந் திருநணுவே. 1

நாட்டம் பொலிந்திலங்கு நெற்றியினுன் மற்றொருகை வீணை யேந்தி
ஈட்டுந் துயரறுக்கு மெம்மா னிடம்போலும் இலைசூழ் கானில்
ஓட்டந் தருமருவி வீழும்விசை காட்டமுந் துந்தூ மோசை
கேட்டார் மணிக ளணியுந் திரைசேர்க்குந் திருநணுவே. 2

நன்றுங் கிசைமொழிந்து நன்னுதலாள் பாகமாய் ஞால மேத்த
மின்றுங்கு செஞ்சடையெம் விகிர்தர்க் கிடம்போலும் விரைசூழ் வெற்பிற்
குன்றேங்கி வன்றிரைகள் மோத மயிலாலுஞ் சாரற் செவ்வி
சென்றேங்கி வானவர்க ளேத்தி யடிபணியுந் திருநணுவே. 3

கையில் மழுவேந்திக் காலிற் சிலம்பணிந்து கரித்தோல் கொண்டு
மெய்யில் முழுதணிந்த விகிர்தர்க் கிடம்போலு மிடைந்து வானோர்
ஐய ரவரெம் பெருமா னருளென்று ரக்கச்
செய்ய கமலம் பொழிதே னளித்தியலுந் திருநணுவே. 4

முத்தேர் நகையா ளிடமாகத் தன்மார்பில் வெண்ணூல் பூண்டு
தொத்தேர் மலர்ச்சடையில் வைத்தா ரிடம்போலுஞ் சோலை சூழ்ந்த
வைத்தே னளியுண் களியா லிசைமுரல வாலத் தும்பி
தெத்தே யெனமுரலக் கேட்டார் வினைகெடுக்குந் திருநணாவே. 5

வில்லார் வரையாக மாநாகம் நாணாக வேடங் கொண்டு
புல்லார் புரமூன் றெரித்தார்க் கிடம்போலும் புலியும் மானும்
அல்லாத சாதிகளும் அங்கழன்மேற் கைகூப்ப வடியார் கூடிச்
செல்லா வருநெறிக்கே செல்ல வருள்புரியுந் திருநணாவே. 6

கானார் களிற்றுரிவை மேன்மூடி யாடரவொன் றரைமேற் சாத்தி
ஊனார் தலையோட்டி லூணுகந்தான் றானுகந்த கோயி லெங்கும்
நானா விதத்தால் விரதிகணன் னாமமே யேத்தி வாழ்த்தத்
தேனார் மலர்கொண் டடியா ரடிவணங்குந் திருநணாவே. 7

மன்னீ ரிலங்கையர் தங் கோமான் வலிதொலைய விரலா லூன்றி
முந்நீர்க் கடனஞ்சை யுண்டார்க் கிடம்போலும் முனைசேர் சீயம்
அந்நீர்மை குன்றி யழலால் வலிகுறைய வழியு முன்றிற்
செந்நீர் பரப்பச் சிறந்து கரியொளிக்குந் திருநணாவே. 8

மையார் மணிமிடற்றன் மங்கையோர் பங்குடையான் மனைகள் தோறும்
கையாற் பலியேற்ற கள்வனி டம்போலுங் கழல்க ணேடிப்
பொய்யா மறையானும் பூமி யளந்தானும் போற்ற மன்னிச்
செய்யா ரெரியா முருவ முறவணங்குந் திருநணாவே. 9

ஆடையொழித் தங்கம ணேதிரிந் துண்பா ரல்லல் பேசி
மூடுருவ முகந்தா ருரையகற்று மூர்த்தி கோயில்
ஓடுநதி சேருநித் திலமுமொய்த் தகிலுங் கரையிற் சாரச்
சேடர் சிறந்தேத்தத் தோன்றி யொளிபெருகுந் திருநணாவே. 10

கல்வித் தகத்தாற் றிரைசூழ் கடற்காழிக் கவுணி சீரார்
நல்வித் தகத்தா லினிதுணரும் ஞானசம்பந்த னென்னும்
சொல்வித் தகத்தா லிறைவன் றிருநணா வேத்து பாடல்
வல்வித் தகத்தான் மொழிவார் பழியிலரிம் மண்ணின் மேலே. 11

திருச்சிற்றம்பலம்

## பவானித் திருப்புகழ்

கலைமேவு ஞானப் பிரகாசக்
கடலாடி ஆசைக் கடலேறி
பலமாய வாதிற் பிறழாதே
பதிஞான வாழ்வைத் தருவாயே
மலைமேவு மாயக் குறமாதின்
மனமேவு வாலக் குமரேசா!
சிலைவேட சேவற் கொடியோனே
திருவாணி கூடற் பெருமாளே.

## வேதநாயகி பிள்ளைத் தமிழ்

எள்ளத் தனையுங் கள்ளமிலார் இதயத் தடத்தின் இனிதலரும்
இனிய மலரே அண்டருணற் கெட்டாத் தேனே கண்டவர்கள்
அள்ளிக் கொளும்பே ரழகுவள ரகமே கணுவு ருக்கரும்பே
அரிய தவமே தவப்பயனே அன்பே கங்கை நதிபுனையும்
வள்ளற் றருவின் விளையாடும் மயிலே வேத நாயகியே
வரம்வேட் டவருக் கருள்புரிய வாரி வாழும் பெருவாழ்வே
தள்ளத் தகுமெந் தமக்கும் அருள் தாயே வருக வருகவே
தாயேழ் புவியுங் காக்கவரும் தாயே வருக வருகவே.

## பவானிகூடற் புராணம்

### சங்கமேசர் துதி

பண்ணுரும் மறையோனும் பாலாழி துயின்றோனும்
படிவம் வேறாய்
விண்ணுடி மண்ணிடந்தும் காண்பரியப் பேரொளியாய்
மெய்யன் புள்ளோர்
உண்ணாடும் பூரணமாய்ப் புவனசரா சரவுயிருக்
குயிராய் ஞானக்
கண்ணாகி நண்ணுவில் வீற்றிருந்த சிவக்கொழுந்தைக்
கருத்துள் வைப்பாம்.

### வேதநாயகி துதி

பண்பெற்ற மறைக்கிழவன் கை ஆறக் கடுங்கால
படர்கால் ஆற
எண்பத்து நான்குநூ றுயிரந்தா யருஞ்சுமக்கா
இளைப்பிங் காறத்
தண்பெற்ற பெருங்கருணை யதுகொழிக்கும் கடைக்கணருள்
தந்தாட் கொண்டென்
புண்பெற்ற பவந்துடைத்த வேதநா யகிமலர்த்தாள்
போற்றல் செய்வாம்.

# ஸ்ரீசங்கமேசுவரர் ஆலயத் திருப்பணிக் குழு

---

தலைவர் & பொருளாளர் :

திரு. சுப்பண்ண கவுண்டர், கூகலூர்.

துணைத் தலைவர்கள் :

திரு. B. R. வெங்கடாசலபதி நாயுடு,
பஞ்சாயத்துப் போர்டு தலைவர், பவானி.

,, O. P. முத்துக் கவுண்டர், ஒடத்துறை-நஞ்ச கவுண்டம்பாளையம்.

செயலாளர்கள் :

,, M. A. ஆப்பக் கவுண்டர், காசிபாளையம்.

,, T. K. இராமசாமிக் கவுண்டர், பவானி.

அங்கத்தினர்கள் :

,, K. E. கந்தப்ப கவுண்டர், கூகலூர்.

,, T. C. இராமலிங்கம் செட்டியார், தாளபாளையம்.

,, B. தியாகராஜ செட்டியார், வக்கீல், பவானி.

Dr. K. பாலசுப்பிரமணியம், பவானி.

,, A. பழனிவேலு, பவானி.

,, T. M. செம்புசெல்லி கவுண்டர், வெள்ளி திருப்பூர்.

,, P. K. பொன்னுசாமிக் கவுண்டர், புதுப்பாளையம், கோபி.

,, V. T. லட்சுமிநாராயணக் கவுண்டர், வடமலைப்பாளையம்.

நிர்வாக அதிகாரி, பவானி ஸ்ரீ சங்கமேசுவரர் ஆலயம், பவானி.

# வாழ்த்துக்கள்

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம்,
காஞ்சிபுரம்.

முகாம் : ஏலூரு, மேல கோதாவரி ஜில்லா
27—5—1967

கொங்கு மண்டலத்தில் விளங்குவதும், காவேரி, பவானி, அமுத நதிகளின் ஸங்கமத்தினுல் தக்ஷிணப்ரயாகை என்று வழங்கப்படுவதும் திருஞானசம்பந்தப் பெருமான் தேவாரத்தில் 'திருநணு' என்று பாடப் பெற்றதுமான பவானி கூடல் க்ஷேத்திரத்தில் ஆவிர்பவித்திருக்கும் புராண வரலாற்றையுடைய ஸ்ரீ வேதநாயகியம்மன் ஸமேத ஸ்ரீ ஸங்கமேச்வரப் பெருமான், ஸ்ரீ ஸௌந்தரவல்லித் தாயார் ஸமேத ஸ்ரீ ஆதிகேசவப்பெருமாள் - இம்மூர்த்திகளின் ஸந்நிதிகளினுல் உலகிற்குச் சைவ-வைஷ்ணவ சமரஸத்தைப் புகட்டிவரும் ஆலயம் ஜீரணமாயிருந்ததை இவ்வூர் ஆஸ்திகப்ரபு ஸ்ரீ சுப்பண்ண கவுண்டரைத் தலைவராகக் கொண்ட திருப்பணிக் குழுவினர், தார்மிக மனோபாவமுள்ள அன்பர்களும், தேவஸ்தானங்கள் உதவிய லக்ஷக்கணக்கான பொருளுதவியினுலும், தேர்ச்சி பெற்ற சிற்பிகளின் கைத்திறமையினுலும் உத்தாரணம் செய்து பூர்த்தி செய்வித்து ஸமீபத்தில் கும்பாபிஷேகம் நடத்த முன் வந்திருப்பதை அறிந்து ஸந்தோஷிக்கிறோம்.

ஆஸ்திகர்கள் இவ்வாலயக் கும்பாபிஷேக விழாவிற்குப் பரிபூர்ணமாக உதவியும் ஒத்துழைத்தும் ஸ்ரீ ஸங்கமேச்வர ஆதிகேசவப் பெருமான்களை வழிபட்டும் எல்லா மேன்மைகளையும் அடைவார்களாக.

நாராயண ஸ்மிருதி.

தருமையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம், மாயூரம் P. O.
27—6—1967

" ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே "

மனவாக்குக்களைக் கடந்தவனாகிய இறைவன் பத்திவலையிற் படுவோனாக இருந்து உயிர்களுக்கு அருள்புரிகின்றான். மனவாக்குக்களைக் கடந்து நிற்கும் நிலையில் அவனுக்கு ஓர் உருவம், பெயர், தொழில் யாதும் இல்லை. ஆயினும், அவன் பத்தி வலையிற் படுவோனாகி உயிர்களுக்கு அருள்புரிகின்ற நிலையில், அளவற்ற உருவங்களையும், பெயர்களையும், தொழில்களையும் உடையவனாகின்றான். அத்துணை உருவங்களும் அருள் உருவங்களே. அந்த அருள் உருவங்களை மனத்தால் சிந்தித்தும், வாயால் வாழ்த்தியும், காயத்தால் வணங்கியும் மக்கள் நலம் பெறுதற்கு உரியவர்கள்.

அருள் உருவங்களை நேரே காணும் பேறு பெருந்தவத்தவர்களுக்குக் கிடைப்பதாகும். ஏனைய பலருக்கும், 'தாவரம், சங்கமம்' என்னும் இரண்டு வகையான திருவுருவங்களில் விற்றிருந்து இறைவன் திருவருள் புரிகின்றான். அவற்றில் திருக்கோயிலுள் இருக்கும் திருமேனிகளே தாவரத் திருமேனிகளாகும். இத்திருமேனிகள் மாயா காரிய உருக்களால் ஆக்கப்பட்டிருப்பினும் மந்திர சாந்நியத்தால் அருட்டிருமேனிகளே ஆகின்றன. "மாயை காரிய உருக்களும் எம்பிரான் வடிவம்—ஆயவேல் அவை அருள்மயமாகும்" என்கின்றது காஞ்சிப் புராணம்.

திருக்கோயிலினுள் இருக்கும் திருமேனிகள் அங்கே நடைபெறும் நித்திய நைமித்திக வழிபாடுகளால் மந்திர சாந்நித்தியம் பெற்று இறைவன் இனிது விளங்கி அருள்புரியும் திருமேனிகளாகின்றன. அவற்றிலும், மூவர் திருப்பாடல்கள் பெற்ற திருத்தலங்களில் உள்ள திருமேனிகளில் இறைவனது திருவருள் விளக்கம் மிகவும் சிறந்து விளங்குவதாகும். அதனால் தேவாரத் திருப்பாடல் பெற்ற தலங்கள் தனிச் சிறப்புடையன. ஆகவே இத்தலங்களில் நடைபெறும் நித்திய நைமித்திக வழிபாடுகள் மக்கட்குப் பெருநலம் விளைப்பனவாகும்.

நித்திய நைமித்திக வழிபாடுகள் முறையாக நடைபெற்றுவரினும், திருக்கோயில்களில் பன்னிரண்டாண்டிற்கு ஒரு முறையேனும் மகா கும்பாபிடேகம் நடைபெறுதல் இன்றியமையாதது. மகா கும்பாபிடேக விழா 'பெருஞ்சாந்தி' எனப்படும். இதனைத் தரிசித்தலும் பெரும் புண்ணியம். "கபாலீச்சரம் அமர்ந்தான் பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்" என்கின்றார் திருஞானசம்பந்தர். மகா கும்பாபிடேகங்களால் திருக்கோயில்கள் புதிய விளக்கம் பெற்று மக்களது உள்ளத்தில் இறைவன் திருவருள் உணர்ச்சியை மிகுவிக்கும். கொங்கு நாட்டில் பாடல் பெற்ற தலங்கள் ஏழனுள், 'பவானி கூடல்' என வழங்கும் 'திருநணா' என்பது திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரால் பாடப்பெற்றது. "ஈட்டுந் துயரறுக்கும் எம்மான் இடம்" என்று அருளிச் செய்யப்பட்ட இத்திருக்கோயிலில் இப்பொழுது சிறந்தவகையில் திருப்பணி செய்யப்பெற்று, மகா கும்பாபிடேகம் நடைபெற இருப்பதையறிந்து மகிழ்வுறுகின்றோம். செந்தமிழ்ச் சொக்கன் திருவருளால் கும்பாபிடேகம் சிறப்புற நிகழ்க! அன்பர்கள் பலரும் அனைத்து நலங்களும் பெற்று நீடு வாழ்க!

*ஸ்ரீலஸ்ரீ காசிவாசி*
அருள்நந்தித் தம்பிரான் அவர்கள்,
*காசி மடம்.*

*திருப்பனந்தாள்,*
*(தஞ்சாவூர் ஜில்லா)*
26—6—1967.

பவானி ஸ்ரீசங்கமேஸ்வரர் கோயில் திருப்பணிக்குழுத் தலைவர் கே. கே. சுப்பண்ண கவுண்டர் அவர்கட்குச் செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க.

*　　　　*　　　　*

*வித்துவான் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்,*
*ஜுனியர், ஸ்ரீகாசி மடம்.*

கொங்கு நாட்டில் தேவார மூவரது பாடல் பெற்ற தலங்கள் அவிநாசி, திருமுருகன் பூண்டி, திருநணா, திருச்செங்குன்றூர், திருவெஞ்சமாக்கூடல், திருப்பாண்டிக் கொடுமுடி, கருவூர் என்னும் ஏழாகும். அவற்றுள் திருநணா என்னும் தலமே இந்நாளில் பவானி என்ற பெயரால் வழங்கப் பெறுகின்றது. இத்தலத்துக்கு ஞானசம்பந்தர் அருளிய பதிகம் உண்டு. இங்குச் சுந்தரர் திருவுருவம் ஆவணவோலை கிழித்தருளியபடி உள்ளது. இது வேறு எங்கும் காணப்பெறாத செப்புத் திருமேனியாகும்.

தேவார மூவர் காலத்திலேயே பலதளிகள் ஜீரணோத்தாரணம் செய்யப் பெற்றன. அவ்வமயத்துப் பாலாலயம் அமைத்தார்கள். பாலாலயம் என்பதைச் சமயகுரவர்கள் இளங்கோயில் என்றனர். திருமயச்சூர் இளங்கோயிலைத் திருநாவுக்கரசர் குறித்துள்ளார். ஆகவே அந்நாளிலும் கோயில்கள் பழுதுபார்க்கப் பெற்றன என்பது திண்ணம். அந்நாள் போல இந்நாளிலும் பல கற்றளிகள் ஜீரணோத்தாரணம் செய்யப்பெற்று அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகங்கள் நடத்தப் பெற்று வருகின்றன. இது உலகத்துக்கு நன்மைகளையே பயக்கும்.

திருநணா எனப் பெயர் பெறும் பவானி சங்கமேசுவரர் கோயிலில் ''கல்வித் தகத்தால்'' ஆயசெம்மையும், ''சொல்வித் தகத்தால்'' திருப்பணிக் குழுவினர் ஆற்றும் தொண்டுகளும், ''நல்வித் தகத்தால்'' அக்குழுவினர் நிகழ்த்தும் பணிகளும், அன்னோர் ''வல்வித் தகமும்'' (வலிமையான உறுதிப்பாடும்) கலந்து இக்குடமுழுக்கு விழாச் சிறப்புற இனிது நிறைவேறச் சிவனடி சிந்திக்கின்றோம்.

திருப்பணிக் குழுவில் சீரிய பணிகளை ஆற்றிவரும் கமிட்டித் தலைவர் கூகலூர் திரு கே. கே. சுப்பண்ணக் கவுண்டர், செயலர் காசிபாளையம் திரு எம். ஏ. ஆய்க் கவுண்டர் ஆகியோருடைய முயற்சிகள் பாராட்டற்பாலன. அன்னோர்க்குச் செந்திலாண்டவன் துணை நிற்க.

*''கல்வித் தகத்தால் திரைசூழ் கடற்காழிக் கவுணிசீரார்*
*நல்வித் தகத்தால் இனிதுணரும் ஞானசம் பந்தனென்னும்*
*சொல்வித் தகத்தால் இறைவன் திருநணா ஏத்துபாடல்*
*வல்வித் தகத்தால் மொழிவார் பழியிலரிம் மண்ணின்மேலே.''* —சம்பந்தர்.

திருவருள் தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர
ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகப் பரமாசாரிய சுவாமிகள்

மதுரை ஆதீனம்;
31—5—1967.

எல்லாம்வல்ல எம்பெருமானது இன்னருளால் எல்லா நலன்களும் எய்துக. தங்களுடைய 22உ கடிதம் கிடைத்து, ஆனி மாதம் 30உ (14-7-67) வெள்ளிக்கிழமையன்று மகா கும்பாபிஷேகம் நடைபெறத் திருவருள் பாலித் திருப்பதையறிந்து மகிழ்கின்றோம்.

சென்ற 12 ஆண்டுகளாகத் தாங்களும் தங்களுடைய சகாக்களும் இந்தத் திருப்பணிக்காக எடுத்துக் கொண்ட அயரா முயற்சியையும் உழைப் பையும் பெரிதும் பாராட்டுகின்றோம். திருப்பணிக்காகப் பொருளுதவி செய்த பக்தர்கள் அனைவரையும் போற்றுகின்றோம்.

மகாகும்பாபிஷேகம் யாதொரு விக்கினமுமின்றி எல்லாவகையான சிறப்புக்களுடனும் இனிதே நடந்தேறவும், அதில் கலந்து கொள்ளுகிற பக்த கோடிகள் எல்லா நலங்களும் பெற்றுத் திகழவும், மேன்மைகொள் சைவ நீதி உலகெல்லாம் பரவவும் திருவருள் பாலிக்குமாறு எல்லாம்வல்ல எம்பெரு மானைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கின்றோம்.

ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்

வித்துவான் சுந்தரசுவாமிகள்,
மடாதிபதி,
ஸ்ரீ கௌமார மடாலயம்.

சின்னவாடம்பட்டி,
கோயமுத்தூர்-6.
7—6—1967

## வெண்பாக்கள்

மன்னும் தமிழகத்தில் மாண்கொங்கு நாட்டினிடைப்
பன்னு காவேரி பவாநிநதி—தன்னடுவில்
மிக்கதளி கொள்சங்க மீச்சுரனுர் தம்கோயில்
தக்கவண் ணம்புதுப்பித் தார்.

கொங்கிற் சிறந்து குலவும் பவாநியெனும்
மங்காத் திருநணு மாநகரார்—சங்கரன்மேல்
ஞானசம் பந்தர்முதல் நற்றமிழ்ப்பாப் பாடியவர்
வானசம் பந்தமுற்றுர் மன்.

அங்கடைந்தார்க் கின்பம் அருள்வேத நாயகித்தாய்
பங்கிற் பொலியும் பரமசிவன்—தங்குதளி
சிற்பமுறக் கற்பணிகள் செய்யமுன்வந் தார்பலரும்
நற்பலன்பெற் றுய்வார் நயந்து.

பன்னிரண்டாண் டாகஉளப் பற்றுடனே கற்பணிகள்
மன்னிடச் செய்திட்ட மாண்பினர்கள்—பொன்னிகரைச்
சங்கமேசு ரப்பெருமான் தண்ணருளால் செல்வமெலாம்
தங்கவள வாழ்வடைவார் தாம்.

ஈசன் திருப்பணிக்கு இன்முகத்தோ டேன்றளவு
நேசமுடன் நற்பொருள்கள் நேர்ந்தளித்த—ஆசகன்றோர்
எல்லா நலமும் இசையப்பற் பல்லாண்டு
வல்லவள வாழ்வுபெறு வார்.

புராதனமார் கோயிற் புனிதப் பணியை
விரவுமன்பால் கூகலூர் மெய்யன்—பராவுபுகழ்
சுப்பணப்பேர்ச் செம்மல் அவர் தூய தலைமையினில்
தப்பிலன்பர் செய்தமைத்தார் தாம்.

கோயிற் பணிசெய்தோர் கோதில்பொரு ளீந்துவந்தோர்
தோயுமன்பால் மெய்யால் துணைசெய்தோர்—தூயபுகழ்ப்
பெற்றுப்பல் லாண்டு பெருஞ்செல்வம் பெற்றுயர்க!
சற்சங்க மேசனருள் சார்ந்து.

சுந்தர சுவாமிகள்

தவத்திரு வித்துவான். இராமசுவாமி யடிகள்,
திருப்பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடம்

திருப்பேரூர்,
29—5—1967

தெய்வமணங்கமழும் தமிழ்த் திருநாட்டில் அருட்பொலிவும், வரலாற்றுச் சிறப்பும் பெற்றுவிளங்குவது திருநணு என்னும் பவானித் தலமாகும். இத்திருத் திலத்தில் எழுந்தருளி அருள் வழங்கும், பந்தார் விரலம்மை பங்கராக விளங்கும் சங்கமேசுவர சுவாமியின் திருக்கோயில் பண்டைப் பெருமையுடையது; மாமன்னர்களால் பேணிப் போற்றப்பட்ட இக்கோயில் கொங்குநாட்டின் நடுவாகக் காவிரியும், பவானியும் கூடும் கூடுதுறையில் விளங்குகிறது. ஞானசம் பந்தப் பெருமானுல் பாடல் பெற்றது. மிகப் பழைமை யடைந்த கோயிலைச் சிவநெறிச் செல்வமும், எளிமையும், இனிமையும் உடையவராகிய சைவத்திரு கூகலூர் சுப்பண்ண கவுண்டர் அவர்களும், அன்பர்களும் அயராது உழைத்து மாமன்னர்கள் செய்த பணி போலவே மிகச் சிறந்து விளங்கப் புதுப்பித்துள்ளனர். இதில் பங்கு கொண்ட அனைவருக்கும், நினைப்பவர் மனங்கோலாக் கொள்ளும் அம்பலக்கூத்தரது திருவருளால் எல்லா நலமும் உண்டாகுமாறு கைத்தலத் தமரும் கண்ணுநதற் கடவுளைப் போற்றி வாழ்த்துகின்றோம்.

தவத்திரு. வித்துவான். இராமசுவாமி யடிகள்

RASHTRAPATI BHAVAN
NEW DELHI-4.

*June 21, 1967.*

I am glad to know that work on the renovation of the temple of Lord Sangameswara in Bhavani is now complete and the 'Kumbhabishekam' function will take place on the 14th July. I send my best wishes for the success of the function.

ZAKIR HUSSAIN

VICE-PRESIDENT
INDIA
NEW DELHI.

*July 5, 1967.*

My dear Shri Ramaswamy,

I am glad to hear that the 'Kumbabhishekam' of Lord Shri Sangameshwar Temple is being held on July 14th at Bhavani. I know it is one of our ancient Temples with excellent sculptures and no wonder pilgrims from all parts of the country, specially those from the South, throng there to offer obeisance at this legendary shrine as it is considered to be a Dakshina Prayag. I am particularly happy to know that your esteemed father has been taking keen interest in the renovation of this Temple. On this auspicious occasion of the Kumbhabishekam I send my best wishes for the success of the function.

Yours sincerely,

V. V. GIRI.

PRIME MINISTER'S HOUSE

NEW DELHI.

*June 28, 1967.*

Our temples embody the best of our architecture and sculpture. Faith is a great builder, and truth seeks the company of beauty. This is true of every religion. A great temple or mosque or cathedral is a living school for scholars and artists.

Our ancestors have bequeathed to us many temples. We must learn to appreciate their true worth and strive to keep them in good state. I am glad to know of the renovation of the Sri Sangameswara Temple which stands at the confluence of the Kaveri and Bhavani rivers.

I wish success to the dedication ceremony.

INDIRA GANDHI

DEPUTY PRIME MINISTER
INDIA,
NEW DELHI.

*1st July, 1967.*

Temples in India enshrine most of the sacred deities and are therefore a part of our rich heritage. It behoves us therefore that the beauty of these temples should be preserved and their glory maintained.

I am glad to learn that the Renovation Committee of the ancient temple of Lord Sri Sangameswara in Bhavani has done a good job and that the Kumbhabishekam will take place on the 14th July 1967. I send my best wishes on this occasion.

MORARJI DESAI

HOME MINISTER
INDIA.
NEW DELHI,
*June 28, 1967.*

I am glad to know that the renovation work of the ancient temple of Lord Sri Sangameswara in Bhavani has been completed and that the 'Kumbhabhishekam' ceremony would be held soon.

It is a matter of gratification that the people, through their untiring efforts and dedication, have completed the task of giving a new life to this unique landmark of our cultural heritage.

I send my good wishes for the success of the 'Kumbhabhishekam' function.

Y. B. CHAVAN

N. SANJIVA REDDY
Speaker, Lok Sabha

9, MOTILAL NEHRU MARG
NEW DELHI.

*June 27, 1967.*

My dear Sri Ramaswamy,

Thank you for your letter. I am glad that the "Kumbhabishekam" of Lord Sri Sangameswara is scheduled for the 14th July, 1967 after renovation of the temple lasting for some years. It is good that the renovation had become possible through the initiative and efforts of the local people.

I send my best wishes for the success of the function.

N. SANJIVA REDDY

திரு மா. சே. சாரங்கபாணி முதலியார், பி.ஏ. பி. எல்., சென்னை,
அறநிலைய ஆணையர். 22—6—67.

தமிழகத்தின் புகழ்மிக்க சிறந்த பகுதிகளில் ஒன்றாகத் திகழ்வது, கொங்கு நாடு. அதன் கண் சைவ சமய ஆசிரியர்களால் தேவாரப் பாடல் பெற்று விளங்கும் சிறப்புடையன அவிநாசி, திருமுருகன்பூண்டி, திருநணா, திருச்செங்கோடு, திருவெஞ்சமாக்கூடல், திருப்பாண்டிக் கொடுமுடி, கருவூர்த் திருவானிலை என்னும் தலங்கள் ஆகும். இவற்றைக் கொங்கு ஏழு தலங்கள் என்று பெரியோர்கள் சிறப்பித்துக் கூறுவர்.

கொங்கு நாட்டின் தலங்கள் ஏழனுள், திருநணா என்னும் தலம் திருஞான சம்பந்தரின் தேவாரப் பாடல் பெற்ற சிறப்புடையதாகும். கொடிமாடச் செங்குன்றூர் என்னும் திருச்செங்கோட்டினை வணங்கிய பின்னர், திருஞான சம்பந்தர் திருநணாவிற்கு எழுந்தருளிப் பதிகம் பாடி இறைவனை வழிபட்டனர் எனச் சேக்கிழார் தமது பெரிய புராணத்தில் குறிப்பிடுகின்றார். தன்னை வழிபடுவோர்க்கு எத்தகைய தீங்கும் நண்ணாதபடி செய்யும் தலமாதலின், இதற்குத் 'திருநணா' எனப் பெயர் அமைந்தது என்பர். கல்வெட்டுக்கள் இங்குள்ள இறைவனைத் 'திருநண்ணாவுடையார்' எனக் குறிப்பிடுகின்றன. பவானி என இந்நாளில் வழங்கும் இத்தலம், 1300 ஆண்டுகளுக்கு முன்னரே மிகவும் புகழ் பெற்று விளங்கி யிருந்தமை, திருஞான சம்பந்தரின் தேவாரத் திருப்பதிகத்தால் தெளிவுற விளங்குகின்றது.

வடஇந்தியாவில் கங்கை, யமுனை, சரசுவதி என்னும் மூன்று ஆறுகள் கூடும் இடம் 'திரிவேணி சங்கமம்' எனப் புகழ் பெற்றுத் திகழ்கின்றது. அதுபோல, இந்தத் தலமும் காவிரி பவானி, அமுத நதி என்னும் மூன்று ஆறுகள் கூடும் இடத்தில் அமைந்து புகழ் மிக்க புண்ணியத் தலமாகப் பொலிந்து விளங்குகின்றது. அதனால் இங்குள்ள இறைவனுக்குக் 'கூடுதுறை நாதர்' என்றும், 'சங்கமேசுவரர்' என்றும் பெயர் வழங்கும்.

சங்க காலத்திலேயே இந்நாளில் பவானி என வழங்கும் நதியானது புகழ்மிக்கு விளங்கி யிருந்தது. பதிற்றுப்பத்து என்னும் சங்க நூலில்,

"புனல்பாய் மகளிர் ஆட ஒழிந்த
பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்
சாந்துவரு வானி நீரினும்
தீந்தண் சாயலன் மன்ற தானே."

எனவரும் வரிகளில், பெருங்குன்றூர்க் கிழார் என்னும் சங்ககாலப் புலவர், இந்த ஆற்றினை இனிது புகழ்ந்திருத்தல் காணலாம். 'வானி' என்னும் ஆறே இந்நாளில் 'பவானி' என வழங்கப் பெறுகின்றது. ஆற்றின் பெயரே, அதன் கரையில் அமைந்துள்ள ஊருக்கும் அமைந்தது. இத்தலத்தினைப் பவானி என்றும், பவானி கூடல் என்றும் மக்கள் வழங்குவர். கல்வெட்டுக்கள் 'திருவானி கூடல் எனக் குறிப்பிடுகின்றன. சங்கமேசுவரர் என்பதனை 'நட்டாற்றீசர்' என்றும் நூல்கள் குறிப்பிடும்.

இந்தத் தலமானது சங்ககிரி, நாககிரி, மங்கலகிரி, வேதகிரி, பதுமகிரி என்னும் ஐந்து மலைகளுக்கு நடுவில் இருப்பதால், பஞ்சகிரி மத்தியப் பிரதேசம் எனவும் குறிக்கப் பெறும். இங்கே காயத்திரி தீர்த்தம், சாவித்திரி தீர்த்தம், சரசுவதி தீர்த்தம் முதலிய பல தீர்த்தங்கள் உள்ளன. ஆடி தை புரட்டாசி அமாவாசை நாட்களிலும், ஆடிப் பதினெட்டாம் பெருக்கிலும், மாதப் பிறப்பு, ஆண்டுப் பிறப்பு, சங்கராந்தி புண்ணிய காலம், கிரகண காலம் ஆகியவற்றிலும் பெருந்திரளான மக்கள் வந்து கூடிக் காயத்திரி தீர்த்தத்தில் நீராடி வழிபட்டுச் செல்லுகின்றனர். இத்தலத்திற்குப் பதரி என்னும் இலந்தை மரம் தலவிருட்சமாகத் திகழ்கின்றது. ஆதலின் இதனை வடக்கே உள்ள பதரிகாஸ்ரமம் என்னும் புண்ணிய தலத்திற்குச் சமானமானதென்று சான்றோர்கள் கூறுவர்.

பண்டைக்கால முறைப்படி இத்தலத்தில் சைவ வைணவ சமரச ஞான உணர்விற்கு அடையாளமாக, இங்கு ஆதிகேசவப் பெருமாள் சந்நிதியும் அற்புதச் சிற்ப வேலைப்பாடுடன் அமைந்திருத்தல் கண்டுகளிக்கத் தக்கது. மக்களின் நோய்களைத் தீர்ப்பதில் இங்குள்ள சுரகரேசரும் மிக்க அருளாற்றல் வாய்ந்து விளங்குவதாக மக்கள் பெரிதும் நம்புகின்றனர். 'வில்லியம் கேரோ' என்ற ஆங்கில அலுவலர், இங்குள்ள வேதநாயகி என்னும் பண்ணார் மொழி அம்பிகையின் அருளாற்றலை வியந்து, தந்தத்தாற் செய்த பள்ளியறைக் கட்டிலை அளித்திருத்தலும் அறிந்து மகிழத் தக்கது.

இச்சிறந்த புனிதப் பெருங் கோயிலைப் புதுப்பித்து, நல்ல கலைவல்ல சிற்பிகளைக் கொண்டு, விமானம் கருவறை, இடைநிலை முன் மண்டபம், திருச்சுற்றுலை முதலிய பகுதிகளைக் கருங்கற் பெரும் பணியாகச் சிறந்த சிற்ப வேலைப் பாடுகளுடன், பல நூறுயிரம் வெண் பொற்காசுகள் செலவிட்டுத் திருப்பணி செய்து நிறைவேற்றி யிருப்பது அளவிலா மகிழ்ச்சியைத் தரும் செய்தியாகும்.

ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இம்மடிகட்டி முதலியார் குடும்பத்தினரான சிற்றரசர்கள் இக்கோயிலுக்குத் திருப்பணி செய்து, புகழ் பெற்றனர். அம்முறையில் இந்நாளில் திரு கே. கே. சுப்பண்ண கவுண்டர், திரு எம். ஏ. ஆய்க் கவுண்டர், திரு டி. கே. இராமசாமிக் கவுண்டர் முதலிய பெருமக்கள் பலரும் சேர்ந்து முன்னின்று முயன்று, இச்சிறந்த திருப்பணியை நிறைவேற்றிப் புகழும் புண்ணியமும் ஒருங்கே பெற்றுள்ளனர். இப்பெருமக்களின் தொண்டை வழி வழியாக வரும் தமிழகச் சந்ததியினர் அனைவரும் போற்றிப் பாராட்டுவர் என்பதில் ஐயமில்லை.

பண்ணார்மொழி அம்மை பாகம் கொண்ட திருநண்ணாவுடைய சிவபெருமான் திருவருளால், திருக்குட முழுக்கு விழா மிக்கச் சிறப்புடன் நிகழவும், மக்கள் எல்லாரும் அதனைக் கண்டு களித்து அன்பும் அமைதியும் பெற்று இன்புற்று இனிது வாழவும், திருவருளை மனமொழி மெய்களால் துதித்து வழிபடுவோமாக!

மா. சே. சாரங்கபாணி

* * *

அ. சிதம்பரம், பி. ஏ., பி. எல்., — சென்னை-34.
துணை ஆணையாளர், — 27—6—67.
இந்துசமய அறநிலைய ஆட்சித்துறை,

தட்சிணத் திரிவேணி சங்கமம் என்றும் தென்பதரி என்றும் கொண்டாடப் பட்டு வரும் இந்தத் ஸ்தலத்தில் சங்கமேஸ்வரர் ஆலயம் ஆயிரக்கணக்கான மக்களின் ஒத்துழைப்பினலும் உயர்திரு கே. கே. சுப்பண்ண கவுண்டர் அவர்களுடையவும், அவர்களுடைய சகாக்களின் விடாமுயற்சியினலும் ஒரு சிறந்த, கலைப்பணி நிறைந்த, தெய்வ மணங் கமழ்கின்ற, மனத்தைக் கவர்கின்ற புதிதான தேவாலயமாக உருவெடுத்திருக்கின்றது. தமிழகத்திலேயே பெரும் பணியின் மகத்தான சின்னமாகச் சிறப்பாக அமைந்திருக்கிறது. இந்தத் திருப் பணியில் ஏராளமான அன்பர்கள் தம் பக்திப் பெருக்கில் ஈடுபட்டு உதவி புரிந்திருக்கிருர்கள். சுமார் 15 லட்சம் ரூபாய்ச் செலவில் ஆக்கப்பட்டுள்ள இந்தக் கலாலயத்தில் மக்கள் தலைமுறை தலைமுறையாக வழிபட்டு நலனும் பலனும் அடைவார்கள் என்பதில் ஐயமில்லை.

அ. சிதம்பரம்

ஏ. வேங்கடாசலம், B.Sc., B.L.,
*அறநிலைய ஆணையரின் நேர் உதவியர்.*

சென்னை
15—6—1967

பவானி ஸ்ரீ சங்கமேசுவரர் ஆலயம், மிகவும் பழமையும் பெருமையும் வாய்ந்தது. கொங்கு நாட்டில் தேவாரப் பாடல் பெற்று விளங்கும் புகழ் மிக்க ஏழு தலங்களில் ஒன்று. சைவ சமய ஆசிரியர்கள் நால்வரில் ஒருவராகிய திருஞான சம்பந்தர் இத்தலத்திற்குத் திருப்பதிகம் அருளிச் செய்துள்ளார். அதனால், இந்த ஆலயமானது 1300 ஆண்டுகளுக்கு முன்னரே மிகவும் புகழ் பெற்றிருந்தது என்று தெரிகின்றது.

வட இந்தியாவில் கங்கை, யமுனை, சரசுவதி என்னும் மூன்று நதிகள் கூடித் ‘திரிவேணி சங்கமம்’ எனப் பெயர் பெற்றிருப்பது போல், இந்தத் தலத்தில் காவிரி, பவானி, அமுதநதி என்னும் மூன்று ஆறுகள் சங்கமம் ஆகின்றன. அதனாலேயே இங்குள்ள சுவாமிக்குச் ‘சங்கமேசுவரர்’ என்று பெயர் ஏற்பட்டது. இங்குள்ள அம்பிகையை வேதநாயகி அம்பாள் என்றும், பண்ணார் மொழி நாயகி என்றும் கூறுவர். வில்லியம் கேரோ (William Garrow) என்ற வெள்ளைக்காரர் ஆகிய கலெக்டர் அம்பிகையின் அருட்டிறனை மிகவும் வியந்து போற்றித் தந்தத்தால் செய்த அழகிய ஊஞ்சலை அளித்திருப்பது (1804) மிகவும் பிரசித்தமான செய்தியாகும்.

இந்தச் சிறந்த ஆலயத்திற்கு மிகவும் பெரிய அளவில், பல லட்ச ரூபாய்ச் செலவில் திருப்பணி செய்து நிறைவேறியிருப்பது மிக்க மகிழ்ச்சியைத் தருகிறது. இந்தத் திருப்பணிக்காக முன்னின்று பெரிதும் உழைத்த திரு கே. கே. சுப்பண்ண கவுண்டர், திரு எம். ஏ. ஆய்க் கவுண்டர், திரு டி. கே. இராமசாமிக் கவுண்டர் முதலிய பெருமக்கள் எல்லாருடைய தொண்டும் மிகவும் பாராட்டி மகிழத்தக்கது.

ஸ்ரீ வேதநாயகி அம்பாள் சமேத பவானி ஸ்ரீ சங்கமேசுவரர் ஆலய மகா கும்பாபிஷேகம் மிகவும் சிறப்புற நடைபெறவும், உலகில் அமைதியும் இன்பமும் நிலவி, மக்கள் அனைவரும் சுகமுற்று வாழவும் திருவருளை வணங்கித் துதிப்போமாக!

ஏ. வேங்கடாசலம்

T. P. MEENAKSHISUNDARAM,
*Vice-Chancellor.*

Madurai University,
University Building,
Madurai-2.

27th June, 1967.

திருநணா என்ற பழைய திருக்கோயில் இப்போது பவானி என்று அழைக்கப்படுகிறது. பவானியும் காவிரியும் கூடுமிடத்தே இருக்கின்ற கூடலாக இது அழகு தருகிறது. சைவம் வாழ்ந்த மூவர் முதலிகளும் தேவாரம் பாடி இதனை மக்கள் உள்ளத்தே சிறக்கச் செய்துள்ளார்கள். இது பழைய கோவில். இதனை ஒவ்வொரு தலைமுறையும் காத்து வருதல் வேண்டும். இந்தத் தலைமுறையினர் இந்தக் கடமையை மறவாமல் கோயிலைப் புதுப்பித்து அண்மையில் குடமுழுக்குத் திருவிழாக் கொண்டாடித் திறக்க இருக்கின்றனர். இக்கோயிலின் பெருமையை எல்லாம் பலர் மறந்து விட்டனர். அவற்றையெல் லாம் விளக்கிப் பொது மக்களுக்கு அறிவுறுத்துகின்ற வழியில் பெருமலரும் வெளியிடப்போவது கேட்டு மகிழ்ச்சியடைகிறேன். குடமுழுக்குத் திருவிழா, மக்கள் மனத்தில் ஆண்டவனைக் கோயில் கொள்ளச் செய்யும் என்பதில் ஐய மில்லை. இக்கோயிலின் அடிப்படைக் கொள்கையை மக்களுக்கு விளக்குகின்ற வகையில் விழா மலர் பெருந்தொண்டாற்றும் என்று எண்ணி அதனை வருக வருக என்று எதிர்கொண்டழைத்து இத்தொண்டில் ஈடுபட்டுள்ள அன்பருக் கெல்லாம் என் வாழ்த்தையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன். அன்பர் திரு மகாலிங்கம் பல நல்ல தொண்டில் ஈடுபடுவதுபோல இதிலும் ஈடுபட்டு வெற்றி கண்டது குறித்து என்னுடைய மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன்,

தெ. பொ. மீனாட்சிசுந்தரன்.

## வருவான் மயிலில் ஏறியே

திருவாட்டி சௌந்தரா கைலாசம்

சொல்லுக் கடங்கிடான் சோர்வுறும் நெஞ்செனும்
கல்லைப் பிசைந்து கனியெனச் செய்வான்,
சொத்தினுள் சொத்தவன், சுகத்திற் சுகமவன்,
வித்தினுள் வித்தவன், வேழ முகத்தனின்
தம்பியாய் வந்தவன், தன்னையே சரணென
நம்பிவந் தவரை நாடியே அணைவான்
நெஞ்சினிற் புகுந்து நிலைத்திருந் திடுவான்
கொஞ்சுவான், கொஞ்சிக் குலவுவான், தீய
எண்ண மெழுந்தால் இதய வீட்டை
நண்ணிடேன் என்பான், நல்லவே எண்ணத்
தூண்டுவான், நீங்காத் துணையா யிருப்பான்.
ஈண்டொரு துயரம் எதிர்ப் படுமாகில்
வேலொளி காட்டி விலக்கி அருள்வான்,
"ஞாலந் தனிலோர் ஞான பண்டிதா.
முருகா முருகா முருகா"-என்றே
உருகுவோர் நெஞ்சில் ஒளி மயமாகி
அருள்வழித் தொழுகும் குறுநகை புரிவான்,
கருதியே உருகுவான் கண்ணை நீர்க் காடாய்
மாற்றுவான், மகிழ்வான், மாயை
மாற்றவே வருவான் மயிலில் ஏறியே.

# இனிக்கும் திருநணு!

'ஜோதி'

ஆங்கிலனும் மனமுருகித் தினந்தோறும் தரிசித்தே
அரிய கீர்த்தி
ஓங்கியநல் வேதநா யகிபருளால் தானிருந்த
உறையு ளின்று
தீங்குவரும் முன்வெளிவந் துயிர்காக்கப் பெற்றுன் இத்
தெய்வச் செய்கை
ஏங்குபவர் நன்கறிந்து பக்திசெய்தால் திருநணு
இனிக்கும் அன்றே? (1)

வானிநதி காவேரி அமுதநதி எனும் மூன்றும்
வளஞ்சேர்ந் தோங்கி
ஆனியறக் கலக்கின்ற திருநணுச் சங்கமத்தை
அடைந்து தேசார்
மாநறைப்பூங் குழல்வேத நாயகியைச் சங்கமஞ்சேர்
வள்ளல் தன்னை
மேல்நவிலும் துதிசெய்து பூசித்தார் வினையாவும்
வீழும் திண்ணம். (2)

வடநாட்டிற் கங்கையொடு யமுனையுபர் வாணியிவை
மாண்புற் றோங்கித்
திடநாட்டும் திரிவேணி சங்கமமாப் புகழேறும்
சீரே போல
விடநாட்டும் கண்டத்தான் திருநணுத் தலம்வானி
வியனர் பொன்னி
குடநாட்டும் அமுதநதி கலக்கின்ற தமிழ்நாட்டுக்
கூடல் ஆமே. (3)

மூவினையும் எரிந்தேகும் முத்தாபம் ஒழிந்துமிர்க்கும்
மூவேழ் சுற்றம்
தேவியல்சேர் தருமநளால் நன்மைபெறும் முத்தமிழும்
சிறக்கப் பெற்று
நாவியலும் கவிவாணர் ஆய்விடலாம் திருநணு
நம்பன் பாதம்
பூவியல அருச்சித்துக் கீழ்விழுந்து வணங்குகின்ற
பொற்பி னோர்க்கே. (4)



திருப்பணி இரட்டையர் :
திருப்பணிக் குழுவின் தலைவர்
திரு கே. கே. சுப்பண்ண கவுண்டர்

*

செயலாளர் :
திரு எம். ஏ. ஆய்க் கவுண்டர்
(நிற்பவர்)



மலர் வெளியீட்டுக் குழுத் தலைவர்
திரு நா. மகாலிங்கம், பி.எஸ்ஸி., எம்.ஐ.இ.



திருப்பணிக் குழுத் தலைவரும் அங்கத்தினர்களும்

# பக்தி

## குகஸ்ரீ கிருபானந்தவாரியார்

யுகங்கள் நான்கு: கிருத யுகம், திரேதாயுகம், துவாபர யுகம், கலியுகம் என்பன.

இருதயுகத்தில் ஞானத்தினுல் முத்தி.
திரேதாயுகத்தில் தானத்தினுல் முத்தி.
துவாபர யுகத்தில் யாகத்தினுல் முத்தி.
கலியுகத்தில் பக்தியினுல் முத்தி.

"ஆனபய பக்தி வழிபாடு பெறுமுத்தி
அதுவாக நிகழ் பக்தஜன வாரக்காரனும்"

என்பது அருணகிரிநாதருடைய திருவாக்கு.

பக்தி என்பது வடமொழி. அன்பு என்பது தென்மொழி. கடவுள் பக்தி என்ற வலையில் தான் அகப்படுவார்.

"பக்தி வலையில் படுவோன் காண்க."
(திருவாசகம்)

"அன்பெனும் பிடியுள் அகப்படு மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே!
அன்பெனும் வலைக்குள் படுபரம் பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே
அன்பெனும் கடத்துள் அடங்கிடுங் கடலே
அன்பெனும் உயிர்ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்தபே ரொளியே
அன்புரு வாம்பர சிவமே."

அன்பு இல்லாத ஒருவன் மனிதன் ஆக மாட்டான். திருவள்ளுவர் அன்பிலாத ஒரு வனைப் பிணம் என்றுகூடச் சொல்ல விரும்ப வில்லை. பிணம் பலருக்குப் பணந் தரச் செய்து உதவுகின்றது. ஆதலால் அன்பிலாத ஒரு வனை என்புதோல் போர்த்த உடம்பு என் கின்ருர்.

"அன்பின் வழிய துயிர்நிலை அன்பிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு."

இனி, பக்திக்குச் செல்வம் குலம் இடம் ஆகிய இத்தகைய தடையில்லை.

தண்ணீர்ப் பந்தல் வைக்க வேண்டுமானுல் செல்வம் வேண்டும். செல்வம் இன்றித் தொடங்கினுல் இரண்டு நாள்கூட அத் தருமத்தை நடத்த முடியாது.

பக்தி பரம தரித்திரர்களும் புரியலாம். மிக்க வறியவராகிய குசேல முனிவர் பக்தி செய்து திருவருள் பெற்றுர். தண்ணீர்ப் பந்தல் அமைக்கக் காலம் வேண்டும்.

ஐப்பசி மாதம் அடைமழை பொழியும் போது ஆற்றோரம் தண்ணீர்ப் பந்தல் வைத்து, "ஐயா! நல்ல மோர் பருகுங்கள்" என்ருல், எவன் பருகுவான்? "அடே மூடனே! உனக்கு அறிவில்லையா? இந்த மழையிலா மோர் குடிப் பது?" என்பான்.

ஆதலால் தண்ணீர்ப் பந்தல் கோடைக் காலத்தில் வைக்கவேண்டும். எனவே தண்ணீர்ப் பந்தல் வைக்கக் காலம் பார்க்கவேண்டும்.

பக்தி செய்வதற்குக் காலம் தடைபுரியாது. மழைக் காலம், வெயிற் காலம், பனிக் காலம், இரவு, பகல், காலை, மாலை எந்நேரத்திலும் பக்தி செய்யலாம்.

"இருக்கினும் நிற்கும் போதும்
இரவுகண் துயிலும் போதும்
பொருக்கென நடக்கும்போதும்
பொருந்தியூண் துய்க்கும் போதும்
முருக்கிதழ்க் கனிவா யாரை
முயங்கிநெஞ் சழியும் போதும்
திருக்களா வுடைய நம்பா
சிந்தையுன் பால தாமே."

மேலும் தண்ணீர்ப் பந்தல் இடம் பார்த்து வைக்கவேண்டும். ஒரு குன்றின்மீது வைத்து விட்டுச் சாலையில் ஒருவன் நின்று, வெயிலில் நடந்து களைத்துப்போன ஒருவனைப் பார்த்து "ஐயா! நீர்மோர் பானகம் வேண்டுமா?" என்ருன்.

பிரயாணி, "ஆம்! நாவறட்சி பொறுக்க முடியவில்லை. நீர் மோர் பானகம் எங்கே? கொஞ்சம் கொடுத்து என் உயிரைக் காத்து உதவும்" என்ருன்.

"ஐயா! அதோ அந்த மலைமீது வைத்துள்ளேன் . வாரும்" என்ருன்.

"அட பாவி! பத்துப்பேர் நடக்கின்ற சாலையில் வைக்கக் கூடாதா? ஐயோ! அந்த மலைமீது ஏறுவதற்குள் என் உயிர் பிரிந்து விடுமே! நீர்மோரே வேண்டாம்" என்பான்.

ஆனபடியால் இடம் நோக்கி அமைக்க வேண்டும் தண்ணீர்ப் பந்தல்.

இங்கே பக்திக்கு அந்தத் தடையும் இல்லை. எந்த இடத்திலும் பக்தி செய்யலாம். பள்ளம், மேடு, காடு, வீடு எங்கிருந்தும் பக்தி செய்யலாம்.

பக்தி யில்லாமல் வெறும் துறவு பூண்டு காட்டிலிருப்பினும், காற்றைப் பருகினும், கந்தையுடுத்து ஓட்டை யெடுப்பினும் உய்வு பெற மாட்டார்கள்.

பக்தி யுடையவர்கள் தம் தருமபத்தினியுடன் வீட்டிலிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டை அடைவார்கள்.

பட்டினத்துச் சுவாமிகள் கூறுகின்ருர் :

"காடே திரிந்தென்ன? காற்றே
புசித்தென்ன? கந்தைசுற்றி
ஓடே எடுத்தென்ன? உள்ளன்
பிலாதவர் ஓங்குவிண்ணேர்
நாடே யிடைமரு தீசர்க்கு
மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான
வீட்டின்பம் மேவுவரே."

பக்திக்குக் குலம் முதலிய தடையும் இல்லை. உயர் குலத்தினர்தாம் பக்தி செய்யவேண்டும்; இழி குலத்தார் பக்தி செய்தல் கூடாது என்ற நியதியில்லை.

"இறைவனிடம் பக்தியில்லாதவர் பெருங் குலத்திற் பிறந்து பெருஞ் செல்வராகி எனக்கு மண்ணுலக வாழ்வும் விண்ணுல கரசுந் தந்து உதவி புரியினும் அவரை நான் ஒரு பொருளாக மதிக்கமாட்டேன்; சிவபெருமானுடைய திருவடியில் அன்பு வைத்தவர் அங்கம் அழுகிய தொழுநோயராயினும் பசுவை யறுத்துண்ணும் புலையர் குலத்தில் பிறந்தாரேனும் அவர்கள் எமது வழிபடு கடவுளர் ஆவார்" என்கிருர் திருநாவுக்கரசு சுவாமிகள்.

"சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போ
மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லாராகில்
அங்கமெலாம் குறைந் தழுகி தொழு
நோயராய்
ஆவுதரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவு
ளாரே."

அன்பைப் பெற்றுவிட்டால் அதுவே எல்லாவற்றையும் பெற்றுவிட்டதாகும்.

அன்பை யுடையவர் என்பையும் பிறருக்கு வழங்குவார்கள்.

அன்பு என்ற பக்தி, சித்தியையும் முக்தியையும் தரும். பரமனும் பக்தருக்கு வாய்த்தவராகத் திகழ்கின்ருன்.

"பக்தி சித்தி காட்டி அத்தர் சித்தமீட்ட
பத்தருக்கு வாய்த்த பெருமானே."
(திருப்புகழ்)

பக்தியினுல் விளைந்த விளைவுகளைப் பற்றி ஆதிசங்கரர் வியந்து கூறுகின்ருர்.

1. மார்க்கத்தில் தேய்ந்த பழஞ் செருப்பு, சிவபெருமானுடைய புருவ நடுவில் சென்றது.
2. கொப்புளித்து உமிழ்ந்த நீர் அப் பரமனுக்குச் சிறந்த அபிஷேகமாகியது.
3. சிறிது கடித்து எச்சில் செய்த புலால் துண்டு உயர்ந்த உணவாக ஆயிற்று.
4. வேடன் - பக்த சிரோன்மணியாக ஆனுன். ஆகவே பக்தி எதைத்தான் செய்யாது? எல்லா உயர்வையும் தரும்.

"மார்க்கார்த்தித பாதுகா
பசுபதே ரங்கஸ்ய கூர்ச்சாயத
கண்டூஷாம்பு நிஷேசனம் புரரிபோர்
திவ்யாபிஷேகாயதே

இஞ்சித் பக்ஷித மாம்ஸ
சேஷ கபளம் நவ்யாப ஹாராயதே
பக்தி கிம் நகரோத்யஹோ
வனசரோ பக்தாவ தச்சாயதே.''
(*சிவானந்த லஹரி*)

பக்தியுடன் பகவானுடைய திருநாமங்களை ஒருமுறை கூறினும் வினைகள் வெந்து நீறுகும். சகல நலன்களும் உண்டாகும்.

நாரதர் ஒரு சமயம் வைகுண்டம் சென்ருர். விஷ்ணுமூர்த்தியை வணங்கினுர். "சுவாமி! உலகிலே உள்ள மனிதர்கட்கு உன் திருவடி யடைய எளிய வழி யாது?'' என்று வினுவினுர்.

திருமால், "நாரதா! நம்மையடைவதற்குரிய நெறிகளில் மிக எளிமையானது பக்தி நெறி யாகும்'' என்ருர்.

நாரதர், "ஐயனே! அந்தப் பக்தி நெறி நின்ற பக்தர்களில் தலைசிறந்த பக்தன் யாவன்?'' என்று வினவினுர். நாரதருடைய மனத்தில் தம்மைக் கூறுவார் என்ற நினைவு இருந்தது. தாம் பெரிய பக்தர் என்ற ஒரு செருக்கும் சிறிது இருந்தது. எல்லாம் உணர்ந்த பகவானுக்கு இது தெரியுமல்லவா?

"நாரதா, பூவுலகில் குப்பம் என்ற சிற்றூரிலே பொன்னன் என்ற ஒரு குடியானவன் இருக்கிருன். அவன்தான் எனது பெரிய பக்தன்'' என்ருர்.

இதனைக் கேட்ட நாரதருக்குப் பெரிய வியப்பு உண்டாயிற்று. நாராயணரைத் தொழுதார். "சுவாமி! அடியேன் உமது திருநாமத்தை இடையருது பாராயணம் புரிபவன். என்னைக் கூருமல் எங்கோ இனந்தெரியாத ஒருவனைப் பெரிய பக்தன் என்கிறீரே; இது பொருந்துமா?'' என்று கேட்டார்.

"நாரதா, நீ சென்று அவனுடைய பக்தியை நேரில் அறிந்துகொள்'' என்ருர் நாராயணர்.

நாரதர் குப்பம் போனுர். விடியற்காலையிலிருந்தே பொன்னனைக் கவனித்தார். அவன் ஏர்க்காலை எடுத்துத் தோள்மீது வைக்கும்போதே, "அரி நாராயணு'' என்ருன். பின்னர் உழுவதும், நாற்று நடுவதும், களை பறிப்பதுமாகப் பல அலுவல்களில் ஈடுபட்டான். மாலையில் வீடு வந்து ஏர்க்காலை வைக்கும்போது, "அரி நாராயணு'' என்ருன். உண்டு உறங்கினுன்.

நாரதருக்கு அடக்க முடியாத சீற்றம். ஓடினுர். வைகுண்டவாசனைக் கண்டார். "பெருமானே! நான் லட்சாதி லட்சம் முறை நாராயண மந்திரம் கூறுவேன். அந்தப் பொன்னன் ஏரை எடுக்கும்போது ஒரு முறை, அதனைக் கீழே வைக்கும்போது ஒரு முறை நாராயணு என்று, ஆக இரு முறைதான் கூறினுன். தேவரீர் அவனைப் பெரிய பக்தன் என்றீரே; இது என்ன முறை?'' என்று வினவினுர். அவர் குரலில் பதற்றம் இருந்தது.

"நாரதா, சற்று அவசரப்படாதே. அந்தப் பொன்னனுக்கு அதிக வேலையா?''

"ஆம். சுவாமி!''

"அத்தனை அலுவல்களுக்கு இடையே என்னை இருமுறை மறவாமல் கூறினுனு?''

"ஆம்! இருமுறை மட்டும் கூறினுன்.''

"நாரதா, இன்று உனக்கு என்ன வேலை?''

"பொன்னன் எத்தனை முறை தங்கள் திருநாமம் கூறுகின்ருன் என்பதைக் கவனித்துக் கொண்டிருந்தேன்.''

"நாரதா, இன்று நீ எத்தனை முறை என் நாமத்தினை நவின்ருய்?''

"ஒரு முறைகூடக் கூறவில்லை.''

"ஓ! ஒரு முறையும் கூறவில்லையா? ஏன்?''

"அவனையே உற்றுக் கவனித்துக்கொண்டிருந்துவிட்டேன்.''

"நீ ஒரு வேலையை மேற்கொண்டு அடியுடன் என்னை மறந்துவிட்டனையே! அவன் அத்தனை வேலைகளுக்கும் இடையே என்னை மறவாது கூறினுனே. அவன் பெரிய பக்தன் தானே?'' என்று விஷ்ணுமூர்த்தி விளக்கிக் கூறினுர்.

நாரதர் தலை குனிந்து நின்ருர். இதனுல் குடும்ப விவகாரங்களில் ஈடுபட்டவர்கள் இறைவனை உள்ளன்புடன் நினைத்து, அவனது திருப்பேரைக் காதலாகிக் கசிந்து கூறி அருள் நூல்களைப் பாராயணம் புரியவேண்டும். அந்த அன்பையும் ஆண்டவனிடம் வரமாக யாசித்துப் பெறவேண்டும்.





1. அம்பிகை —
திருவுலாப் படிமம்
2. துரைமகன் அளித்த
தந்தத் தொட்டில்
3. துரைமகன் சுவர்வழி
யாகக் கண்ட வழிகள்
4. தல விருட்சம் —
இலந்தை













1. ஆடும்பெருமானும்
அம்பிகைப் பெண்மானும்

2. புதிய விமானப் பொற்புறு வடிவம்

3. மண்டப மங்கைக்குக்
கல்வளையக் காதணிகள் !



# பவானித் திருப்பணி

கே. கே. சுப்பண்ண கவுண்டர் (*திருப்பணிக் குழுத் தலைவர்*).

பவானியைக் காவிரியாறும் வானியாறும் கூடுமிடத்தில் (சங்கமத்தில்) ஸ்ரீசங்கமேஸ்வர சுவாமி ஆலயம் அமைந்திருக்கிறது. இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் வந்து இங்கு எழுந்தருளியிருக்கும் திருநண்ணுவுடையாரை வணங்கித் திருப்பதிகமும் பாடியுள்ளார். ஸ்ரீ அருணகிரிநாதர் இங்குள்ள முருகப் பெருமானைப் புகழ்ந்திருக்கிறார்.

இக்கோவில் மிகவும் பழமையானது. கோவிலிலுள்ள உத்தரங்கள் ஒடிந்தும் சுவர்களில் விரிசல் ஏற்பட்டும் மிகவும் சிதிலமான நிலையில் இருந்தது. எனவே இக்கோவிலைப் பழுது பார்க்கச் சென்னை அரசாங்கம் 1956 ஆம் ஆண்டில் பத்தாயிர ரூபாய் மானியம் அளிக்க முன்வந்தது. அத்தொகையைக் கொண்டு திருப்பணி செய்யத் திருப்பணிக் குழு ஒன்று அமைக்க ஏற்பாடு ஆயிற்று.

அவ்வமயம் நான் கோவை ஜில்லா இந்து மத அறநிலைய வட்டாரக் குழுவில் ஓர் அங்கத்தினனாக இருந்தேன். அது சமயம் கோவையில் இந்து மத அறநிலைய உதவி ஆணையாளராக இருந்த திரு கே. வி. குமாரன் நாயர் என்னையும் அக்கூட்டத்திற்கு அழைத்தார். நானும் நண்பர் திரு எம். ஏ. ஆய்க் கவுண்டரும் பவானிக்குப் போனோம்.

1956, ஜனவரி மாதம் 4ந் தேதி மாலை 4 மணிக்குக் கூடிய அன்பர்களின் கூட்டத்தில் திருப்பணிக் குழு அமைக்கப்பட்டது. அரசாங்க மான்யத்தொகை ருபாய் பத்தாயிரம் போக ரூ 15,000 வசூல் செய்து மொத்தம் ரூ. 25,000 செலவில் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் செய்வது எனத் தீர்மானிக்கப்பட்டது. நிருத்த மண்டபத்தில் நாலைந்து உத்தரங்கள் ஒடிந்து போயிருந்தன. அவற்றை எடுத்து விட்டுப் புதிய உத்தரங்க்ள் போட்டுச் சீர்திருத்தம் செய்ய ஏற்பாடு ஆயிற்று. இந்த வேலையைக் கவனிக்க நாட்டரசன் கோட்டை திரு ராஜரத்தின ஸ்தபதியாரை வரவழைத்தோம். அவர் வந்து பார்த்து நிருத்த மண்டபச் சுவர்கள் விரிந்து விட்டதை காண்பித்தார். எனவே முழுவதும் பிரித்துப் பழைய கற்களையே ஒரு முறை கொத்தி அவற்றைக் கொண்டே அம்மண்டபம் கட்டுவது எனத் தீர்மானித்தோம். அந்த வேலைக்கு ரூ.32,500 செலவு செய்யத் திட்டமிடப்பட்டது. கட்டிடத்தை இடித்து பூமி மட்டம் கட்டி பூமிக்குமேல் பழைய கற்களைக்கொண்டு இரண்டு வரிகள் கட்டப்பட்டன. பழைய கற்கள் மிகவும் நீண்டகாலமாகி விட்டபடியால், அதன் கெட்டித்தன்மை குறைந்து பொரிந்து போயிருந்தன. ஆதலால் புதிய கற்களைக் கொண்டு கட்டுவதென முடிவு செய்து மேலும் நான்கு வரிகள் கட்டி முடித்தோம். இச்சமயம் கோவிலுக்கு வரும் பல அன்பர்கள் கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், சுற்றுப் பத்தி எல்லாமே பழுதாகியிருப்பதால் முழுவதும் பிரித்துக் கட்டினால் நலமென அபிப்பிராயப்பட்டார்கள். அன்பர்களின் கருத்துக்கிசைய கோவில் முழுவதும் பிரித்துப் பழைய கற்களை ஒரு முறை செதுக்கி அவற்றைக் கொண்டே கட்டுவதென முடிவுசெய்யப் பட்டு ஐந்து லக்ஷம் ரூபாய்க்குத் திட்டம் வகுக்கப்பட்டது.

அஸ்திவாரம் முழுவதும் போட்டுப் பூமி மட்டம் வந்த பிறகு இக்கட்டிடமும் புதுக் கற்களைக் கொண்டே கட்டுவதென முடிவு செய்து, பின் ரூ10,30,400 ரூபாய்க்குத் திட்டமிடப்பட்டது. ஆண்டுதோறும் விலைவாசிகள் ஏறிக்கொண்டே வருவதால் வேலை செய்வோர் கூலியும் ஏறிக்கொண்டே வந்தது. இதன் விளைவாகச் செலவுமதிப்பு ரூ. 15,50,000 ஆக மாற்றியமைக்கப்பட்டது.

"அவனன்றி ஓரணுவும் அசையாது" என்ற தாயுமானவர் வாக்கைப் படித்துத் தெரிந்து கொண்டிருக்கிறோம். ஆனால் திருநண்ணுவுடையார் ஆலயத் திருப்பணியில் ஈடுபட்ட நாங்கள் அதை அநுபவத்தாலும் அறிந்தோம். திருப்பணிக்குச் சென்னை மாகாணம் முழுவதும்

வசூல் செய்திருக்கிறோம். எங்களுக்கு அறிமுக மில்லாத பல அன்பர்களை எப்படி அணுகுவது என்று நாங்கள் எண்ணும்போது எதிர்பாராத வகையில் அவர்கள் எங்களுக்கு அறிமுக மாவார்கள். பல அன்பர்களைப்பற்றி அவர்கள் மிகவும் குறைவாகக் கொடுப்பார்கள் என்று நண்பர்கள் சொல்வார்கள். நாங்களும் குறைந்த தொகையை எதிர்பார்த்துப் போவோம். ஆனால் எதிர்பார்த்ததற்கு மேலாக அவர்கள் வாரி வழங்கி விடுவார்கள்.

நல்ல வசதி படைத்தவர்கள் கூடக் கையில் நிறையப் பணம் வைத்துக் கொண்டு விடு கட்டவோ வேறு தொழில்கள் செய்யவோ ஆரம்பித்தாலும் பல காரணங்களால் இடை யில் வேலை சில சமயங்களில் நின்றுவிடுவ துண்டு. ஆனால் ஸ்ரீசங்கமேஸ்வர சுவாமி ஆலயத் திருப்பணி ஆரம்பித்த நாளிலிருந்து சென்ற 11½ வருட காலமும் எக்காரணத்தைக் கொண்டும் ஒரு நாளும் வேலை தடைப்படா மல் நடந்து கும்பாபிஷேகமும் நடை பெருகிறது. சில சமயங்களில் பணத் தட்டுப் பாடு வரும். ஆனால் எப்படியும் வேலை தொடர்ந்து நடந்துவிடும்.

இத்திருப்பணிக்கு நன்கொடை அளித்தவர் களில் பெரும்பாலோர் அவர்கள் வாழ்க்கையில் அளித்த நன்கொடையில் இந்தக் கோவிலுக்கு அளித்த தொகைதான் அதிகம்.

சில அன்பர்கள் நாங்கள் கேட்காமலேயே தாங்களாகவே திருப்பணியை வந்து நேரில் பார்த்துவிட்டு திருப்பணி அலுவலகத்திலேயே ஆயிரக்கணக்காகக் கொடுத்திருக்கிறார்கள்.

மேலே குறிப்பிட்டவற்றிற்குச் சில உதார ணங்கள் கொடுக்கவிரும்புகிறேன்: நானும் திரு ஆய்க் கவுண்டரும் திரு நா. மகாலிங்கம் அவர் களிடம் ரு 10,000 நன்கொடை வாங்கவேண் டும் என நினைத்துப் போனோம். அவரிடம் வசூல் புத்தகத்தை நீட்டினோம். அவர் அதை வாங்கி ரு 5,000க்குக் கையெழுத்துச் செய்து என்னிடம் கொடுத்தார். நான் திரு ஆய்க் கவுண்டரிடம் காட்டினேன். நாங்கள் எதிர் பார்த்த தொகையில் குறைந்து விட்டதைப் பார்த்து அவர் புன்முறுவல் செய்தார். என்ன சிரிக்கிறீர்கள் என்று திரு மகாலிங்கம் கேட்டார். தொகை குறைந்துவிட்டது என்று சொன் னேன். புத்தகத்தை வாங்கி ஐயாயிரத்துக்கு முன்னால் ஒன்று போட்டுப் பதினைந்தாயிரம் ஆக்கிக் கொடுத்தார்.

கோவையில் திருமதி அன்னபூரணியம்மா ளிடம் வசூலுக்கு எங்களைத் திரு வெற்றி வேல் முதலியார் அழைத்துச் சென்றார். நாங் கள் ஆயிரம் ரூபாய் எதிர்பார்த்துப் போனோம். திருமதி அன்னபூரணி அம்மாளைப் பவானிக்கு வந்து திருப்பணியை நேரில் பார்த்துவிட்டு நன்கொடை அளிக்கும்படி கேட்டு வந்துவிட் டோம். சில நாட்கள் கழித்துத் திரு வெற்றி வேல் முதலியார் அவர்களைப் பார்த்தோம். திருமதி அன்னபூரணியம்மாள் பவானிக்குச் சென்று வந்துவிட்டார்கள் என்றும் நாம் சென்று பணம் வாங்கிக் கொள்ளலாம் என்றும் சொன்னார்கள். எவ்வளவு கொடுப்பார்கள் என்று திரு ஆய்க்கவுண்டர் கேட்டார். ஆயிரம் ரூபாய்கள் கொடுப்பார்கள் என்று திரு வெற்றிவேல் முதலியார் சொன்னார். இரண்டா யிரமாகக் கொடுக்கச் சொல்லுங்கள் என்று திரு ஆய்க்கவுண்டர் சொன்னார். திரு வெற்றிவேல் முதலியார் பார்க்கலாம் என்று சொல்லிவிட்டுக் கூட்டிச் சென்றார். வீட்டிற்குள் சென்று திருமதி அன்னபூரணி அம்மாளிடம் பேசிவிட்டு வந்தார். அந்த அம்மாள் எங்களிடம் வந்து ரூ. 3000 கொடுப்ப தாய்ச் சொன்னார்கள். ஒரு விநாடி தாமதித்து, நீங்கள் ரூ. 5000 கொடுத்தால் நன்றாக இருக் கும் என்று நான் சொன்னேன். உடனே அவர் கள் ரூ. 5000 எழுதிக் கொள்ளச் சொன்னார் கள்.

கோவையில் திரு பி. முத்துக்குமாரசாமி முதலியாரிடம் சென்றோம். அவரிடம் ஆயிரம் ரூபாய்க் கேட்டோம். அவர், 'அவ்வளவு கொடுக்க முடியாது. ஐந்நூறு ரூபாய்தான் கொடுப்போம் என்றும், அதுவும் பின்னால் தரு வதாகச் சொன்னார். சிலமுறை சென்றோம். தவணை சொல்லிவந்தார். ஒரு முறை பணம் கொண்டுவரத் தன் அறைக்குள் போனார், நானும் ஆயிக்கவுண்டரும் 'ஐந்நூறு ரூபாய் தான் கொடுப்பார். ஆயிரம் ரூபாய் கேட்க

வேண்டும்' என எண்ணியிருந்தோம். நூறு ரூபாய் நோட்டுக்களாகக் கொண்டு வந்தார். கையில் வைத்துக் கொண்டு எண்ணினர். அதில் ஐந்து எண்ணினர், மேலும் நோட்டுக்கள் இருந்தன. ஆயிரமாக இருக்கும் என எண்ணினேம். மேலும் எண்ண, 1500 என நினைத்தேன். மேற்கொண்டும் இருந்தது. இரண்டாயிரமாக இருக்கும் எனப் பார்த்தேன். மேலும் எண்ணினர். ரூ 2500இல் முடிவடைந்தது. பணத்தைக் கொடுத்துவிட்டுச் சொன்னர்: "நான் ஒரு உயர்நிலைப்பள்ளிக் கமிட்டியில் காரியதரிசியாக இருக்கிறேன். அங்குக் கட்டிடம் கட்ட இரண்டாயிரந்தான் கொடுத்தேன். ஸ்ரீசங்கமேஸ்வர சுவாமி ஆலயத் திருப்பணிக்குத்தான் என் வாழ்க்கையில் அதிகத் தொகையாக இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுத்திருக்கிறேன்" என்று சொன்னர்.

கூகலூர் கிராமம் மேட்டுப்பாளையத்தில் திரு அ. ராமசாமி முதலியார் ஓர் அன்பர். நல்ல காரியங்களுக்குத் தாகை வலுவில் நன்கொடை வழங்கும் சுபாவம் உள்ளவர். அவரிடம் ரூ 25,000 வாங்கவேண்டும் எனத் திரு நஞ்சப்பாவிடம் பேசிக்கொண் டிருந்தேன். சில தினங்கள் கழித்து நானும் திரு ஆய்க் கவுண்டரும் திரு இராமசாமி முதலியாரிடம் சென்றேம். அவர் இல்லையென்று சொன்னர்கள். நாங்கள் திரும்பி வந்துவிட்டோம். "திரு ராமசாமி முதலியாரிடம் நீங்கள் போன சமயம் அவர் வீட்டில் இருந்து கொண்டுதான் இல்லையென்று சொல்லி விட்டார்கள். இதை அவரே என்னிடம் சொன்னர்" என்று திரு நஞ்சப்பா எங்களிடம் சொன்னர். மீண்டும் திரு ஆய்க் கவுண்டரும் நானும் போனேம். அவர் வீட்டில் இல்லை. தோட்டத்திற்குப் போய் விட்டதாகச் சொன்னர்கள். அங்குப் போனேம். அங்கும் இல்லை. கிணறு வெட்டும் பக்கம் போயிருப்பதாகச் சொன்னர்கள். அங்கும் போனேம். அங்கும் இல்லை. இத்தடவையும் மறைந்து விட்டாரோ என எண்ணிக் கொண்டு விட்டிற்குச் சென்றேம். விட்டில் இருந்தார். எங்களுக்கு முன்பாகத் தோட்டம், கிணறு வெட்டுமிடம், இவைகளுக்குச் சென்றுவிட்டு அப்பொழுதுதான் வீட்டிற்கு வந்து சேர்ந்திருந்தார். "முதல் தடவை நாங்கள் வந்தபோது நீங்கள் வீட்டில் இருந்து கொண்டே 'இல்லை' என்று சொன்னதாகத் தெரிந்தோம். அதுபற்றி வருந்துகிறேம். நீங்கள் நல்ல கொடைவள்ளல். உங்களுடைய பணம் இம்மகத்தான திருப்பணிக்கு அதிகம் சேரவேண்டும் என எண்ணித்தான் கேட்டோம். நீங்கள் அத்தொகை அதிகம் என்று எண்ணினல் வெறும் ஐந்து ரூபாய் மட்டும் கொடுத்தால் கூடப் பெற்றுக்கொள்கிறேம்" என்று சொன்னேன். உடனே ஆயிரம்ரூபாய் கொண்டு வந்து கொடுத்து, "நீங்கள் கேட்ட தொகையையும் கொடுக்க முயலுகிறேன்" என்று சொன்னர். அந்த ரூ 25,000மும் கொடுத்து முடித்து மேலும் ஸ்ரீ சங்கமேஸ்வர ஆலயப் புதியக் கட்டிடத்திற்கு ரூ. 5000 செலவில் மின் விளக்கும் போட்டுக் கொடுக்க முன் வந்துள்ளார். இதுவரை தனிப்பட்ட நபர்களில் அதிகத் தொகையாக ரூ 30,000 கொடுத்துள்ளவர் இவர்தான்.

இராக்கணும்பாளையம் மணியம் திரு ஸி. நஞ்சப்ப கவுண்டரிடம் வசூலுக்குப்போனேம். நாங்கள் ரூ. 2000ம் கேட்டோம். 'ரூ. 1000தான் கொடுப்பேன், ஆயிரத்திற்குமேல் தரமாட்டேன்' என்று சொல்லிக் கொண்டே வசூல் புத்தகத்தில் எழுதினர். அவர் அறியாமலே இரண்டாயிரம் ரூபாய் என எழுதிக் கொடுத்துவிட்டார். வசூல் புத்தகத்தைக் காட்டி, "என்ன எழுதியிருக்கிறீர்கள் பாருங்கள்" என்று காட்டினேம். அவர் திருவருளை வியந்தவண்ணம் ரூபாய் இரண்டாயிரமும் கொடுத்துவிட்டார்.

ஈரோடு திரு ஏ. ஸி. முத்துசாமிக் கவுண்டரிடம் நாங்கள் வசூலுக்குப் போகவில்லை. அவராகவே 18—10—66ல் திருப்பணி அலுவலகத்துக்கு வந்தார். திருப்பணிக் கமிட்டியைச் சேர்ந்தவர்கள் ஈரோடு வந்து வசூல் செய்வதாகவும், தான் ரூ 500 கொடுப்பதாகக் கனவு கண்டதாகவும் சொல்லி ஐந்நூறு ரூபாய்க் கொடுத்து விட்டுச் சென்றர்.

திருப்பூரில் திரு ஊ. செ. இராமசாமிச் செட்டியார் நல்ல சைவப்பற்று உள்ளவர். தென்சேரி, மந்திரகிரி வேலாயுதசாமி கோவிலில்

திருப்பணி செய்யப் போகிறீர் என்று கேள்விப் பட்டோம். ஒரு நாள் அவரைப் பார்க்கப் போகலாமெனத் திரு பி. கே. பழனிக் கவுண்டரிடம் சென்றேம். திரு இராமசாமிச் செட்டியார் நமக்கு அறிமுகமில்லை. வேறு யாரேனும் தெரிந்தவர்களைக் கூடக் கூட்டிப் போகலாமென்று சொன்னர். 'நமக்கு யாரும் அறிமுகம் தேவையில்லை. ஸ்ரீசங்கமேஸ்வரப் பெருமானே நமக்கு முன்னல் அங்கு இருப்பார். நாமே போகலாம்.' என அவரை அழைத்துக் கொண்டு போனேன். நாங்கள் போனவுடனே எங்கள் இருசாராருக்கும் மிகவும் வேண்டியவரான திரு சிவஞானதேசிகர் அங்கு வந்து சேர்ந்தார். திரு இராமசாமி செட்டியார்தான் தன்னுடைய மோட்டாரை அனுப்பி அழைத்து வரச் செய்திருந்தார் நமக்கும். திரு இராமசாமி செட்டியாருக்கும் வேண்டிய தேசிகரை அழைத்துவரும்படி ஆண்டவன் ஏற்பாடு செய்து விட்டான் அல்லவா என்று நான் சொன்னபொழுது எல்லோருமே திருவருளை வியந்தோம்.

இம்மாதிரி எங்கள் அநுபவங்கள் பல விரிப்பின் பெருகும் என அஞ்சி, சில உதாரணங்கள் மட்டும் சொன்னேன். எனவே திருப்பணியை ஸ்ரீசங்கமேஸ்வரப் பெருமானே முன்னின்று நடத்திக் கொண்டான் என்பதை மேலே சொன்ன அநுபவங்களைக் கொண்டு நன்ருக உணர்கிறேம்.

எங்களுடைய திட்டத்தில் இராஜகோபுரத் திருப்பணி சேர்க்கப்படவில்லை. 1966 ஜனவரியில் திரு நா. மகாலிங்கம் அவர்கள் சக்தி சர்க்கரை ஆலையின் சார்பில் இராஜகோபுரத் திருப்பணிக்காக ஒரு லட்சம் ரூபாய் கொடுக்க முன்வந்தார். எங்களுக்கு அது மிகவும் பேருதவியாக இருந்தது.

இத்திருப்பணிக்கு முன்னுள் முதல் அமைச்சர் திரு எம். பக்தவத்சலம் அவர்கள் மிகவும் ஊக்கமும் ஆதரவும் அளித்தார்கள். முன்னுள் அறநிலைய ஆணையர் திரு உத்தண்டராமன் அவர்கள் உபரி நிதியுடைய தேவஸ்தானங்களின் வசூலுக்குப் பெருந்துணையாக இருந்தார்கள். அறநிலைய ஆணையர் திரு எம். எஸ். சாரங்கபாணி முதலியார் அவர்கள், துணை ஆணையர்களான திரு அ சிதம்பரம், திரு வேங்கடாசலம், உதவி ஆணையர்கள் திரு எம். சூரியராஜ், திரு டி. எஸ் சங்கரநாராயணன் ஆகியவர்கள நல்ல ஆதரவு அளித்தார்கள். முன்னுள் துணை ஆணையர் திரு சர்க்கரை சேர்வை எங்களுக்கு உதவியதை மறக்க முடியாது. முன்னுள் துணை ஆணையர் திரு சோமசுந்தரம்தேசிகரும் ஆதரவு அளித்தார். நாங்கள் நன்கொடை வசூலுக்குச் சென்ருல் எல்லாத் தேவஸ்தானங்களின் நிர்வாக அதிகாரிகளும் ஒத்துழைத்தார்கள்.

பல அன்பர்கள், தாங்கள் திருப்பணிக் குழுவின் அங்கத்தினராகவோ தர்மகர்த்தாவாகவோ இல்லாமல் பெரிதும் உழைத்தார்கள். அவர்களது சேவையை என்றும் மறக்க முடியாது. அவர்களைப் பற்றித் தனித்தனி சொல்லுவதென்ருல் சிலரை மறதியால் விட்டுவிட நேருமோ என அஞ்சிப் பெயர் குறிப்பிடாமல் நிறுத்திக்கொள்கிறேன். திருப்பணிக் குழுவில் உள்ள அனைவரும் 11½ வருட காலமாகப் பெரிதும் ஒத்துழைத்தார்கள்.

திருப்பணி ஆரம்பமுதல் நாளதுவரை இக் கோவிலை அழகிய முறையில் நல்ல வேலைப் பாட்டுடன் திரு. பி. இராஜரத்தின ஸ்தபதியார் அமைத்துக்கொடுத்தார்.

விமானங்கள், இராஜகோபுரம் இவற்றை நல்லமுறையில் திரு எம். நடராஜ முதலியார் அமைத்துக் கொடுத்தார்.

திருமுருக கிருபானந்தவாரியார் இத் திருப்பணிக்கு அரிய சேவை செய்திருக்கிருர்கள். அவர் சொற்பொழிவு நிகழ்த்திய ஊர்களிளெல்லாம் இத்திருப்பணி குறித்துப் பெரிதும் புகழ்ந்து பேசியிருக்கிருர்கள். அவர்களது பேச்சின் பலனக எங்களது திருப்பணிக்கு வசூல் அதிகமாயிற்று.

வருவாய்த் துறை அதிகாரிகள், மற்றத் துறைகளில் எல்லா அதிகாரிகளும் முழு ஒத்துழைப்புக் கொடுத்தார்கள்.

கோவிலுக்கு வேண்டிய கற்கள் அனைத்தும் லாரி டிரைவர் திரு சாம்சிங்கிஞல் கோபி கூட்டுறவு விற்பனைச் சங்க லாரியில் கொண்டு வரப்பட்டன.

திருப்பணிமேலாளர் திரு எஸ். வி. வேங்கட சுப்பிரமணிய ஐயர், எழுத்து அலுவலர்கள் அனைவரும் நன்ருகப் பாடுபட்டார்கள்.

இத்திருப்பணிக்கு நன்கொடையளித்தும், ஆதரவு தந்தும், ஒத்துழைத்தும், ஊக்கமளித்தும் இன்னும் பலமுறையிலும் உதவிய அன்பர்கள் எல்லாருக்கும் எனது உளம் கனிந்த நன்றி.

*அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர்*
*பொருளாய் வேறும்*
*குறியது உடைத்தாய் வேதாகமங்களின்*
*குறியிறந்தங்கு*
*அறிவினில் அருளால் மன்னி*
*அம்மையோ டப்பனுகிச்*
*செறிவொழியாது நின்றசிவன் அடிசென்னி*
*வைப்பாம்;*

———

# விக்கிரக வழிபாட்டின் விளக்கமும், கும்பாபிஷேகமும்

(ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்
மதுரை ஆதீனம்)

அருவமாய் உள்ள சிவ பரம்பொருள் (கருணை காரணமாகப் பிறருக்குக் காட்சி கொடுப்பதற்கென, எடுத்துக்கொண்ட இருபத்தைந்து திருமேனிகளும் தோன்றுவதற்கு மூலாதாரமாகவுள்ள, அருவமும் உருவமும் இல்லாத) அருவுருவ நிலையான சோதி சொருபத்தை முதற்கண் தாங்கிக் கொள்ளத் திருவுள்ளம் கொண்டது. அந்தச் சோதி சொருபமே சிவலிங்க வடிவமாகும். அந்தச் சோதி சொருபத்திலிருந்து, 25 திருமேனிகள் தோன்றி, ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு காரியத்தை நிகழ்த்தி, துஷ்ட நிக்ரகமும், சிஷ்ட பரிபாலனமும் செய்ய வேண்டியதாயிற்று. அவையாவன :

1. சோமாஸ்கந்தன் 2. நடராஜப் பெருமான் 3. இடபாருடர் 4. சந்திரசேகரர் 5. கல்யாண சுந்தரர் 6. பிக்ஷாடனர் 7. காமாரி 8. காலாரி 9. சலந்த ராரி 10. திரிபுராரி 11. கசாரி 12. வீரபத்திரர் 13. தக்ஷிணாமூர்த்தி 14. கிராதர் 15. நீலகண்டர் 16. கங்காளர் 17. சக்ரதானர் 18. கெஜமுகானுக்ரகர் 19. சண்டேசானுக்கிரகர் 20. ஏகபாதர் 21. இலிங்கோற்பவர் 22. சுகாசீனர் 23. உமாமகேசுவரர் (பார்வதி பரமேஸ்வரர்) 24. அரியத்தர் 25. அர்த்தநாரீசுவரர்.

"அருவமும் உருவுமாகி, அநாதியாய்ப்
பலவாய் ஒன்ருய்
பிரம்மமாய் நின்ற சோதிப் பிழம்பு, அதுஓர்
மேனியாகக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள்
பன்னிரண்டும் கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன்
உலகம் உய்ய."

என்று முருகப் பெருமானது தோற்றத்தை நமது கச்சியப்ப சிவாச்சாரியார் அருளிச் செய்திருக்கிருர். ஆகவே யாரும் அறிய முடியாத அருவனுய் இருந்த பரமசிவம் பக்குவப்பட்ட ஜீவான்மாக்களுக்குச் காட்சி கொடுக்கவும், தமது ஆட்சியின் சட்ட திட்டங்களாகிய வேதாகமங்களை அருளிச் செய்யவும் எடுத்துக்கொண்ட மூர்த்தமே சிவலிங்க வடிவமாகும்.

ஒருவருடைய கருத்து மற்றவர் அறிய முடியாத அருவ நிலையில் இருக்கிறது. இருந்தபோதிலும், அக்கருத்தை அவர் வெளியிடுகின்ற சொல்லானது, அறியக் கூடாத அருவ நிலையிலும் இல்லை; கண்ணால் காணக்கூடிய உருவ நிலையிலும் இல்லை; அருவுருவ நிலையில் உள்ளது. ஆனல் அச்சொல்லின் பொருளை உணர்ந்தவர்களுக்கு மட்டுமே அப்பொருளை உணர்த்தக்கூடிய அடையாளமாக, அச்சொல் அமைகிறது. அதுபோலவே சிவ பரம்பொருள், கருத்தை ஒத்த அருவ நிலையிலிருந்து இறங்கி, அக்கருத்தை உணர்த்தக்கூடிய சொல்லே போன்று, தெரிந்தவர்கள் உணர்ந்து கொள்ளக்கூடிய சோதி வடிவம் தாங்கி அருவுருவ நிலை எய்துகிறது. அதைச் சதாசிவம் என்பர் அறிந்தோர். அது வேதாகமங்களாகிய சொற்பிரபஞ்சம் தோன்றுவதற்கும் ஒடுங்குவதற்கும் காரணமான மூர்த்தமாகும். இன்றைய விஞ்ஞானிகள் ஆகாயம் என்ற பூதமே சப்தங்களை வாங்கி ஒடுக்கவும், திரும்பவும் அதனை வெளியிடவும் ஆற்றல் வாய்ந்த பூதம் என்று, வானொலிக் கருவிகளைக் கொண்டு அதிசயிக்கிருர்கள். ஆகாயம் என்ற அப்பூதம் ஒன்று இருந்து, நாம்

போடுகின்ற கூப்பாடுகளைத் தனது சக்தியினால் ஒடுக்கிக் கொள்ளாவிட்டால், எல்லோருடைய சப்தமும் எல்லோருக்கும் கேட்டு, ஒருவர் சொல்வதை மற்றவர் கேட்க முடியாத அவல நிலை ஏற்பட்டுவிடும். நமது முன்னோர்கள் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்னதாகவே, இதன் உண்மையைக் கண்டு, "வெளியில் ஒன்றாய் நின்றாய் போற்றி" என்று ஆகாயத்தில் ஆண்டவன் ஒலி வடிவாகத் திகழ்ந்து அருள்பாலிக்கிறான் என்று சொல்லியிருக்கிறார்கள்.

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐம் பூதங்களில், எவ்வாறு ஆகாயம் என்ற பூதம், மற்ற நான்கு பூதங்களிலும் விரவி நின்று, தன்னில் யாருமில்லாத தனிப் பெரும் பூதமாக இருக்கின்றதோ, அதே போல இறைவனும் தான் எல்லாவற்றிலும் கலந்திருந்தாலும், தன்னில் யாருமில்லாத தனிப்பெருஞ் சோதியாகத் திகழ்கின்ற தன்மையைச், சதாசிவம் எனப்படும் இலிங்கம் உணர்த்துவதாகும். அதன் பெருமையையும் அருமையையும் அறிந்தவர்கள் மட்டுமே உணர்ந்து கொள்ளக்கூடும். அம் மூர்த்தம் வேறு எம்மதத்திலும் காணமுடியாத உண்மைத் தத்துவங்களைக் கொண்ட அரிய திருமூர்த்தமாகும். அதுமட்டுமல்ல, சிவலிங்கத்தில் பிரம்ம, விஷ்ணு, சிவ பாகங்கள் ஆகிய மூன்றும் இயைந்திருக்கும் உண்மை:

சிவலிங்கம் மூன்று கூறுகள் உடையது. அடிப்பாகம், நாற்கோண வடிவமாய், பூமிக்கு அதிபதியான, சிருஷ்டி கர்த்தாவான, பிரம்ம பாகத்தை உணர்த்துவதாகும். மத்திய பாகம், எட்டுப் பட்டமுடைய அட்டகோண வடிவமாய், வாமை, சேஷ்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரதமனி, சர்வ பூததமனி என்னும் மகா விஷ்ணுவின் எட்டுச் சக்திகளும், அதனோடு பொருந்த இருக்கும் ஆவுடை எனப்படும், மனோன்மணியாகிய ஒன்பதாவது சக்தியும் சேர்ந்து நவ சக்திகளாகி, நீருக்கு அதிபதியான காத்தல் எனப்படும் 'ஸ்திதி'கர்த்தரான விஷ்ணு பாகத்தை உணர்த்துவதாகும். அரன் என்பதன் பெண்பாலே அரி என்பதாகும். அதனாலேயே 'அரியல்லால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே' என்று திருநாவுக்கரசு நாயனாரும், திருமழிசையாழ்வார் தமது இயற்பாவிலே 'மாதாய மாலவனை மாயவனை' என்றும் அருளிச் செய்திருக்கின்றார்கள். அதனால் தான் நமது அப்பனாகிய சிவபெருமானது இடப்பாகம், நமது அம்மையாக விளங்கும் மகா விஷ்ணுவின் பாகமாகவும், மாதொரு பாகன், உமா மகேஸ்வரன், அர்த்தநாரி, சங்கர நாராயணன் என்ற ஆணும் பெண்ணும் சேர்ந்த அபூர்வ மூர்த்தங்களாகவும், அமைந்து திகழ்கின்றன. மேலுள்ள பாகம் நெருப்பிற்கு அதிபதியும், அழித்தல் எனப்படும் சம்ஹாரம், மறைத்தல் எனப்படும் திரோபவம், அருளல் எனப்படும் அனுக்கிரகம் ஆகிய முத்தொழில்களுக்கும் அதிபதியான சிவபாகமாகும். பூமிக்கு அதிபதியான பிரம்ம பாகம் பூமிக்குள் மறைந்து ஒடுங்கி நிற்கும், நீருக்கு அதிபதியான விஷ்ணு பாகம், அபிஷேக நீரைத் தாங்கி விரிந்து நிற்கும், நெருப்புக்கு அதிபதியான சிவ பாகம், மேலோங்கி ஜோதி போன்று ஜொலித்துக்கொண் டிருக்கும். இம்மூன்றும் சேர்ந்த அருவமும், உருவமுமற்ற, ஆதியும் அந்தமும் இல்லாத, அரும்பெரும் ஜோதி வடிவே சிவலிங்கம் ஆகும். ஆகவே சிவலிங்கத்தை வழிபட்டால் பிரம்மாவை வழிபட்ட பலனும், மகாவிஷ்ணுவின் பத்துத் திரு அவதாரங்களை வழிபட்ட பலனும் சிவபெருமானின் 25 மூர்த்தங்களை வழிபட்ட பலனும் ஒருங்கே கிடைக்கக் கூடியதாகவும் இருக்கிற தென்பதை வேதாகமங்கள் வலியுறுத்துகின்றன. புராண இதிகாசங்களும், அனுபூதிமான்களது அநுபவங்களும், அந்த

உண்மையை உறுதிப்படுத்துகின்றன. அரசமரம் சுற்றி வரும் அன்பர்கள், சைவர்களாக இருந்தாலும், வைணவர்களாக இருந்தாலும் எல்லோரும் ஒன்றுபோல் சொல்லி வரும் "மூலதோ பிரஹ்ம ரூபாய, மத்தியதோ விஷ்ணு ரூபிணி, அக்ரஸ்ய சிவ ரூபாய, விருக்ஷ ராஜாயதே நம" என்ற மந்திரமும், சிவலிங்க தத்துவத்தின் உண்மையை நன்ருக வலியுறுத்துகிறதல்லவா? அல்லாமலும் உலகிலுள்ள எல்லா மரங்களும், அவற்றின் விதைகளும், கனிகளும், எல்லா வகையான முட்டைகளும், ஜீவராசிகளின் தலைகளும், பிண்டங்களும், பூமியும், சந்திரனும், சூரியனும், நட்சத்திரங்களும், அண்டங்கள் பலவும், ஆகாயமும் சிவலிங்க வடிவின் மேல் பாகம் போல் அமைந்திருப்பது சிந்திக்கத்தக்கது. பலவிதமான தெய்வ வழிபாடுடைய இந்துக்களில் பலருக்கும், எந்த மூர்த்தியை வழிபட்டால் எல்லா மூர்த்திகளையும் வழிபட்ட பலனை ஒருங்கே பெறலாம் என்பதும் தெரியாதிருக்கிறது. அதைப் பலரும் அறியும்படி தெரிவிக்கவே சிவன் கோவில்களில் மூலஸ்தானத்தில் சிவ லிங்கத்தைத் தவிர வேறு பிரதிஷ்டை ஒன்றுமின்றி அமைத்துக் காட்டியிருக்கின்றனர், நமது முன்னோர்கள்.

### சிவலிங்க வழிபாட்டினுலேயே பிரஹ்ம ஹத்தி தோஷம் நீங்குவதாகும் :

மேலும்பாவங்களிலெல்லாம்மிகவும் கொடியது பிரஹ்மஹத்திதோஷம் எனப்படும் அந்தணரைக் கொன்ற கொலைப்பாவம். அதை நீக்க வேண்டுமானுல் தனியாக எந்த மூர்த்தியையும் வழிபட்டு நீக்கிக் கொள்ள முடியாது என்பது வேதாகம விதி. அதை நீக்க வேண்டுமானுல் சிவலிங்க பூஜையே செய்தாக வேண்டும். அதனுலேயே திருவிளையாடல் புராணத்தில் பஞ்சமா பாதகம் செய்தவனுக்கும், மதுரை மீனுக்ஷி சுந்தரேஸ்வரர், அவன் செய்த பாவங்களை மன்னித்து, நற்கதி கொடுத்ததாகக் காண்கிருேம். காஞ்சிபுரத்தில் காமாக்ஷி அம்மையார் சதாவும் இலிங்க பூஜை செய்துகொண் டிருப்பது யாவரும் அறிந்ததே. மகாபாரதத்தில் பஞ்சபாண்டவர்களும் சிவ பூஜா துரந்தரர்களாக இருக்க, அர்ஜுனன் சிவபெருமானிடமிருந்து பாசுபதம் பெறுவதற்கு விசேஷ தவம் புரிந்தது யாவரும் அறிந்ததே. இராமாயணத்தில் இராவண சம்ஹாரத்திற்குப் பிறகு, ஸ்ரீ ராமபிரான், இராமேஸ்வரத்தில் இராமநாதரைச் சிவலிங்கத்தில் பிரதிஷ்டை செய்து வழிபாடாற்றியதும், அனுமார் தனியாகக் காசியிலிருந்து லிங்கம் கொண்டு வந்து பிரதிஷ்டை செய்து வழிபாடாற்றியதும் காணலாம். கந்த புராணத்தில் சூர சம்ஹாரத்திற்குப் பிறகு ஸ்ரீ சுப்பிரமணியப் பெருமான் திருச்செந்தூரில் சிவ பூஜை செய்துகொண் டிருப்பதைக் காணலாம், கஜமுகா சூரனைச் சம்ஹாரம் செய்த பிறகு ஸ்ரீ விநாயகப் பெருமான் திருச்செங்காட்டங்குடியில் சிவலிங்க பூஜை செய்து கொண்டிருப்பதைக் காணலாம். மேலுலகத்தில் அதிகாரம் பெற்ற சகலருமே சிவ பூஜை செய்தே அவ்வப்பதவிகளைப் பெற்றிருப்பதாக நமது நாயன்மார்களும் மாணிக்க வாசகரும் தேவாரத் திருவாசகங்களில் அருளிச் செய்திருக்கிருர்கள்.

ஆகவே இம்மண்ணுலகத்திலுள்ள நாம் மேலே சொன்ன ஏதாவது ஒரு வடிவத்தில் ஒரு சிலையைச் செய்வித்து, அதற்கு வேதாகமங்களில் சொன்ன முறைப்படி ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம் முதலிய கிரியைகளைச் செய்து அதில் அந்த மூர்த்தியை எழுந்தருளியிருக்கும்படி வேண்டிக் கொண்டால், முன்னே வெறும் சிலையாக இருந்த அது, முருகப் பெருமான், நடராஜப் பெருமான், விநாயகப் பெருமான் என்ற அந்தந்தச் சிறப்புப் பெயர் பெற்று,

அந்தந்த மூர்த்தத்தில் என்னென்ன அதிகாரம் செலுத்தினர்களோ அந்தந்த அதிகாரத்திற்குரிய அதிகார மூர்த்தியாக, வேதாகமச் சட்டப்படி அமைந்து விடுகிறது. அவ்வித மூர்த்திகளுக்குச் செய்கின்ற சகல காரியங்களும், முழு முதல் பரம்பொருளாகிய ஆண்டவனுல் அங்கீகரிக்கப் பெற்றதாகும். அவை மக்களால் ஏற்றுக் கொள்ளப் பெற்றதாகவும் இருப்பதால், அதிலிருந்து முன்பு சாதாரணமாக இருந்த கற்சிலேகள் இப்பொழுது அந்தந்த மூர்த்திமான்கள் வீற்றிருக்கின்ற திருமேனிகளாக மாறி நாம் செய்யும் சிறப்பு மரியாதைகளேயும், சிறப்பு உபசாரங்களேயும், வணக்கங்களேயும் வேண்டுகோள்களேயும் ஏற்று, அதற்குரிய அநுக்கிரகங்களேச் செய்யக் கூடிய மூர்த்தங்களாக அமைகின்றன. இதற்கு ஒரு மனிதனே உபமானமாக வைத்துப் பார்ப்போமானுல், உயிரில்லாத வெற்றுடம்பிற்கும், உயிருள்ள ஒரு தனி நபருக்கும் உள்ள வேற்றுமை எவ்வளவோ, அதை விடப் பன்மடங்கு உள்ளதாகும் வெறும் கற்சிலேக்கும் பிரதிஷ்டை செய்த மூர்த்திக்கும் உள்ள வேற்றுமை.

### விக்கிரகங்கள் விண்ணுலகிலுள்ள மூர்த்திகளின் திருவுருவங்களே.

அங்கிங்கெனுதபடி உயிருக்கு உயிராய் நீக்கமற நிறைந்திருக்கிற அருவப் பொருளாகிய பரமன், ஒவ்வொரு காரணத்திற்காக எடுத்துக் கொண்ட திருமேனிகளுடன் ஒவ்வொரு புவனத்திலும் இருந்து, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் பஞ்ச கிருத்தியங்களேச் செய்து உலகங்களே யெல்லாம் ஆண்டு வருகிருன். இந்துக்கள் அவ்வாறு ஆண்டவன் எடுத்துக் கொண்ட திருமேனிகளின் விபரங்களேயெல்லாம் விண்ணுலகிலிருந்து விளங்கி இம்மண்ணுலகில் அந்தந்த உருவங்களேச் சிற்ப சாஸ்திர முறையில் சிலேகளாகத் தயார் செய்து, அவற்றில் அதற்குரிய மூர்த்திகளேப் பக்தர்களுக்காக எழுந்தருளி வீற்றிருக்கும்படிப் பிரார்த்தனே செய்து, விக்கிரக ஆராதனே செய்து வருகிருர்கள். அதிக நாள் கெடாமல் இருப்பதற்காகவும், விஞ்ஞான ரீதியாகவும், அவற்றைகளிமண்ணுல் செய்யாமல் கருங்கல்லாலும் செம்பாலும் அமைத்தார்கள்.

### விக்கிரகங்களேக் கருங்கல்லாலும், செம்பாலும் அமைத்திருப்பதின் விஞ்ஞான விளக்கம்

விக்கிரகங்களேக் கருங்கல்லாலும், செம்பாலும் செய்தால் அவை அதிக நாள் கெட்டுப் போகாமல் இருக்கலாம் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. ஆனுல் அவற்றை நமது முன்னேர்கள் விஞ்ஞான ரீதியாகவும் அமைத்திருப்பதாகச் சொல்லும் பொழுது, கல்லிலும் செம்பிலும் என்ன விஞ்ஞானம் இருக்கிறது என்று பலரும் கேட்கலாம். இந்துக் கோயில்களில் ஏராளமான தங்கமும், வெள்ளியும் இருக்கும்பொழுது, அவையும் கெட்டுப் போகாத உலோகங்களாக இருக்க, அவற்ருல் மூலஸ்தானத்திலுள்ள சிவலிங்கத்தையும், வெளியில் எழுந்தருளியாகின்ற உற்சவ மூர்த்திகளேயும் செய்யாமல் சிவலிங்கத்தைக் கல்லாலும், உற்சவ மூர்த்திகளேச் செம்பாலும் அமைத்ததற்குப் பல காரணங்கள் உண்டு.

மின்சார சக்தியைத் தாங்கிச் செல்வதற்காகவும், செலுத்துவதற்காகவும் விஞ்ஞானிகள் செம்புக் கம்பிகளேப் பயன்படுத்துவது போல இதர உலோகங்களால் செய்யப் பெற்ற கம்பிகளேப் பயன்படுத்துவதில்லே என்பதை யாவரும் அறிவர். வானில் உண்டான சப்தத்தை இழுத்துக் கொள்வதற்காக, ரேடியோக் கருவிகளுக்கு இன்றைய விஞ்ஞானிகள் செம்புக் கம்பிகளேப் பயன்படுத்துவது போல, வேறு இதர

உலோகங்களால் செய்யப்பெற்ற கம்பி களைப் பயன்படுத்துவதில்லை என்பதும் யாவரும் அறிந்ததே. மேலும் பாரமுள்ள ஈயத்தைக் கவ்வி எடுக்கும் ஆற்றல் செம் புத் துண்டுக்கு இருப்பது போல், வேறு எந்த உலோகத்திற்கும் இல்லை என்பதும் யாவரும் அறிந்ததே. இன்றைய விஞ் ஞானிகள் சென்ற ஒரு நூற்றுண்டினுள் கண்டு, கையாண்டு வருகிற இந்த உண் மையை, நம்முடைய மெய்ஞ்ஞானிகள் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன் கண்டு, ஆண்டவனது திருவருள் சக்தியைத் தன் வசம் இழுத்து வாங்கிக் கொள்ளவும், தன் னிடம் நிறுத்திக் கொள்ளவும், பக்தர்களுக்கு அதன் மூலம் அருள் பாலிக்கவும் மற்ற உலோகங்களால் உற்சவ மூர்த்திகளைச் செய்விக்காமல், செம்பிஞலேயே செய் திருக்கிறுர்கள் என்பதை அறியும் பொழுது, அவர்களுடைய மெய்ஞ்ஞானம் இன்றைய விஞ்ஞானத்தை எந்த அளவில் மிஞ்சி யிருந்தது என்பதைக் கண்டு கொள்ளலாம். மேற்கண்டவற்றிலிருந்து உலோகங்கள் எல்லாவற்றிலும் செம்புக்கு மிகுந்த ஆற்றல் உண்டு என்பதும், அது இன்றைய விஞ் ஞானிகள் மட்டும் அல்ல, பண்டைக்காலங் தொட்டே நமது மெய்ஞ்ஞானிகளும் கண்ட உண்மையாகும் என்பதும் புலனு கும்.

கல்லினது ஆற்றல் செம்பினது ஆற்றலை விடப் பன்மடங்கு அதிகமாக உள்ளது.

செம்பு எப்படி மின் அலைகளைத் தன்பால் இழுக்கவும் கடத்தவும் ஆற்றலுடையதோ, அதுபோலக் கல்லானது எந்தப் பொருளை யும் தன்பால் இழுத்துக் கொள்ளக்கூடிய சக்தி வாய்ந்தது. உதாரணமாக, மலையா னது ஆகாயத்தில் சென்றுகொண் டிருக்கும் மேகத்தைத் தன்பால் இழுத்துக் குளிர் வித்து மழையாகப் பொழியும்படி செய் கிறது. அல்லாமலும் கல்லில் பஞ்ச பூதங் களின் தன்மையும், விசேடமாக அடங்கி யிருந்து வெளிப்படுவதுபோல், மற்ற உலோகங்களில் இல்லை. பஞ்ச பூதங்களா வன :- 1. ஆகாயம் 2. காற்று 3. நெருப்பு 4. நீர் 5. நிலம்.

1. வெளியில் உள்ள சப்தத்தைத் தன் னிடத்தே இழுத்து ஒடுக்கிப், பின்னர் வெளி யிடும் ஆற்றல் ஆகாயத்திற்கு உண்டு. அதே தன்மை கல்லுக்கும் உண்டு. கல் மண்டபங்களிலும், மலைப்பிரதேசங்களிலும் சப்தங்கள் எதிரொலியாவது போல வேறு எந்த இடங்களிலும் கிடையாது என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

2. கல்லிலே காற்று உண்டு என்பதை "கல்லினுள் தேரைக்கும்" என்ற தொட ரினை ஆய்வதிலிருந்து தெரியலாம். காற்று இல்லா இடத்தில் எந்த ஜீவராசியும் உயிர் வாழ முடியாது, கல்லினுள் தேரை வசிக்க வேண்டுமானுல் கல்லிலே காற்று இருக்க வேண்டுமல்லவா ? எனவே, கல் லில் இரண்டாவது சொல்லப் பெற்ற காற் றும் உள்ளது.

3. இனிக் கல்லிலே நெருப்பு தங்கி யிருப்பது போல் வேறு எந்தப் பொருளிலும் இல்லை. அதனுல்தான் பழங்காலத்தில் நெருப்பு உண்டாக்க வேண்டுமானுல் இரு கற்களை ஒன்றோடு ஒன்று உராயச்செய்து நெருப்பினை உண்டாக்கி உபயோகித் தார்கள். மரக் கட்டைகளைக் கடைந்தும் நெருப்பை உண்டாக்கினுர்கள். இருந்தா லும் கல்லில்தான் நெருப்பின் சக்தி மிகுதி யாக இருக்கிறது. அதிலும் சிக்கிமுக்கிக் கற்கள் என்பவை அந்த வகையில் மிகுந்த ஆற்றலுடையவை. அநேகமாக அவை தான் தீயினை உண்டாக்க அந்நாளில் உப யோகப்படுத்தப்பட்டன. ஆகவே கல்லில் நாம் மூன்றுவதாகச் சொல்லிய நெருப்பு உள்ளது.

4. மேற்கூறிய மூன்று ஆற்றல்களை யுடையதாக இருந்தாலும், கல்லானது தன் இயல்பான குளிர்ந்த நிலையிலிருந்து மாறு மல் இருக்கும். இரு கற்களை ஒன்றோடு ஒன்று உராயச் செய்தால் நெருப்பு உண் டான போதிலும், சாதாரணமாகக் கல்லைத் தொட்டால் அது தண்ணீர் போன்றே தண் ணென்றிருப்பதை எல்லோரும் அநுபவத் தில் உணரலாம்.

5. இனி ஐந்தாவதாகக் 'கல்லில் 'நிலம்' என்ற கடைசிப் பூதம் இருக்குமா ?' என் பதைக் கேட்கவே வேண்டாம். கல்லே நிலத்தைச் சேர்ந்தது தான் அல்லவா? கல் லிலே ஐம்பூதங்கள் இருப்பதற்கும், ஆண் டவனுக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று சிலர் கேட்கலாம். ஆண்டவனே ஐம்பூதங்களில் கலந்துதான் இருக்கிறார் என்பதற்கு மணிவாசகனர் திருவாசகம் சான்று தருகிறது.

*"பாரிடை ஐந்தாய் பரந்தாய் போற்றி,*
*நீரிடை நான்காய் திகழ்ந்தாய் போற்றி,*
*தீயிடை மூன்றாய் திகழ்ந்தாய் போற்றி,*
*வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி,*
*வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி."*

என்பது திருவாசகத்தில் போற்றித் திரு அகவலில் வரும் அவ்வழகமைந்த பாடலா கும். ஐம்பூத வடிவாய் விளங்கும் அந்த ஆண்டவனது உருவத்தை ஐம்பூதங்களும் அடங்கிய ஒரு பொருளில் வீற்றிருக்கும்படி வேண்டுதல் செய்து வழிபடுவது சாலச் சிறந்ததல்லவா ? அதனுல்தான் நமது மூதா தையர்கள் நாம் வழிபடும் மூர்த்திகளுடைய விக்ரெங்களைக் கல்லால் அமைத்தார்கள். மலைகளைத் தெய்வமாகக் கொண்டு வழிபடு வதும் இந்தத் தத்துவத்தைக் கொண்டு தான் என்று சொன்னுல் அது மிகை யாகாது.

கற்சிலையும், செம்பு விக்கிரகமும் பிர திஷ்டை செய்தபின் தெய்வீக சக்தி பெறு வதின் விளக்கம் :

'சாதாரணமாக ஒரு கல்லாலோ, செம் பாலோ ஆக்கப்பெற்ற சிலையானது ஆலயங் களில் பிரதிஷ்டை செய்யப்பெற்றுக் கும்பா பிஷேகம் ஆனபின் தெய்வீக சக்தி பெற்று விசேஷ வழிபாடுகளுக்கும் வணக்கங்களுக் கும் உரிய தகுதி பெற்றுத் திகழ்வது எங்ங னம்?' என்றும், 'அதை விளக்குவதற்கு ஓர் உதாரணம் அல்லது உபமானம் சொல்ல லாமோ ?' என்றும் கேட்டால் நன்ருகச் சொல்லலாம். அறிவுடையோர் அதிலிருந்து அனுமானித்து உணர்ந்து கொள்ளலாம். சாதாரணமாக ஒருவர் ஒரு மடாதிபதியாக விளங்கி ஆட்சி நடத்துகிருர். மடாதிபதியா வதற்கு முன்னிருந்த மனிதர் தாமே மடாதி பதியான பின்பும் இருக்கிருர் என்ருல், ஆமாம். ஆனுல் அதற்கு முன்பிருந்த பெயரும் சக்தியும் வேறு. மடாதிபதியான பின் அவருக்கு உரிய சிறப்புப் பட்டமும் சிறப்பு அதிகாரமும் எவ்வாறு பெறுகிருர்? அந்தந்த மடாலயத்தின் சட்டதிட்டங்களின் படியே சில சடங்குகள் நடைபெறுகின்றன. பட்டாபிஷேகம் என்ற குடமுழுக்கும் நடை பெறுகின்றது. புதிய சின்னங்கள் வழங்கப் பெறுகின்றன. சிறப்புப் பட்டமும் சிறப்பு அதிகாரமும் வழங்கப் பெறுகின்றன. அந்தப் பட்டமும் அதிகாரமும் மடாலயத் தாராலும், பொது மக்களாலும் அங்கீ கரிக்கப் பெற்று அவற்றிற்குரிய சிறப்பு மரியாதைகளுக்கும் சிறப்பு உபசாரங்களுக் கும் அவரைத் தகுதி உடையவராகச் செய்கின்றது என்பதை யாவரும் அறிவர்.

ஒரு சாதாரண மனிதன் ஒரு மந்திரிப் பதவியையோ, அரசப்பதவியையோ, வேறு பதவிகளையோ பெறும்பொழுது, அரசாங்கத் தின் சட்டப்படி அதற்குரிய சடங்குகள்

நடைபெற்று, அதற்குரிய சின்னங்களைக் கொடுக்கப்பெற்று, அதற்குரிய அதிகாரம் வழங்கப் பெற்று, அரசாங்கத்தாராலும், பொது மக்களாலும் அவை அங்கீகாரம் செய்யப் பெற்று, சிறப்பு மரியாதைகளுக்கும் உபசாரங்களுக்கும் உரிய தகுதியைப் பெறுகின்றான் என்பதையும் யாவரும் அறிவர்.

மேலே சொன்ன சிறப்புப் பட்டமும் சிறப்பு அதிகாரமும் பெற்றவர்கள் உருவத்தால் முன்னிருந்தது போலவே தோற்றம் அளித்தாலும், அவர்களுடைய சிறப்புப் பட்டமும், அதிகாரமும், ஆதிக்கமும், தகுதியும் முன்னிருந்த நிலைக்குமேல் அதிகமாக உள்ளன என்பதை யாவரும் ஒப்புக் கொள்ளுவர். அவ்விதப் பதவியையும் பட்டத்தையும், அதிகாரத்தையும், ஆதிக்கத்தையும் பெற்ற அவரது உடல் அதற்கு முன்னிருந்த உடலாகவும், வேற்றுமை ஒன்றும் இல்லாததாகவும் இருக்கும் என்பதில் யாருக்கும் எவ்விதச் சந்தேகமும் இருக்க முடியாது.

இந்த உதாரணங்களைக் கொண்டு ஒரு சாதாரணக் கற்சிலை, கும்பாபிஷேகத்தினால் என்ன சிறப்புப் பட்டமும், அதிகாரமும், ஆதிக்கமும், பதவியும் பெறுகின்றதென்பதை அறிவுடையோர் உய்த்துணர்ந்து ஏற்றுக்கொள்ள முடியும். பூலோகத்திலுள்ள அரசாங்கம், நாம் இவ்வுலகத்தில் பிறந்தபின் அனுசரிக்க வேண்டிய சட்ட திட்டங்களை அமைத்து அச்சட்டதிட்டங்களை அமல் நடத்துகின்ற அதிகாரிகளை நியமித்து அவர்கள் மூலம் ஆண்டு வருகிறது. ஆனால் நம்மை இப்பூலோகத்தில் ஆணாகவும் பெண்ணாகவும் வெவ்வேறு நிலைகளில் வெவ்வேறு இடங்களில் பிறக்கும்படியும், வெவ்வேறு இன்ப துன்பங்களை அநுபவிக்கும்படியும், வெவ்வேறு வயதுவரை வாழும்படியும், வயது முடிந்தபின் ஸ்தூல சரீரமாகிய கட்டையிலிருந்து ஆவி உடலைப் பிரித்து மேல் உலகங்களுக்குக் கொண்டு போய் அவரவர் செய்த புண்ணிய பாவங்களுக்குத் தகுந்த சுவர்க்க-நரகமென்னும், அருட்பகுதியிலோ இருட் பகுதியிலோ வாழும்படியும், அதற்குரிய கால எல்லையில் அந்த ஆவி உடலை அழித்து மறு பிறவியில் தள்ளவோ அல்லது மேல் நிலைக்கு எடுத்துக் கொள்ளவோ செய்கின்ற அரசாங்கம் ஒன்று விண்ணுலகத்திலிருந்து ஆட்சி புரிவதையும், அந்த ஆட்சி வேதாகம சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு நடைபெறுவதையும், அச்சட்ட திட்டங்களை நிறைவேற்றுகின்ற பலதரப்பட்ட அதிகாரிகள், பலதரப்பட்ட அதிகாரங்களோடும், பலதரப்பட்ட உருவங்களில் நம்முடைய கண்களுக்குக் காண முடியாத சூட்சும நிலையிலிருந்து அமல் நடத்தி வருகிறார்கள் என்பதையும் ஞான நாட்டம் உடையவர்களெல்லாம் ஓரளவு அறிவார்கள்.

———



# திருநணுவில் திருஞானசம்பந்தர்

[சித்தாந்த கலாநிதி, உரைவேந்தர் ஔவை. துரைசாமி, மதுரை.]

நணு என்கிற பெயரை நோக்கின் அஃது ஒரு புதுமையாகத் தோன்றும். தேவாரத் திருமுறைகளில் பயிற்சியுடையவர்க்கு அது திருஞானசம்பந்தர் சென்று வழிபட்ட இடங்களில் ஒன்று என்பது தெரியும். கொங்கு நாட்டிற் காவிரிக் கரையில் உள்ள இந்த நணு என்ற திருப்பதி மலைச்சாரலில் சோலை சூழ்ந்து இயற்கையழகு சிறந்து விளங்கும் இடமாக ஞானசம்பந்தர் கண்டுள்ளார்.

இனிச் சங்க இலக்கியத்துள் ஒன்றாகிய பதிற்றுப்பத்து, நன்றா என்னும் குன்று ஒன்றைக் குறிக்கின்றது. சேர மன்னனான செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் என்ற புலவர் பெருமான் பாடியதை வியந்து அம்மன்னன்,

> "நன்றா என்னும் குன்றேறி நின்று
> தன் கண்ணிற்
> கண்ட நாடெல்லாம் காட்டிக்கொடுத்தான்"

என்று கூறுகின்றது. இப்பகுதியில் உள்ள கபிலக்குறிச்சி என்ற ஊர்ப்பெயரும் இவ்வரலாற்றுக்குச் சான்று பகர்கின்றது. இந்த நன்றா என்ற குன்றுதான் நாளடைவில் நன்னு எனத் திரிந்து திருஞானசம்பந்தர் காலத்துக்கு முன்பே, 1300 ஆண்டுகட்கு முன்பே நணு என மருவி மக்களிடையே வழங்கி வந்தது என எண்ணற்கு இடமுண்டாகிறது. ஆயினும் அது ஞானசம்பந்தர் முதலிய மூவரும் ஊர்களை வைத்துப் பாடிய திருப்பதிகங்களில் இடம் பெறக் காணேம். இது நன்கு அமர்ந்து ஆராய வேண்டியதொன்று.

இனி, இத்திருநணு இக்காலத்தில் பவானி கூடல் என வழங்குகிறது. பவானி என்ற ஆறும் காவிரியும் கூடுமிடத்தே இந்த நணு அமைந்திருப்பது பற்றி இவ்வாறு பவானி கூடல் என வழங்குவது பொருத்தம். ஆனால் பவானி என்பது பிற்காலத்தில் வந்த பெயர்; இதன் பழம் பெயர் பூவானி என்பது. இந்த ஆறு பாயும் நாட்டைக் கல்வெட்டுக்கள் பலவும் பூவானி நாடு என்றே குறிக்கின்றன. இவ்வாறு மைசூர் மாநிலத்தில் ஓடிக் காவிரியோடு கலக்கும் கீழ்ப் பூவானியாற்றை அந் நாட்டவர் 'செப்பானி' என்று வழங்குகின்றனர்.

இச் செய்திகளை நினைவிற் கொண்டு திருஞானசம்பந்தர் தேவாரத் திருப்பதிகத்தை நோக்குவோமாயின், பூவானியாறு போந்து நணுவிடத்தே காவிரியொடு கலக்கும் செய்தி காணப்படவில்லை. இவ்வாறே குடவனாறும் அமராவதியும் கூடுமிடத்திலுள்ள வெஞ்சமாக் கூடலைப்பாடும் சுந்தரர் தேவாரத்தும் ஆறு கூடும் செய்தி குறிக்கப்படவில்லை. அதனால் திருநணுவைப் போற்றும் திருப்பதிகம், பவானி யாறு போந்து கூடும் கூடலைக் குறிக்காமை பற்றி நாம் கருத்தைச் செலவிடவேண்டிய தில்லை.

தேவார ஆசிரியர்கள் காலத்தில், அதாவது 1300 ஆண்டுகட்கு முன்பே பவானி கூடற்கண் உள்ள நணு மிக்க சிறப்புற்று விளங்கிற்றென்பது உண்மை.

சைவம் செய்த தவத்தாற் பிறந்து தமிழகம் எங்கும் சிவம் பெருகுவித்த திருஞானசம்பந்தர், திருப்பைஞ்ஞீலி, திருவீங்கோய்மலை முதலிய திருப்பதிகளைப் பாடிப் பரவிக் கொண்டு திருச்செங்குன்றூர் வந்து சேர்ந்தார்.

செங்குன்றூர் அந்நாளில் கொங்குநாட்டு அரசு வீற்றிருக்கும் தலைநகரமாகச் சிறந்து விளங்கிற்று. வானளாவ உயர்ந்த மாடங்களால் பொலிந்ததோடு, வெற்றி, கொடை, திருமணம் ஆகிய நலங்களை எடுத்துக் காட்டும் கொடிகள் மலிந்திருந்தது அத்திருநகர். அதனால் அதனை அந்நாளைய நன்மக்கள், வெறிதே செங்குன்றூர் என்று மொழியாமல், கொடிமாடச் செங்குன்றூர் என்று பாராட்டிப் புகழ்ந்தனர். அதனால் சேக்கிழாரும், "கொண்டல் பயில் நெடும் புரிசைக் கொடிமாடச் செங்குன்றூர்" என்றும்,

"அந்நாளில் கொடிமாடச் செங்குன்றூர் அமர்ந்திருந்த மெய்ஞ்ஞானப் பிள்ளையார்" என்றும் புகழ்ந்துரைக்கின்றார். இடைக்காலத்தில் இது செங்கோடு என்று வழங்கிவருவதாயிற்று.

செங்குன்றூரை அடைந்த ஞானசம்பந்தர், அங்கே கோயில் கொண்டருளும் சிவபெருமானை வழிபடுவதில் பெரிதும் ஈடுபாடு கொள்கின்றார். காலந்தோறும் சென்று இறைவனைப் பாடிப் பரவுவதில் அவரது ஆர்வம் பெருகுகிறது. இதனை,

*"தம் பெருமான் கோயிலினுள்*
*எழுந்தருளித் தமிழ் விரகர்*
*நம்பரவர் திருமுன்பு*
*தாழ்ந்தெழுந்து நலம் சிறக்க*
*இம்பரும் உம்பரும் ஏத்த*
*இன்னிசை வான்தமிழ் பாடிக்*
*கும்பிடும் ஆதரவுடன் அக்*
*கோநகரில் இனி தமர்ந்தார்".*

என்று சேக்கிழார் தெரிவிக்கின்றார். செங்குன்றூர் இறைவனை அவர் இசை கலந்து பாடிய பாட்டுக்களை மண்ணவரும் விண்ணவரும் மகிழ்ந்து போற்றினர். பாடப்பாட ஞானசம்பந்தருக்குச் செங்குன்றூரில் தங்கி இறைவனைக் கும்பிடவேண்டும் என்ற ஆர்வம் பெருகிற்று. "இன்னிசை வண்தமிழ் பாடிக் கும்பிடும் ஆதரவுடன் இனிதமர்ந்தார்," என்று சேக்கிழார் உரைக்கின்றார். மேலும் கொங்கு நாட்டரசும் அவருக்கு இனிய வரவேற்பளித்து அவரது விருப்பம் நிறைவெய்துமாறு வேண்டிய ஆதரவு செய்தது. அதனைக் குறிப்பாக உணர்த்த வேண்டி, "அக்கோ நகரில் இனிது அமர்ந்தார்" என்று சேக்கிழார் பெருமான் செப்புகின்றார்.

"கும்பிடும் ஆதரவுடன் அக்கோ" நகரான கொடிமாடச் செங்குன்றூரில் இனிதிருந்த ஞானசம்பந்தரது இளமையுள்ளம், கொங்கு நாட்டில் விளங்கிய கோயில்கட்கெல்லாம் சென்று வழிபடும் விருப்பம் எய்துகிறது. அதே நிலையில் செங்குன்றூரை விட்டு நீங்காவாறு "கும்பிடும் ஆதரவு" எழுந்து தடுக்கிறது.

"மறக்கும் மனத்தினை மாற்றி எம் ஆவியை வற்புறுத்திப் பிறப்பில் பெருமான் திருந்தடிக் கீழ்ப் பிழையாத வண்ணம், பறித்த மலர் கொடு வந்துமை ஏத்தும் பணியடியோம்" என்று செங்குன்றூர்ப் பெருமானைப் பாடுவது ஒன்றே அவரது விருப்பமிகுதியைப் புலப்படுத்தும். இந்நிலையில் அவர் என் செய்வார்? செங்குன்றூரைத் தலைமை இடமாகக்கொண்டு சுற்றியுள்ள திருப்பதிகளைக் கண்டு பரவ முற்படுகின்றார். அங்கே இருந்து கொண்டு, அவர் சுற்றிப் பார்த்த திருப்பதிகளில் திருநணு அவரது ஞானக் கண்களுக்கு இனிய காட்சி வழங்குகிறது. அக்காட்சி "இன்னிசை வண் தமிழாய்ப்" பெருக்கெடுத்து வருகின்றது. அப்பெருக்குக்குக் காவிரியிலும் பூவானியிலும் வரும் பெருக்கு நிகராகாமையாற் போலும், இரண்டினுள் ஒன்றைக்கூட அப்பாட்டின் பெருக்குக் காட்டுகின்றிலது.

கூடற்றுறையின்கண் நின்று பவானியின் கரையை நோக்கின் அது பெரிய குன்று போல் காட்சியளிப்பது இன்றும் நாம் காண விளங்குவது. ஞானசம்பந்தர் கண் முன் அப்பகுதி பசுந்தரை போர்த்த பெருங்காடுகள் பரந்துளது. சாரலில் குரங்குகளும் பொழில்களில் வண்டும் தேனும், பக்கங்களில் மாமரங்களும் பெருகியுள்ளன. ஞானசம்பந்தர்க்கு அவை இனிய காட்சி தந்து மகிழ்விக்கின்றன. ஒருபால் மந்திகள் கூத்தாட, கூத்துக்கொப்ப வண்டினம் இசைபாட, பாடுவோர்க்குப் பொற்கட்டிகளைப் பரிசு தருவது போல மாமரங்கள் கனிகளை உதிர்க்கின்றன. இதனை,

*"அந் தண்சாரல்*
*வந்தார் மடமந்தி கூத்தாட*
*வார் பொழிலில் வண்டுபாடச்*
*செந்தேன் தெளி ஒளிரத் தேமாக்*
*கனியுதிர்க்கும் திரு நணுவே"*

என்று பாடுகின்றார்.

அகன்ற பசுமையான இலைகள் விரித்து விளங்கும் கானம் ஒருபால் தோன்றுகிறது. அவற்றின் இடையே மலையருவிகள் சலசல வென்ற ஒலி செய்து கொண்டு விழ்கின்றன. இருமருங்கும் மூங்கில்கள் வளர்ந்து முத்துக் காய்த்து அசைகின்றன. அருவியலைத்ததாலும் காற்று அசைத்ததாலும் மூங்கிலின் முத்துக்கள் உதிர்ந்து நீரில் மிதக்கின்றன. கூடற்றுறையில்







1. வேய்ங்குழல் அண்ணல் வேணுகோபாலர்

2. இலட்சுமி நரசிம்மரின் எழிலுறு தோற்றம்

3. பவளமலைக் கோபுரம்







1. அன்பருக்கெளிய அமுத லிங்கம்
2. கலை நலம் சிறந்த கற்றூண்
3. குளிர்ந்த அன்பர் ஆடுதுறை —
   இது கூடுதுறை





தேங்கி நிற்கும் நீரில் எழும் அலைகள் அம் முத்துக்களைக் கரையில் ஒதுக்குவது காண் போர் உள்ளத்தில் உவகை தோற்றுவிப் பதைக் கண்ட ஞானசம்பந்தர்,

*"இலை சூழ் கானில்,*
*ஒட்டம்தரும் அருவி வீழும்*
*விசைகாட்ட முந்தூழ் ஓசைச்*
*சேட்டார் மணிகள் அணியும்*
*திரை சேர்க்கும் திருநணாவே."*

என்று பாடுகின்றார்.

ஒருபால் செந்தாமரைகள் மலர்ந்து தேனைத் துளிக்கின்றன. அது பசித்துவரும் வண்டுக்குத் தேன் நல்கி விருந்தோம்பும் நல்லறத்தை நினைப்பிக்கிறது. அது காணும் வானோர் இது சிவபெருமான் செய்யும் அருளின் குறிப்பு என்று நினைந்து அவன்பால் அன்பு மிகுகின் றனர் என்று ஞானசம்பந்தர் நவில்கின்றார்.

*"மிடைந்துவானோர்*
*ஐயரவர் எம்பெருமான் அருள்*
*என்று ஆதரிக்கச்*
*செய்ய கமலம் பொழிதேன் அளித்து*
*இயலும் திருநணாவே."*

என்று பாடுகின்றார்.

ஒரு சார், சிவனடியார்கள் கொய்து வழிபடும் மலர்ச்சூழலை ஞானசம்பந்தர் பார்க்கின்றார். மலர்ந்த பூக்களின் தேனையுண்ணும் ஆசை யால் தேன் வண்டு இனிமையுறப் பாடுகின் றன; தும்பிகளும் அங்கும் இங்கும் ஓடியாடி முரலுகின்றன. இவற்றின் நுண்ணிய இசை இறைவன் அருளில் உள்ளத்தைப் படிவிப்ப தால், கேட்பவர் உயிரைப் பற்றி நிற்கும் வினை கள் கெடுகின்றனவாம். வினைதீர்ந்தாலன்றி ஞானம் விளங்காது எனத் தொல்காப்பியமும் சிவஞானபோதமும் தெளிவிக்கின்றன. இவ் வுண்மை விளங்க,

*"சோலை சூழ்ந்த*
*அத்தேன் அளியுண் களியால்*
*இறை முரல்வு ஆலத்தும்பி*
*தெத்தே எனமுரலக் கேட்டார்*
*வினைகெடுக்கும் திருநணாவே."*

என்று உரைக்கின்றார்.

இனி அங்கு வாழும் பெரு விலங்குகளை ஞானசம்பந்தர் காண்கின்றார். புலியும் மானும் இவையல்லாத பெரு விலங்குகளும் தம்மிற் பகைமையின்றி ஒருமுகப்பட்டு வழிபடும் அடியாரகளை வணங்கி நீங்குகின்றன. அது காணும் அப்பெருமக்களும் காமவெகுளி மயக்கங்களால் உண்டாகும் பகையுணர்வு நீங்கி, எளிதிற் செல்லலாகாத ஞானநெறியில் இனிது செல்லுதற்கு மனம் கொள்கின்றனர். இதனை,

*"புலியும் மானும்*
*அல்லாத சாதிகளும் கழல்மேல்*
*கைகூப்ப அடியார் கூடிச்*
*செல்லா அருநெறிக்கே செல்ல*
*அருள்புரியும் திருநணாவே."*

என்று செப்புகின்றார்.

ஒருபால், சிங்கங்கள் தம்மில் போர் செய்து தம்பால் நிலையாகவுள்ள வலியழிந்துபோகின் றன. அங்கே அவற்றின் குருதி தோய்ந்து கிடப்பதை யானைகள் கண்டு அஞ்சியோடி ஒளித்துக்கொள்கின்றன. கொடியோர்களின் கொடுமையைக் கண்டவிடத்து நல்லோர் அஞ்சி நீங்குவது போன்ற குறிப்பு யானையின் செயலில் புலப்படவே, ஞானசம்பந்தர் அந்த நிகழ்ச்சியை,

*"முனை சேர் சீயம்*
*மன்னீர்மை குன்றி அழலால்*
*வலிகுறைய அழியும் முன்றில்*
*செந்நீர் பரப்பச் சிறந்துகரி*
*ஒளிக்கும் திருநணாவே"*

என்று கூறுகின்றார். முனைசேர் சீயம் என்றது போர் செய்யும் சிங்கங்களை நினைப்பிக்கின்றது. அழல், கோபத்தோடு செய்யும் போர்.

மற்றொருபால் ஆற்றின் கரையில் நீர்ப் பெருக்கில் வரும் முத்துக்களும் அகிற் கட்டைகளும் கரையில் ஒதுங்குகின்றன. அரிய பொருள்களான முத்து முதலியவற்றைக் கண்டும் மனம் கொள்வதின்றி இறைவன் வழி பாட்டிலேயே உள்ளமுடைய மேலோர் இறை வனைப் போற்றிப் பரவுகின்றனர். அவ்விடத்தே தோன்றிப் பூக்கள் மலர்ந்து சுடர்விட்டுத்

நிகழ்கின்றன. இக்காட்சியும் அவரது திருவுள்ளத்தை மகிழ்வித்தமையால், அதனை,

*"ஓடும் நதி சேரும் நித்திலமும்*
*மொய்த்து அகிலும் கரையில் சாரச்*
*சேடர் சிறந்து ஏத்தத் தோன்றி*
*ஒளிபெருகும் திருநணுவே."*

என்று உவந்து பாடுகின்றார். தோன்றியின் பூ சுடர்போல விளங்கும் என்பதைச் "சுடர்விடு தோன்றி" என்று சங்கச் சான்றோர் அனைவரும் கூறுவது வழக்கம்.

இவ்வண்ணம் மக்களல்லாத அஃறிணை யுயிர்களைக் கண்டு மகிழ்ந்த ஞானசம்பந்தர், மக்களினத்தைப் பார்க்கின்றார். திருநணுவுடைய பெருமானை வழிபடும் மக்கட் கூட்டத்தில் விரதங்களாலும் அவற்றால் விளைந்த ஞானத்தாலும் உயர்ந்த நன்மக்கள் காணப்படுகின்றனர். அவரவர் நிலைக்கும் தகுதிக்கும் ஏற்ப விரதங்கள் வேறுபடுகின்றன. அதனால் அவர்களது வழிபாடும் வேறுபடுகிறது. இவ்வேறுபாடுகட்கிடையே, இறைவன் திருப்பெயர் ஒன்றையே அனைவரும் ஏத்தி வாழ்த்துகின்றனர். வேற்றுமைக்கிடையே தோன்றி விளங்கும் ஒருமைப்பாடு சம்பந்தர்க்கு இன்பம் தருகிறது. அதனை நயந்து,

*"கோயில் எங்கும்*
*நானாவிதத்தால் விரதிகள்*
*நன்னாமமே ஏத்தி வாழ்த்தத்*
*தேனார்மலர் கொண்டு அடியார்*
*அடிவணங்கும் திருநணுவே."*

என்று வியந்து புகழ்கின்றார். இறைவனது நாமம் ஓதுகின்ற அனைவர்க்கும் உயர்ந்த நலங்களைச் செய்வதாதலால் அதனை "நன்னாமம்" என்று சிறப்பிக்கின்றார். அது "நமச்சிவாய" எனவரும் திருப் பெயர். "நாதன் நாமம் நமச்சிவாய" என்று நமச்சிவாயத் திருப்பதிகத்தில் எடுத்து மொழிந்து, அதனை ஓதி நன்கு உணர்பவர் எய்தும் பயனைப் பல பாட்டுக்களில் ஞானசம்பந்தர் உரைக்கின்றார். இவ்வாறு ஓதுபவர்க்கு நன்மையெல்லாம் தருவது பற்றி அத்திருப்பெயரை "நன்னாமம்" என்று சுருக்கமாகக் காட்டுகின்றார்.

இனி, இத்திருநணுவில் விளங்கும் திருக்கோயில் ஞானசம்பந்தர் உள்ளத்தில் சிவபரம்பொருளின் பலவேறு இயல்புகளை நினைப்பிக்கின்றது.

அப்பெருமானுடைய புகழ் பாடத் தொடங்கியதும், எடுத்த எடுப்பில் அவன் மாதொரு பாகனாய் அருள் வழங்கும் திறத்தை,

*"பந்தார் விரல் மடவாள் பாகமா*
*நாகம் பூண்டு எருதேறி*
*அந்தார் அரவு அணிந்த*
*அம்மான்."*

என்று பாராட்டி அவன் உறையும் இடம் நணு என்று குறிக்கின்றார். இங்ஙனம் தொடங்கிய திருப்பதிகம், "நன்னுதலாள் பாகமாய் ஞாலம் ஏத்த மின்தாங்கு செஞ்சடையெம் விகிர்தர்," என்றும், "மையார் மணிமிடற்றன் மங்கையோர் பங்குடையான்", என்றும் பன்முறையும் குறிக்கின்றது. மங்கை பங்கனாவதன் கருத்தைப் பலவிடங்களில் ஞானசம்பந்தர் காட்டியுள்ளார். "அரிதரு கண்ணியாளை ஒருபாகமாக அருள் காரணங்கள் வருவார்" என்று கூறு முகத்தால் உயிர்கட்கு அருள் செய்வது கருதி மங்கைபங்கனாவது இறைவன் திருவுள்ளம் என்று அறிகின்றோம். பிறிதோர் இடத்தில், "பெண்ணின் நல்லாளொடு பெருந்தகையான இறைவன் இருத்தலால், நாம் மண்ணில் வைகலும் நல்ல வண்ணம் வாழலாம்; எண்ணில் மறுமையில் நல்லகதியும் பெறலாம்; கருதினால், நல்லனவெல்லாம் குறைவறப்பெறலாம் என்று ஒரு திருப்பாட்டில் தெரிவிக்கின்றார்.

இனி அப்பெருமான் பாம்பை மாலையாக அணிவதையும் எருதேறுவதையும் முதல் திருப்பாட்டில் எடுத்து மொழிகின்றார். பின்பு நெற்றியிற்கண்ணும் கையில் வீணையும் கொண்டு செய்வினையால் உண்டாகும் துயர்கட்கு இரையாகாமல் நம்மைப் பாதுகாக்கும் அவனது அருள் நலத்தை, "ஈட்டும் துயர் அறுக்கும் எம்மான்" என்று குறிக்கின்றார்.

இவ்வாறு துயர் அறுக்கும் வள்ளல் இன்னிசையால் அறம் பலவும் உரைக்கின்றான்;

அதனை, ''நன்று ஆங்கு இசை மொழிந்து'' என்று குறித்துப் பின் அவன் மங்கை பங்கனுகிச் செஞ்சடை முடியில் விளங்கத் திகழ்கின்ற திறத்தைக் காந்தாரப் பண்ணில் பாடிக் காட்டுகின்ருர். தாருகவனத்து நிலவிய வேதாந்தத்தைத் தெளிவித்துச் சித்தாந்த உண்மையை வெளிப்படுத்திய வரலாற்றை,

''கையில் மழுவேந்திக் காலில்
சிலம்பணிந்து கரித்தோல் கொண்டு
மெய்யில் முழுதணிந்த விகிர்தர்''

என்று அருளுகின்ருர்.

பெண்ணெரு பாகமாகிய பெருமான் மார்பில் வெண்ணூல் பூண்டு சடையில் கொன்றை சூடும் தனி நலத்தைப் பாடிய ஞானசம்பந்தர், வழக்கம் போல் முப்புரம் எரித்தது, இராவணனை மலையின் கீழ் அகப்பட நெரித்தது, மாலும் அயனும் தேட எரியுருவமானது ஆகிய வரலாறுகளை ஒவ்வொரு பாட்டில் முறைபாக உரைத்து அந்நாளைய சமண ஒழுக்கத்தை இகழ்ந்து பாடுகின்ருர். இறுதியில் இப்பாட்டுக்களை, ''சொல் வித்தகத்தால் இறைவன் திருநணு ஏத்து பாடல்'' எனக் குறிப்பிட்டு, இவற்றை, ''மொழிவார் பழியிலர் இம்மண்ணின் மேலே'' என்று பயன் கூறி முடிக்கின்ருர்.

இங்ஙனம் திருப்பதிகம் பாடித் திருநணு மேவிய பெருமானை வணங்கிய ஞான சம்பந்தர்க்கு மறுபடியும் திருச்செங்குன்றூர்க்கே சென்று சேரும் விருப்பம் மிகுகிறது. செங்குன்றூர் வந்து அடைகின்ருர். இதனைச் சேக்கிழார் அடிகள்,

''திருநணுவினை இறைஞ்சிப்
பைப் பாந்தன் புனைந்த வரைப்
பரவிப் பண்டு அமர்கின்ற
வைப்பான செங்குன்றூர்
வந்தணைந்து வைகினர்.''

என்று உரைக்கின்ருர்.

# நடராஜ வடிவத் தத்துவம்

[ந. ரா. முருகவேள், எம். ஏ., எம். ஒ. எல்.,
ஆசிரியர் : 'திருக்கோயில்']

## முன்னுரை :

எல்லாம் வல்ல இறைவன், தனக்கென ஓர் உருவும், ஒரு பெயரும் உடையவன் அல்லன். ஆயினும் நம் பொருட்டு எம்பெருமான் பல உருவமும், பல பெயரும் கொண்டு விளங்கி யருள்கின்றான். அங்ஙனம், சிவபெருமான் உயிர்களின் பொருட்டுக் கொண்டருளிய திருவுருவங்கள் பலவற்றுள், நடராஜ வடிவம் மிகவும் சிறந்து திகழ்வதொன்று.

நடராஜ வடிவம் நலங்கள் பலவும் நிறைந்தது; பழமையும் பெருமையும் வாய்ந்தது; தமிழ் நாட்டின் தனிப்பெரும் கலையியற் செல்வமாகக் கவினுற்றுப் புகழோங்கிப் பொலிவது; நடராஜத் திருவுருவம் இடம் பெறாத கோயில் எதுவும் இல்லை. எல்லாச் சைவக் கோயில்களிலும் நடராஜத் திருவுருவம் சிறப்புற வைத்துப் போற்றி வழிபடப் பெற்று வருகின்றது.

நடராஜப் பெருமானிடத்தும், அப்பெருமானின் திருவுருவச் சிறப்பிலும், சைவத் தமிழ்ச் சான்றோர்கள் எல்லோருமே மிகவும் ஈடுபட்டுத் திளைத்து இன்புறுகின்றனர். **அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர், இராமலிங்க அடிகள்** போன்ற சான்றோர்கள் அனைவரும், நடராஜப் பெருமானிடத்தில் பெரிதும் ஈடுபட்டுப் பரவித் திளைத்து மகிழ்ந்துள்ளனர். **சிலப்பதிகாரம், கலித்தொகை** போன்ற பழம் பெரும் சங்க காலப் பனுவல்களிலும் நடராஜப் பெருமானைப் பற்றிய புகழுரைகள் காணப்பெறுகின்றன.

## அறிஞர்களின் புகழுரை :

இங்ஙனம் பண்டைப் பெரு நூல்களும் பெரியோர்களும் மட்டுமே யன்றி, இன்றைய உலகிற் புகழோங்கிய கலைஞர்களும் அறிஞர்களும் கூடக் கண்டு வியந்து மகிழ்ந்து போற்றிப் புகழும் வண்ணம், நடராஜ வடிவம் சிறந்துயர்ந்து திகழ்கின்றது. " **என் அத்தன் ஆடல் கண்டு இன்புற்றதால் இவ் இருநிலமே**" எனத் திருநாவுக்கரசர் பாடுதற்கு ஏற்ப, இன்றைய உலகம் முழுவதுமே நடராஜ வடிவின் நலத்தினை நயந்தினிது பாராட்டி, வியந்து இன்புற்று நிற்கின்றது எனலாம்.

(1) உலகப் புகழ் பெற்ற கலையியற் பேரறிஞர் ஆகிய திரு. **ஆனந்த குமாரசுவாமி** அவர்கள், "நடராஜ வடிவின் நலங்கள் அளப்பரியன. இத்தகையதொரு சிறந்த வடிவத்தினை, இந்நாளில் எத்தகைய பெருங் கலைஞனும் கூடக் கருதி யுணர்ந்து படைத்தல் இயலாது. இது வெறும் கவிதை யன்று; அறிவியல் நலமும் அமைந்தது. இத் திருவுருவம் பக்தர்களுக்கும், பாமரர்களுக்கும், விஞ்ஞானிகளுக்கும், மெய்ஞ்ஞானிகளுக்கும் எல்லாம், பெரு வியப்பையும் பேரீடுபாட்டையும் விளைத்து மகிழ்வித்து வருகின்றது. காலமும் இடமும் கடந்து, எல்லா நாடு மொழி சமயம் சார்ந்த மக்களாலும், போற்றப்படத் தகுந்ததாய்த் திகழ்கின்றது. இத்தகைய அரும்பெருஞ் சிறப்புகள் மிக்க இத் திருவுருவத்தினை, முதன் முதற் கருதிப் படைத்துதவிய அருட் பெருஞ் சான்றோர்கள் ஆகிய கலைஞர்களின், நுண்மான் நுழைபுலம் சாலவும் வியந்து போற்றுதற்குரியது. எனவே எத்தனையோ பல தலைமுறைகளாக நடராஜ வடிவம் மக்களின் உள்ளங்களை யெல்லாம் கவர்ந்து நின்று, வழிபடப் பெற்று வருதலில் வியப்பொன்றுமில்லை எவ்வளவோ ஐயப்பாடுகள் கொள்ளுவதிலும், எத்தனையோ பல குறைபாடுகளைக் காண்பதிலுமே பழகிப் பயின்றுள்ள நாமும் கூட, நடராஜரை வழிபட்டுத் தான் வருகின்றோம் !"

"நடராஜ வடிவம் கலைநலம் சிறந்து கவர்ச்சி மிக்குத் திகழ்வது. அதன் ஒவ்வொரு பகுதியும் கவின்மிக்குப் பல தத்துவ நுட்பங்களை உள்ளடக்கிக் கொண்டு ஒளிவிட்டு விளங்குகின்றது."

(2) உலக முதல்வனின் உருவ வெளிப்பாடே நடராஜ வடிவம். அருவநிலையில்

உள்ள பரம்பொருள், உருவ நிலையிற் கட்புல னுகும் வண்ணம் குறைவிலா நிறைவாக அமைந்த திருவுருவமே, நடராஜர் ஆவர். இலயம், தொழில், இயக்கம் என்பனவற்றை அவர் குறிக்கின்ருர். கடவுள் ஒரு படைப்பி யற் கலைஞர்!" எனப் பேரறிஞர் திரு எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள் கூறுகின் ருர்.

(3) "நடராஜ வடிவம் பற்றிய கருத்துருவாக் கம், இந்திய மக்களின் பேரறிவின் பெருவிளை வாய்ப் பல நலங்கள் பொதிந்து ஒளிர்வதாகும். கலையிலும் அறிவிலும், தத்துவமும் சமயமும் ஒருங்கே கலந்து இயைந்ததன் பயன்தான் அத்திருவுருவம்! உண்மை என்பது வேற்று மையில் ஒற்றுமை காண்பதேயாகுமாயின், நடராஜ வடிவத்தைக் காட்டிலும், ஒற்றுமையும் வேற்றுமையும் ஒருங்கே கலந்த சிறந்த நல்ல இணைப்பு, வேறு எதுவுமே இல்லை. எல்லாக் காலமும் இடமும், எல்லா இயக்கமும் முடக்க மும், அவனிடத்திலேயே அடங்கிக் கிடக்கின் றன!" என்று, திரு எஸ். வி. இராமமூர்த்தி என்னும் சிரிய அறிஞர் இயம்புகின்ருர்.

(4) சுவாமி விவேகாநந்தர் அவர்களின் மாணவர்கள் பலருள் தலைசிறந்த ஒருவரும், 'பிரபுத்த பாரதம்' என்ற ஆங்கில இதழின் ஆசிரியருமாக விளங்கி யிருந்த திரு பி. ஆர். இராஜம் ஐயர் என்னும் பெருந்தகை யார், "மனித வடிவில் அமைந்த கடவுளின் திருவடிவங்கள் அனைத்தினிலும், இதுகாறும் மனிதன் அறிந்தவனவற்றுள்; நடராஜ வடிவமே மிகவும் சிறந்த தொன்ருகும். ஏனைப் பிற தலங்களில் எல்லாம் எழுந்தருளச் செய்யப் பெற்றுள்ள நடராஜர் திருவுருவப் படிமைகள் எல்லாவற்றிற்கும், மூல முதற் படிமையாகத் திகழ்வதாய்ச் சிதம்பரத்தில் விளங்கும் நடராஜத் திருவுருவப் படிவமே, நாம் அறிந்தனவற்றுள் மிகவும் தலை சிறந்ததாய்ப் பெரிதும் உள்ளே மூச்சி இன்ப உணர்வினை ஊட்டுந் தகைய தாகும். வெறும் கலைநோக்கு ஒன்று மட்டுமே கொண்டு ஆராய்ந்தாலும்கூட, மிகவும் திருத்த மான — உயிர்த்தன்மையுடைய — கவர்ச்சி நிறைந்த இத் திருவுருவினைப் போன்று வேருெரு படிமத்தினைக் காண்டல் அரிது" எனக் கட்டுரைத்துப் போற்றுகின்ருர்.

### திருநடனச் சிறப்பு :

இறைவன் கலைகளின் முதல்வன்; கலை யுருவினன்; கலைகள் அவனிட மிருந்தே தோன்றுகின்றன. இறைவன் ஒரு சிறந்த பெருங் கலைஞன் என்பதையே நடராஜ வடிவம் நலமுற உணர்த்துகின்றது. 'மனிதன் பேசத் தொடங்கும் முன்னரே பாடத் தலைப்பட்டான்; பாடுவதற்கும் முன்னரே ஆடக் கற்றுக் கொண்டுவிட்டான்' என்று ஆராய்ச்சியாளர் கள் கூறுவர். அம்முறையில் நோக்கினுல், எல்லாக் கலைகளுக்கும் முற்பட்டுப் பழமையும் பெருமையும் முதன்மையும் மிக்கதாக விளங் கும் கலை, நடனக் கலையே என்பது தெளி வாகும்.

இத்தகைய நடனக் கலையின் தெய்வமாக அமைந்து, அண்ட வெளியினையே நடன மேடையாகக் கொண்டு, தானே காண்பவ னும் நடிப்பவனுமாக நின்று, பல்வேறு வகை யான நடனத் திறங்களை இறைவன் செய்தருளு கின்ருன். "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்றபடி வான் வெளியில் கோள்களும் (Planets) மீன்களும் (stars) முத லிய அண்ட கோடிகள் யாவும் அசைவுற்று இயங்கும் பொருட்டு, இறைவன் தான் அசைந்து யாவற்றையும் இயக்குவிக்கின்ருன்.

மேலும் தில்லைச் சிதம்பரத்தில் இறைவன் இத்திருநடனம் இயற்றுதற்குக் காரணம், அஃது இவ்வுலகில் நடுவிடமாக இருத்தலே யாம்.

*விண்ணுக்கும் மேல்வியன் பாதலக்கீழ்*
*விரிநீர் உடுத்த*
*மண்ணுக்கு நாப்பண் நயந்து தென்தில்லை*
*நின்ருேன்*
**—திருக்கோவையார்**

என மாணிக்கவாசகர் கூறுகின்ருர். இவ் வாறே திருமந்திரம், கோயிற் புராணம், திரு வாதவூரடிகள் புராணம் முதலியனவும் கூறு தல் காணலாம்.

### சைவ சித்தாந்தம் :

நடராஜ வடிவம் பற்றிய பல தத்துவ நுட்பங்களைக் குறித்துச் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினுன்களுள் ஒன்றும், திருவதிகை மனவாசகங் கடந்தார் என்பார் இயற்றியதும் ஆகிய ''உண்மை விளக்கம்'' என்னும் உயரிய நூல் பின்வருமாறு அழகுற உணர்த்துகின்றது.

(1) இறைவனின் உடுக்கையால் ஆக்கல்; அமைத்த கையாற் காத்தல் ; ஏந்திய நெருப்பினுல் அழித்தல் ; ஊன்றிய திருவடியால் மறைத்தல் (திரோதம்) ; எடுத்த திருவடியால் அருளல் (முத்தி, அனுக்கிரகம்) ஆகிய ஐந்து தொழில்கள் நடைபெறுகின்றன.

(2) இறைவன் தனது துடியைக் கொட்டுவதால் ஆன்மாக்களின் மாயையினை உதறுகின்ருன் ; ஏந்திய நெருப்பினுற் கன்ம மலத்தினைச் சுடுகின்ருன் ; ஊன்றிய திருவடியால் ஆணவ மலத்தினை அழுத்தித் தேய்விக்கின்ருன் ; தூக்கிய திருவடியால் உயிர்களைப் பிறவிக் கடலினின்று எடுத்து இன்பக் கடலில் திளைக்கச் செய்கின்ருன் ; இத்தகைய திரு நடனத்தைக் கண்டு விரும்பித் தொழுபவர்களுக்குப் பிறவித் துயர் நீங்கும்.

(3) இறைவன் ஐந்தொழிற்றிருக் கூத்து இயற்றுங்கால், அவனது திருமேனி ஐந்தெழுத்திஞலேயே அமைகின்றது. இறைவன் 'மந்திர சொரூபி' யாதலின், அவன்றன் திருவுருவம் திருவைந்தெழுத்து மந்திரத்திஞலேயே அமைவதாகின்றது. திருவடியில் ந; வயிற்றில் ம; தோளில் சி; முகத்தில் வ; திருமுடியில் ய. இவ்வமைப்பு ''தூல பஞ்சாக்கரம்'' எனவும், 'இலயாங்கம் எனவும் கூறப்படும்.

(4) இனி 'சிவயநம' என்பது சூக்கும பஞ்சாக்கரம் என வழங்கும். அது நடராஜ வடிவத்தில் பின்வருமாறு அமைந்து விளங்குகின்றது ! துடியில் சி; வீசும் கரத்தில் வ ; அபய கரத்தில் ய ; ஏந்துகின்ற நெருப்பில் ந; அடிக்கீழ் முயலகனில் ம. இவ்வமைப்பு 'போகாங்கம்' எனப்படும். பிற திருவுருவங்களைப் போலத் தனியே பிரித்தெடுக்கக் கூடிய நிலையில் இல்லாமல், நடராஜ வடிவத்திற் பிரிவற இயைந்து கூடியே இருக்கும். திருவாசியானது பிரணவம் ஆகிய ஓங்காரத்தையும், இத்திருவாசியின் சுடர்கள் 51 எழுத்துக்களையும் சுட்டுகின்றன.

### அண்டமும் பிண்டமும் :

இனி வேறு பலவும் ஈண்டு எண்ணி யுணர்தற்கு உரியனவாக உள்ளன. உலகம் ஆகிய அண்டம் (Macrocosm) அமைந்திருக்குமாறு போலவே, நம் உடம்பு ஆகிய பிண்டமும் (Microcosm) அமைந்துள்ளது. இறைவன் அண்ட வெளியில் திருநடனம் புரிதல் போலவே, நம் உடம்பிலுள்ள பிண்டத்தின் கண்ணும் நடனம் புரிந்தருள்கின்ருன். அண்ட வெளி நடனம் தில்லைச் சிதம்பரத்தில் நிகழ்கின்றது. பிண்டத்தினுள் உடம்பின் கண்ணே நிகழும் நடனம் நம்முடைய இருதயத்தில் நடைபெறுகின்றது. அண்டத்துக்குச் சிதம்பரம் போலப் பிண்டத்துக்கு இருதயம் ஆகிய நெஞ்சப் பை (Heart) இலங்குகின்றது. இருதயத்தின் அசைவும் இயக்கமும் நின்று விட்டால், உடல் செயலற்றுப் பிணம் ஆகும். அவ்வாறே தில்லைச் சிதம்பரத்தில் இறைவனின் திருநடனம் நிகழா தொழியின், அண்டங்கள் அசைவற்று இயங்காமல் நின்று அழிந்தொழிந்து போகும்.

### முடிவுரை :

இங்ஙனமெல்லாம் 'சிந்திப்பரியன, சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப் பொழிவன' என்னும் நிலையில், பற்பல உயர்ந்த தத்துவ நுட்பங்களை யுணர்த்தி நிற்கும் நடராஜ வடிவத்தின் மாட்சிமையை அளவிட்டு உரைப்பதரிது !

*''உலகமே உருவம் ஆக, யோனிகள் உறுப்பதாக,*
*இலகுபேர் இச்சா ஞானக் கிரியையுட் சரணம் ஆக,*
*அலகிலா உயிர்ப்பு லன்கட்கு அறிவினை ஆக்கி, ஐந்து*
*நலமிகு தொழில்க ளோடும் நாடகம் நடிப்பன் நாதன் !''*

—**சிவஞான சித்தியார்.**

என அருள் நந்தி சிவாசாரியார் கூறுமாறு போல, உலகமே உருவமாகவும், பலவகைப் பிறப்பு வகைகளே உறுப்பாகவும், இச்சை ஞானம் கிரியை என்பனவே உட்கருவிகள் ஆகவும் கொண்டு, ஆருயிர்களுக் கெல்லாம் அறிவினை நெறி முறையே வளருமாறு செய்து, ஐந்தொழில்களை இயற்றி வரும் அருட்பெருந் தெய்வம் ஆகிய நடராஜப் பெருமானின் திருவடிகளை, இடைவிடாது அன்புடன் வழிபட்டு, நாம் அனைவரும் நலம் பலவும் பெற்று உய்வோமாக !

# திருநணுக் காட்சி

**கி. வா. ஜகந்நாதன்**

திருஞானசம்பந்தப் பெருமான் திருநணு ஆகிய பவானித் திருத்தலத்திற்கு எழுந்தருளினர். அக்காலத்தில் இரு மருங்கும் அழகிய பூஞ்சோலைகள் ஓங்கி வளர்ந்துள்ள பாங்கையும் இரண்டு நதிகளின் சங்கமத்தையும் கண்டார். அவ்விடம் எங்கே பார்த்தாலும் இயற்கை எழில் தவழ்ந்த சூழ்நிலையாக அமைந்திருந்தது. எம்பெருமான் இந்தப் பவானி கூடலில் இயற்கைக் காட்சிக்கு நடுவே அழகு பெற வீற்றிருந்தான். அவனைத் தரிசித்து அங்கே சுற்றுமுள்ள இயற்கையின் எழிலையும் கண்ணாரக் கண்டு தம்முடைய திருவாக்கால் ஒரு பதிகம் பாடினர் ஞானசம்பந்தப் பெருமான். ஆண்டவன் திருமேனி லாவண்யத்தையும், அவன் எழுந்தருளி யிருக்கும் இடத்தில் இயற்கை எழில் நலங்களையும் பல படியாகப் பாடுவதில் பேராற்றல் உள்ளவர் சம்பந்தப் பெருமான். சின்னஞ்சிறு குழந்தை, தான் காணும் பொருள்களில் எல்லாம் அழகைக் கண்டு, புதுமையைக் கண்டு வியப்பது போல ஞானசம்பந்தப் பெருமானின் இயல்பு அமைகிறது. அவருக்கு எல்லாமே அழகாகத் தோன்றுகிறது.

திருநணுவில் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானை முதலில் பாடுகிறார். அந்தப் பெருமானுடைய ஒரு பாகத்தில் எம்பெருமாட்டி எழுந்தருளியிருக்கிறாள். அவள் எப்போதும் சுறுசுறுப்பும், விளையாட்டுப் பாங்கும் அமைந்தவள். பழங்காலத்தில் பெண்கள் விளையாடும் விளையாடல்களில் ஒன்று பந்தாடல். பெரும்பாலும் மங்கையர்களே பந்தாடுவார்கள். கையில் பந்தை எடுத்து வீசி ஆடுகின்ற அவர்களை அந்த விளையாட்டாலேயே சிறப்பித்துக் கூறுவது ஒரு பழக்கம். பந்தாடும் மங்கை, பந்தார் விரலி, பந்தணை விரவாள், கந்துகக் கிரீடாம்பிகை என்று சொல்லி அழைப்பது ஒரு மரபு. எம்பெருமான் பக்கத்தில் எழுந்தருளி யிருக்கும் வேதநாயகி பந்தார் விரல் மடவாள் ஆகக் காட்சி அளிக்கிறாள்.

பந்துகளை வீசி விளையாடுகின்றவளாகத் தோற்றுகிற அந்தப் பெருமாட்டி எல்லா அண்டங்களையும் பந்தாக வைத்து விளையாடுபவள்தானே? சாட்டையில்லாப் பம்பரம் போல அவற்றை எல்லாம் ஆட்டி வைக்கும் பராசக்தி. அந்தப் பெரிய காரியத்தையே தான் விளையாடுகின்ற பந்து விளையாட்டினால் காட்டுகிறாளோ? ஆம். அவள் நாம் காணும் பந்தையும் விளையாடுகிறாள். நாம் காண முடியாத ஆயிரக் கணக்கான அண்டங்களையும் எங்கும் எப்போதும் சுழலச் செய்து விளையாடும் அருள் விளையாட்டையும் செய்கிறாள். அந்தப் பெருமாட்டியைத் தன் இடப் பாகத்தில் வைத்திருக்கிறான் சங்கமேசுவரன் ஆகிய திருநணு இறைவன். அமுதனைய பெருமாட்டி அவன் பாகத்து அமர்ந்திருப்பதனால் அவனுக்கு எதனாலும் துன்பம் வராது. அமுதமயமாக இருக்கின்றவன் ஆகையால் எத்தகைய நஞ்சானாலும் அவனை ஒன்றும் செய்யாது. அரவை அவன் தன் திருமேனியில் புரளவிட்டிருக்கிறான். அணிகலன்களைப் போலப் பாம்புகளை அணிந்திருக்கிறான். முடியின் மேலே பாம்பு, காதில் பாம்பு, கையில் பாம்பு, திருமேனியின் பல அங்கங்களிலும் நாகம் பூண்டு விளங்குகிறான். பாம்பு என்றால் யாவரும் அஞ்சுவார்கள். 'பாம்பு என்றால் படையும் நடுங்கும்' என்பது பழமொழி. யாவரும் அஞ்சுவதற்குரிய பொருளைக் கண்டு அஞ்சாமல் அதனைத் தனக்குப் பணியாக அமைத்துக் கொண்டவன் சிவபெருமான். எத்தகையவர்களுக்கும் அச்சம் தரு

கின்ற பொருள்கள் எல்லாம் சிவபெருமானுக்கு அழகாகின்றன. அவனுடன் இருக்கின்ற பூத கணங்கள் பிறருக்கு அச்சத்தைத் தர அவன் அவற்றினிடையே மகிழ்ச்சியோடு எழுந்தருளியிருக்கிறன். பிறர் அஞ்சும் நாகத்தைப் பணியாக ஏற்றுப் பிறருடைய அச்சத்தை நீக்கும் நிலையில் இருக்கிறன். எல்லோரும் நாகம் அளித்த மணியை அணிந்து கொள்வார்கள். அந்த மணியைத் தரும் நாகத்தையே பணியாக அணிந்திருக்கிறன் சிவபெருமான்.

அவன் ஏறுகிறது இடபம். அறமே இடபமாக இறைவனைத் தாங்குகிறது என்று சொல்வார்கள். உலகத்தைக் காப்பாற்றுவது அறம். அந்த அறத்தைக் காப்பாற்றுபவன் சிவபெருமான். தன்னைத் தாங்குகின்ற பெருமானை விடையாகி நின்று தாங்கி நன்றிக் கடனுற்றலாம் என்று நினைத்தது போலும். அதனுல் அறக்கடவுளே எருதாக நின்று இறைவனைத் தாங்குகிறது. சிவபெருமானுடைய திருமார்பில் தார்போல விளங்குகிறது பெரிய அரா. அது பார்ப்பதற்கு அழகாக இருக்கிறது. ஒரு பாதியில் பச்சைத் திருமேனியையுடைய பிராட்டியையும், திருமுடி முதலியவற்றில் நாகத்தையும், திருமார்பில் நாகமாகிய மாலையையும் அணிந்து கொண்டு விடையின் மேல் எழுந்தருளுகிற பெருமான் இப்போது திருநணுவில் தங்கியிருக்கிறன். எல்லோரும் விரும்புகின்ற பெண்மையை ஒரு பாகத்தில் உடையவன். எல்லோரும் அஞ்சுகின்ற பொருளையும் உடன் வைத்திருக்கிறன். அவனுக்கு விருப்பு வெறுப்பு இல்லை. மென்மை வன்மை என்ற வேறுபாடு இல்லை. அமுது விடம் என்ற வேற்றுமை இல்லை. எல்லாம் கடந்து நிற்கும் அந்தப் பெருமானுக்கு யாவுமே உரியன. அவனுல் வெறுக்கத்தக்க பொருள் ஒன்றும் இல்லை. எல்லாரும் விலக்கி ஒதுக்கும் பொருள்களை அவன் தன்னுடையனவாக ஏற்றுக்கொண் டிருக்கிறன். அவன் எல்லாப் பொருளுமாக நிற்கிறன். ஆகையால் அவனுக்கு விலக்கான பொருள் ஒன்றும் இல்லை. பிறர் வேண்டாமென்று விலக்கிய பொருள்கள் எல்லாம் அவனிடத்தில் வந்து அடைக்கலம் புகுகின்றன. இந்த எண்ணங்களை அந்தப் பெருமானுடைய திருக்காட்சி தோற்றச் செய்கிறது.

இனி, அவன் எழுந்தருளியிருக்கும் இடம் எப்படி இருக்கிறது? அவனுடைய திருமேனியில் அஞ்சுவதற்குரிய பொருள்களும், விரும்புவதற்குரிய பொருள்களும் இருந்தாலும் அவன் எழுந்தருளியிருக்கும் இடம் அழகான இயற்கை நாடக சாலையாக விளங்குகிறது. நாடக சாலையில் கூத்தாடுவோரும், பாடுவோரும், பரிசு தருவோருமாக இருப்பதைக் காணலாம். மலைப்பகுதிகளிலிருந்து வந்த மந்திகள் மிகச் சிறந்த பொழில்கள் இருப்பதனுலே இங்கே தங்கிவிடுகின்றன. அழகிய தண்ணிய சாரலில் பழகின அந்த மந்திகள் இங்கேயும் அந்தக் குளிர்ச்சியைக் கண்டு ஆனந்தக் கூத்தாடுகின்றன. இளைய மந்திகள் அவை. ஆகவே மிக மிடுக்காகக் கூத்தாட வல்லவை. விரிந்து செறிந்த வளச் சோலை ஆதலால் அவை மனம் போலக் கூத்தாடிக் களிக்கின்றன.

இந்த இயற்கை நாடக அரங்கில், கூத்தாடும் மகளிரைப் போல மந்தி விளங்க அந்த நாடகத்திற்கு ஏற்றபடி இசை எழுப்புவர்களைப் போல வண்டுகள் பாடுகின்றன. பூம்பொழில் முழுவதிலும் மணக்கும் மலர்க் கூட்டங்கள் வண்டுகளுக்கு இடமளிக்கின்றன. மலர் நிரம்பிய இடத்தில் வண்டுகள் வந்து பாடும். அந்த மலர்கள் யாவும் வண்டுகளுக்குத் தேன் ஏந்தும் கிண்ணங்கள்போல இருக்கின்றன. வண்டுகள் பாடுவதற்குக் காரணமே அந்தத் தேனில் உள்ள நசை தான்,

மந்திகள் கூத்தாடவும், வண்டுகள் பாடவும் நாடகசாலை போல அமைகிறது அந்தப் பூம்பொழில். இப்போது பன்னீர் கூடத் தெளிக்கிறார்கள். ஆம், சிவந்த தேன் மலரிலிருந்து தென்றலால் நுண்டுனியாகப் பரவுகின்றன. அப்படித் தெளிக்கும் காட்சி நமக்குத் தெரிகிறது. இந்த நாடகசாலையில் குளிர்ச்சியை உண்டாக்குவதற்காக மேலே இருந்து யாரோ பன்னீர்த் துளியைத் தெளிப்பதுபோல இந்தக் காட்சி தோன்றுகிறது.

இப்படி உள்ள நாடகசாலையில் கூத்தாடுபவர்களுடைய நடனச் சிறப்பைக் கண்டு அவ்வப்போது பரிசு அளிப்பவர்களும் இருக்க வேண்டும் அல்லவா? பழைய காலத்தில் ஊர்களில் நடக்கும் நடனத்தில் ஒரு பெண் ஆடினால் அப்போது அவையில் உள்ளவர்கள் அவள் கையில் பரிசு அளிப்பது வழக்கம். அதுபோல இங்கே ஒரு நிகழ்ச்சி நடந்துகொண் டிருக்கிறது. மட மந்தி கூத்தாட வண்டு பாட, தெளிந்த செந்தேன் துளிகள் ஒளிர அயல் நிற்கின்ற மா மரங்கள் எல்லாம் இனிய கனிகளை உதிர்க்கின்றனவாம். அவை தேமாங்கனிகள். மாவில் புளிப்புச் சுவையுடைய மா வேறு. இனிப்புச் சுவையுடைய மா வேறு. இனிப்புச் சுவையுடைய மாவைத் தேமா என்று சொல்வார்கள். இங்கே சூழ நின்ற தேமா மரங்கள் இனிய கனிகளை உதிர்க்கின்றன. நாடகசாலையில் கூத்தாடுபவர்களுக்குப் பரிசு தருவனபோல அவை தோற்றுகின்றன. நல்ல முயற்சி செய்வாருக்குச் சிறந்த பலனைத் தரும் சூழ்நிலை ஆதலின் மந்திகள் கூத்தாட, அவற்றுக்குத் தேமாங்கனிகள் கிடைக்கின்றன. வண்டுகள் பாட அவற்றுக்குச் செந்தேனும் கிடைக்கின்றன. கைமேல் பலன் கிடைக்கும் அரிய தலம் இது என்பதை இந்தக் காட்சிகள் காட்டுகின்றன.

இறைவனை எண்ணாமலேயே இங்குள்ள இயற்கைச் சூழ்நிலையால் தூண்டப்பெற்று மந்தி கூத்தாடுகிறது. வண்டு பாடுகின்றது. அவை தமக்கு ஒரு பயன் உண்டென்று எதிர்பார்க்காமல் அவற்றைச் செய்தாலும் தேமாங்கனியும் செந்தேனும் அவைகளுக்குக் கிடைக்கின்றன. இறைவன் எழுந்தருளியிருக்கும் இந்தத் திருத்தலத்தில், இது வேண்டுமென்று எதிர்பாராமல் வந்து சிறு தொண்டு புரிந்தாலும் அதற்குப் பெரும் பயன் உண்டு என்பதை இந்தக் காட்சி நமக்குப் புலப்படுத்துகிறது. இறைவன் தனக்கு உரியதாக நாகத்தை அணிந்து கொண்டிருந்தாலும், தான் இருக்கும் இடத்தில் வந்து பழகுகிற விலங்கினங்களுக்கும் இனிய போகத்தைத் தருவான் என்பதை இந்தக் காட்சி காட்டுகிறது. விலங்கினங்களுக்குரிய போகங்களில் சிறந்தது உணவு தான். பருவத்தினால் வேறு ஆசைகள் அவற்றுக்கு இருந்தாலும் எல்லாப் பருவத்திலும் அவை விரும்புவது உணவைத்தான். ஆகவே கூத்தாடும் மடமந்தியும், பாடும் வண்டினமும் தங்களுக்குரிய இனிய உணவாகிய தேமாங்கனியையும் இனிய செந்தேனையும் இங்கே பெறுகின்றன. இறைவனுடைய திருக்காட்சியைக் கண்டு வழிபடும் மக்கள் அதனுடைய பலன்களாகிய இனிய போகங்களையும், இறைவனுடைய திருவருளையும் ஒருங்கே பெறுவார்கள் என்ற குறிப்பையும் இந்த நிலை காட்டுகிறது.

பந்தார் விரல் மடவாளைப் பாகமாகக் கொண்டு காணுவாருடைய உள்ளம் குளிரும்படியாகக் காட்சி யளிக்கும் எம்பெருமான், நாகத்தைப் பூண்டு, அதனையே மாலையாக அணிந்து விடையின் மேல் ஏறி வருகிறான். அவனுடைய தோற்றத்தில் நயமும், பயமும் உண்டாகின்றன. ஆனாலும் அவன் எழுந்தருளியுள்ள இடமோ விலங்

கினங்களும் எதிர்பாராத இன்பத்தை அடையும் அற்புதமான தலமாக அமைந் திருக்கிறது. ஆகவே, இங்கே வந்து தரி சனம் செய்பவர், கோயிலின் அகத்திலுள்ள இறைவன் காட்சியையும், புறத்திலுள்ள இயற்கையின் எழிலையும் கண்டு களிக்க லாம்.

இப்படி இறைவனுடைய திருக்கோலத் தையும், இயற்கையின் அழகையும் ஒருங்கே அமைத்துப் பாடத் தொடங்குகிறார் சம்பந்தப் பெருமான். அவர் பாடிய பதிகத் தின் முதல் பாட்டில் இந்த அழகிய காட்சி களைக் காணலாம்.

*பந்தார் விரல் மடவாள் பாகமா நாகம்பூண்*
*டேறதேறி*
*அந்தார் அரவணிந்தஅம்மா னிடம்போலும்*
*அந்தண்சாரல்*
*வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில்*
*வண்டு பாடச்*
*செந்தேன் தெளியொளிரத் தேமாக்*
*கனிஉதிர்க்குந் திருநணுவே.*

(பந்து தங்கிய விரலையுடைய வேதநாயகி ஒரு பாகத்தில் அமர்ந்திருக்க, அணிகலனாக நாகத்தைப் பூண்டு, விடையின்மேல் ஏறி, அழகிய மார்பில் மாலையாகப் பாம்பை அணிந்த இறைவனுக்குரிய இடம், அழகிய தண்ணிய சாரலிலிருந்து வந்து தங்கிய இளைய பெண் குரங்குகள் கூத்தாட, நீண்ட சோலைகளில் வண்டுகள் பாட, சிவந்த தேனின் தெளிந்த துளி எங்கும் விளங்க, தேமா மரங்கள் கனிகளை உதிர்க்கும் திரு நணு ஆகும்.

ஏறது : அது, பகுதிப் பொருள் விகுதி. தார் – மார்பின் மாலை. போலும் : அசை, சாரலிலிருந்து வந்து. தெளி - தெளிவு ; தெளிந்த துளி. தேமா : எழுவாய், தேமா உதிர்க்கும்.)





1. கோபியில் அமைந்த திருமணக் கோல மாளிகை
2. பவளமலைக் கோயில்
3. பவளமலையில் பாங்குற அமைந்த மண்டபம்
4. சக்தி சர்க்கரை ஆலை, ஆப்பக்கூடல்





1. வலம்புரி கணபதி —
நலந்தரு குணபதி

2. பிணிதீர்க்கும் பெம்மான்
(சுரஹரேசர்)



3. காயத்திரி லிங்கக்
கோயிலும் காயத்திரி மடுவும்

# கம்ப இராமாயணத்தில் பக்திச் சுவை

திரு 'மாயாவி'

இராமாயண காவியத்தை முதன் முதலில் வடமொழியில் இயற்றிய வால்மீகி முனிவர் தம் காப்பிய நாயகன் கடவுளின் அவதாரம் என்று ஆங்காங்குக் காட்டி வந்தபோதிலும், பெரும்பாலும் அவரை மானுடரில் ஓர் உத்தம புருஷனாகவே வருணித்துச் செல்கிறார். ஆனால், அதன்பின் பலகாலம் இடைவெளி விட்டுத் தம் இராம காதையைத் தீந்தமிழில் இயற்றிய கம்ப நாட்டாழ்வாரோ, இராமனை உத்தமப் புருஷனாக மட்டுமின்றிக் கடவுளின் அவதாரமாகவும், வழிபடும் தெய்வமாகவும் உருவாக்கித் தந்துள்ளார். அவதார மூர்த்தியாகிய இராமனைப் பற்றிக் கூறும் இடங்களில் எல்லாம், கம்பர் பக்திச் சுவை வெளிப்பட பரவசமும் உள்ள நெகிழ்வும் கொண்டே பாடுகிறார்.

*முப்பரம் பொருளுக்குள் முதலை, மூலத்தை,*
*இப்பரம் துடைத்தவர் எய்தும் இன்பத்தை,*
*அப்பனை, அப்பினுள் அமிர்தம் தன்னையே*
*ஒப்பனை, ஒப்பனை உரைக்க ஒண்ணுமோ?*

என்று 'மணக்கோலம் கொள்ளும் இராமனை வர்ணிக்கவும் இயலுமோ?' என்று வர்ணிக்கும் இந்தப் பாடலில், தம் காப்பிய நாயகனை ஹரி, ஹரன், அயன் ஆகிய மூவரிலும் முதல் வைத்துக் காட்டுகிறார்.

அவ்வாறே தம் காப்பியத்தில் வரும் பிற பாத்திரங்களையும் அவர், இராமபிரானைத் தெய்வமாக வழிபடச் செய்திருக்கிறார்.

கிஷ்கிந்தா காண்டத்தில், வாலி வதைப் படலத்தில் இறக்குமுன் வாலி தன் மீது எய்யப்பட்ட அம்பில் இராம நாமம் பொறிக்கப் பட்டிருப்பதைக் காண்கிறான். அதைக் கூறும் போது கவிஞர் பெருமான் பாடுகிறார்:

*மும்மைசால் உலகுக்கெல்லாம் மூலமந்*
*திரத்தை, மற்றும்*
*தம்மையே தமக்குநல்கும் தனிப்பெரும்*
*பதத்தைத்தானே,*
*இம்மையே எழுமைநோய்க்கும் மருந்தினை*
*இராமனென்னும்*
*செம்மைசேர் நாமந்தன்னைக் கண்களில்*
*தெரியக் கண்டான்.*

இராமனின் நாமத்தைக் கண்டதும் இறக்கும் நிலையிலிருந்த வாலி மெய்யுணர்வு பெறுகிறான். கண்கூடான பரம்பொருளைச் சரணடைவதாக அவன் கூறுகிறான்.

*ஏவுகூர் வாளியால் எய்துநாய் அடியனேன்*
*ஆவிபோம் வேலைவாய் அறிவுதந் தருளி*
*னாய்,*
*மூவர் நீ, முதல்வன் நீ, முற்றும் நீ மற்றும் நீ*
*பாவநீ, தருமநீ, பகையுநீ, உறவுநீ......*

என்று அவன் இராமனைத் துதி பாடுவதாக அமைத்துள்ள பாடல் நம் உள்ளத்தைக் குழைவிக்கின்றது.

வாலி இத்துடன் நின்று விடுகிறானா? இல்லை. தன் மெய்யுணர்வை மைந்தன் அங்கதனுக்கும் உணர்த்தி, நீயும் அவனைச் சரணடைந்து உய்ய வேண்டும் என்று கூறுகிறான்.

*பாலமைதவிர் நீ, என்சொல் பற்றுதி*
*யாயின், தன்னின்*
*மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப்*
*பொருள், வில்லுந் தாங்கி*
*கால் தரை தோய நின்று கண்ணுக்கும்*
*எளியன் ஆனான்;*
*மால்தரும் பிறவி நோய்க்கு மருந்தென*
*வணங்கு மைந்த!*

"தனக்கு மேலான பொருளே இல்லாத முழுமுதற் பொருள், மானுடவடிவம் கொண்டு, வில் தாங்கி, கால் தரையில் பட மக்கள் கண்களுக்குப் புலப்படும்படிக் காட்சியளிக்கிறான். அவனை வணங்கி உன் பிறவிப் பிணியைப் போக்கிக் கொள்" என்று வாலி தன் மைந்தனுக்கு உபதேசிப்பது போல் அமைத்துள்ள இந்தப் பாடல் மூலம், கவிஞர் பெருமான் நம்மையும் அதே வழியைப் பின்பற்றி உய்யுமாறு அழைக்கவில்லையா?

இராமனாகிய வேத முதல்வனை, மும்மூர்த்திகளுக்கும் உயர்ந்த தத்துவமாகவும், எங்கும் கலந்து நிற்கும் பரம்பொருளாகவும் சித்தரிக்கின்றார் கம்பநாடர். அயோத்தியா காண்டத்தின் கடவுள் வாழ்த்துப் பாடலிலேயே அவர், இராமனென்ற தத்துவம் பஞ்ச பூதங்களிலும் நிறைந்திருப்பதாகவும், எனவே அப்பூதங்களா

லாகிய உலகின் உள்ளும் புறமும் அதன் உயிராகவும், உணர்வாகவும் பரவி நிற்பதாக விளக்குகிறார்.

*வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின்*
*வைப்பெங்கும்*
*ஊனும் உயிரும் உணர்வும்போல் உள்ளும்*
*புறத்தும் உளனென்ப*
*கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை*
*யிழைப்பக் கோல்துறந்து*
*கானும் கடலும் கலந்திமையோர் இடுக்கண்*
*தீர்த்த கழல் வேந்தே*

இராம காதையில் பக்திச் சுவையைப் புகுத்துகையில் கவிஞர் பெருமான், ஆழ்வார்கள், நாயன்மார்கள் ஆகியோரின் பக்தி நயத்தைக் கூட எதிரொலிக்கச் செய்கிறார்.

*உம்பரால் முனிவரால் யோகரால் உயர்*
*இம்பரால் பிணிக்கரும் இராம வேழஞ் சேர்*
*கம்பராம் புலவர்......*

என்ற பாயிரத்தின்படி, தேவர்களாலும் ஏனையோராலும் பிணிக்க முடியா இராகவ குஞ்சரம் தானே வந்து கம்பராகிய கட்டுத் தறியில் பிணிப்புண்டதாம்.

உபநிடதப் பொருள்களையும் கம்பர் தம் காவியங்களில் ஆங்காங்குக் கலக்க விட்டிருக்கிறார். விராதன் எனும் அரக்கன் இராமனால் வீழ்த்தப்பட்டுத் தன் முன்னுருவத்தைப் பெற்றபோது கூறுகிறான் .

*தாய்தன்னை அறியாத கன்றில்லை ; தன்*
*கன்றை*
*யாயும் அறியும்; உலகின் தாயாகின் ஐய,*
*நீ அறிதி எப்பொருளும்; அவை உன்னை*
*நிலை அறியா*
*மாயை இது என்கொலோ? வாராதே*
*வரவல்லாய் !*

தன் தாயை அறியாத கன்றும் இல்லை ; தன் கன்றை அறியாத தாயும் இல்லை. அப்படியிருக்க, தாயாகிய இறைவன் தன் மக்களாகிய ஜீவராசிகளை அறிந்திருக்கும்போது, அவை மட்டும் ஏன் அவனை அறிவதில்லை ? இது என்ன மாயம் ?

‘கடவுள் மனிதரின் ஊனக் கண்ணுக்குப் புலப்படாமல் ஞானக் கண்ணுக்கே புலப்படுவான் ; உலகத்துடன் தொடர்பின்றி அதனுள் நடப்பான்; ஆதலால், பக்தர் முன் வராமலே வரும் மாயம் அவனுக்கு உண்டு’ என்பது வேதாந்த தத்துவம். இந்தத் தத்துவத்தைத் தான் விராதன் வாயிலாக வெளியிடும் பாடலில் உரைத்திருக்கிறார் கம்பர். அது மட்டுமா? ‘‘வாராதாய் போலே வரவல்லாய்’’ என்று நம்மாழ்வார் பயன்படுத்தியுள்ள சொற்றொடரைக் கூட அவர் இந்தப் பாடலில் அப்படியே கொடுத்திருக்கிறார்.

இவ்வாறே, ‘‘தொல்லை மூலப் பரஞ்சுடர்’’, ‘‘கருமுகில் கொழுந்து எழில் காட்டும் ஜோதி’’, ‘‘அறிவினும் பரான்’’, ‘‘திருவின் கேள்வன்’’ என்று இராமனைப் பற்றிக் கூறும் இடத்திலெல்லாம் அவன் தெய்வம்—தெய்வம் என்று நமக்கு உணர்த்தித் தம் உள்ளத்தில் சுரந்த அதே பக்தி வெள்ளத்தை நம் உள்ளத்திலும் சுரக்க வைக்கிறார் மகாகவி கம்பநாடர்.

———

# ஆலய வழிபாடு

திரு தி. மு. நாராயணசாமி பிள்ளை

ஆலய வழிபாடு என்பது நம் நாட்டில் மிக முக்கியமானது. அது மக்களின் வாழ்க்கைக்கு அடிப்படையானது. தனி மனிதனின் வளர்ச்சிக்கும் சமூகத்தின் சிறப்புக்கும் செம்மைக்கும், சமூகம் யாதும் தீங்கில்லாமல் தேர்ச்சி பெறுவதற்கும் ஆலய வழிபாடு முக்கியமானது. ஆண்டவன் ஒருவன் உளன் என்பது நம் நாட்டில் எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்பட்டதாகவே சொல்லலாம். நம் முன்னோர் அந்த ஆண்டவனை வழிபாடு செய்வதற்கு ஆலயத்தை முக்கிய சாதன இடமாகக் கொண்டனர். நிர்க்குணனாகிய இறைவனை நற்குணனாக, அருள் வல்லனாக மக்கள் வழிபாடு செய்ய ஆலயம் பயன்பட்டது, பயன்படுகிறது. இதனால் ஆலயம் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்ததாக அமைந்தது. பசுவின் உடம்பு முழுவதும் பால் இருந்தாலும் அதன் மடியினிடத்தில்தான் அந்தப் பால் வெளிப்படுகிறது; சுரக்கிறது; எல்லோர்க்கும் பயன்படுகிறது. அதேபோல் இறைவனும் எல்லா இடத்திலும் பரிபூரணனாக இருக்கின்றான் என்றாலும் ஆலயங்களைத் தனக்குச் சிறப்பிடங்களாகக் கொண்டு எல்லாருக்கும் வெளிப்பட்டு அருள் செய்கின்றான். வைணவர், சைவர் ஆகிய இருவர் திருக்கோவில்களிலும் உருவ வழிபாடு சிறப்புப் பெற்றது இதனாலேயே.

ஊர் ஊராகச் சென்று அங்குள்ள கோயில்களில் எழுந்தருளியிருக்கும் ஆண்டவனை இனிய இசைப் பாக்களால் புகழ்ந்து பாடி, மக்களுக்கு இப்படிப்பட்ட வழிபாட்டால் தீமையெல்லாம் ஒழிந்து நன்மை கிடைக்கிறது என்ற உண்மையை நிலைநாட்டினார்கள். சைவசமய ஆசாரியர்களும் வைணவ சமய ஆழ்வார்களும் 'மனிதனுக்குத் துன்பமும் துயரமும் மிகுதியாக உள்ளன; இன்பம் மிகக் குறைவு. இந்த நிலை மாறித் துன்பமும் துயரமும் இன்றி என்றும் நிலையான இன்பத்தைப் பெறுவதற்கு ஆலய வழிபாடு சிறந்த, எல்லோராலும் கைக்கொள்ளப்பட்ட சுலபமான வழியாய் அமைந்துள்ளது' என்று கூறியிருக்கிறார்கள்.

"பற்றிநின்ற பாவங்கள் மாற்ற வேண்டில்
பரகதிக்குச் செல்வதொரு பரிசு வேண்டில்
சுற்றி நின்ற சூழ்வினைகள் வீழ்க்க வேண்டில்
சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே என்றும்
உன்னை யல்லால் ஒரு தெய்வம் உள்கேன் என்றும்
புற்றரவக் கச்சார்த்த புனிதா என்றும்
பொழில் ஆரு ராஎன்றே போற்று நில்லே."
—திருநாவுக்கரசர்.

"பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவிற்றிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே."
—திருநாவுக்கரசர்.

"நாடா நந்தம ராயின தொண்டர்காள்
ஆடு மின்அழு மின்தொழு மின்அடி
பாடு மின்பர மன்பயி லும் இடம்
கூடு மின்குரங் காடு துறையையே."
—திருநாவுக்கரசர்.

பரபரப்பாகவே உள்ள இந்த உலகத்தில் மனச்சாந்தி பெறுவதற்கு ஆலய வழிபாடு மிகவும் துணையாயிருக்கிறது. இப்பயன் வேறு எந்த வழியிலும் அடைய முடியாததாயுள்ளது.

"நிலை பெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல் சேர் செஞ்சடையெம் ஆதி யென்றும்
ஆரூரா என்றென்றே அலறு நில்லே."
—திருநாவுக்கரசர்.

படிப்பு முதலியன இருந்தும் கோயிலும் வழிபாடும் இல்லையேல் பயன் இல்லை. கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்று சொல்லியதும் இதனாலேயே.

"குறிக ளும்அடை யாளமும் கோயிலும்
நெறிக ளும்அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறியி லீர்மனம் என்கொல் புகாததே."

குடிகளின் வாழ்க்கையில் கோயில் வழிபாடு முக்கிய இடம் பெறுவதாலேயே பண்டைய அரசர்கள் கோயில் கட்டுவதில் பெரிதும் ஊக்கம் காட்டினர்கள். கோச்செங்கணன் எழுபது மாடக் கோயில்கள் கட்டினன். இந்தக் கோயில்களில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஊர் ஊராக வந்து பாடி அவறறின் தெய் விகத் தன்மையை அதிகரித்தார்கள். பாண்டிய மன்னனின் அமைச்சராகிய மாணிக்க வாசகப் பெருமான் திருப்பெருந்துறையில் சிவபெருமானுக்குத் திருக்கோயில் எடுத்தார். பத்ராசலத்தில் பக்தர் இராமதாஸ் ராமபிரானுக்குத் திருக்கோயில் எழுப்பினர். இந்தத் திருக் கோயில்களில் கடவுள் எழுந்தருளியிருப்பதும் அருள் செய்வதும் இப்பெரியார்களின் சரித்திரத்தால் நன்கு அறிகின்றோம்.

நம் நாட்டில் இறைவன் கோயில் கொண்டுள்ள தலங்கள் எண்ணிற்கு அடங்காதவை. அவற்றில் சிறந்தனவாகச் சைவநாயன்மார்களாலும் வைணவ ஆழ்வார்களாலும் பாடல் பெற்ற தலங்கள் மிகவும் விசேடம் வாய்ந்தன. ஆண்டவன் அருளும அந்தப் பெரியவர்கள் அருளும் கலந்து விளங்கும் இடங்கள் இவை. இந்தக் கோயில்களில் பூசைகள் தவறாமலும் ஒழுங்காகவும் நடை பெறவேண்டும். அப்படி நடந்தால் ஊருக்கும் மக்களுக்கும் நன்மை உண்டு. இல்லாவிட்டால் மககளுக்கும் நாட்டுக்குமே கேடாகும். கோயில் பூசையெல்லாம் எல்லா மக்களும் சுகமாக இருப்பதற்காகவே நடக்கிறது. இதனை,

*" ஆற்றிரு நோய்மிக் கவனி மழையின்றிப்*
*போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்*
*கூற்றுகைத் தான் திருக்கோயில் களெல்லாம்*
*சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே "*

என்று ஒரு பாடல் கூறுகிறது. பாடல் பெற்ற பழைய கோயில்கள் எல்லாம் அருள்வாய்ந்தன. அவற்றைப் பழுது பார்த்துப் புதுப்பிப்பதும், அங்கே பூசைகள் சரிவர நடக்க ஏற்பாடு செய்தலுமே சிறந்த அறம். ஆண்டவன் அருளைச் சுலபமாக அடையலாம்.

இப்படிப்பட்ட சிறப்புப் பொருந்திய பாடல் பெற்ற தலங்களுள் பவானி கூடலும் ஒன்று. ஆளுடைய பிள்ளையாகிய திருஞான சம்பந்தப் பெருமானுல் தேவாரம் அருளப் பெற்ற தலம் இது. இங்குள்ள பெருமான் கூடல் அழகராக விளங்குகிறார். இந்த ஊர்த் தாயார் எப்படி மாவட்ட அதிகாரிக்குப் பிரசன்னமாகி அருள் புரிந்தார் என்பது யாவரும் அறிந்ததே.

பழுதுபட்டிருந்த இத்திருக் கோயிலை நண்பர் உயர்திருவாளர் K. K. சுப்பண்ண கவுண்டர் அவர்களும் அவர்களுடைய நண்பர்களும் முன் வந்து திருப்பணி செய்து முடித்திருப்பது மிகவும் போற்றத் தக்கதாகும். யாரும் ஏவாமல் தாமே எடுத்துக் கொண்ட பொதுத் தொண்டு. கவுண்டர் அவர்கள் இந்தப் பணியில் பட்டிருக்கும் பாடு அளவில்லாதது. இந்தக் காலத்தில் பதினறு லட்சம் ரூபாய் சேகரித்தல் என்பது எளிதான காரியம் அன்று. அப்படிப்பட்ட காரியத்தில் இறங்கிக் கடைசி வரை முயன்று முடித்த அவர்களுக்கும் நண்பர்களுக்கும் எல்லாவித நன்மைகளும் உண்டாக வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

இந்த நேரத்தில் இனி இந்தத் திருப்பணிகளை எப்படிச் செய்வது என்று என் மனத்தில் உண்டான எண்ணங்களை விரித்தெழுத அவகாச மில்லை என்றாலும் இரண்டு எண்ணங்களை வெளியிடத் தோன்றுகிறது.

இத்தகைய திருப்பணிகளை இந்தக் காலத்தில் தனி மனிதர் மேற்கொள்வது என்பது எளிதன்று. ஆதலின் நம் அரசு நேரடியாக ஏற்றுக் கொண்டு வேண்டிய பணம் உதவ வேண்டும். ஐந்து வருடத் திட்டங்களில் ஒரு சிறிதேனும் மததிய அரசும் ராஜ்ய அரசும் ஒன்று சேர்ந்து கோயில்கள், மசூதிகள், சர்ச்சுகள் ஆகிய எல்லா மதக் கோயில்களுக்கும் பழுது பார்த்துப் புதுப்பிக்கத் தொகை ஒதுககி வைததல் மிக அவசியம். இது சமூக நல வளர்ச்சிக்கும் தேச நலனுக்கும் அடிப்படையாகும். சர்க்கார் ஒரு மதத்திற்கு மட்டுமே உதவ வேண்டும் என்பதன்று; எல்லா மதங்களுக்கும் உதவவேண்டும்.

அல்லது மற்ற தேசங்கள் செய்வது போல இத்தேச நலக் காரியங்களுக்காக லாட்டரி போன்ற முறைகளைக் கையாள்வதற்கு அனுமதி கொடுக்க வேண்டும். இவையெல்லாம் வேறொரு சமயத்தில் விரித்தெழுதுவேன்.

இப்படி ஏதாவது தகுந்த நடவடிக்கை எடுக்காவிட்டால் கோயில்கள் சீர்கெடும். ஆதலால் அப்படிச் சீர்கேடு வராமல் தடுக்க வேண்டியது அரசின் முக்கியக் கடமையாகும்.

---

# ஆலய அமைப்பில் சில சிந்தனைகள்

நா. மகாலிங்கம், பி. எஸ்ஸி., எம். ஐ. இ.

அழகான வீடுகளையும் நகரங்களையும் அமைப்பதில் தமிழர்களுக்கு ஆர்வம் அதிகமாக இருந்திருக்கிறது. பெரிய வீடுகளை 'நகரம்' என்றே தமிழ் நூல்கள் கூறும். ஓர் அழகிய பெண்ணை வருணிக்கும்போது நகர் ஒன்றினை உவமையாகக் கூறுவார்கள். இவ்வாறு தாம் வாழ அழகான வீடுகளை அமைத்துக் கொண்டது போல, இறைவன் திருக்கோயில்களை மிகப் பெரியதாகவும், மாண்புடையதாகவும் உருவாக்கியிருக்கின்றனர். உலகம் முழுமைக்கும் நம் கலைப் பெருமையைக் காட்டும் சிறப்புடையதாக நம் கோயில்கள் இன்றும் விளங்குகின்றன. இக்கோயில் வடிவத்தையே இறைவனாக எண்ணி வழிபடுவதுமுண்டு. 'ஆலயந் தானும் அரன் எனத் தொழுமே' என்றும் கோபுர தரிசனம் என்றும் போற்றுவதைக் காணலாம்.

இயற்கைப் பொருள்களின் அருமை பெருமைகளை அறிந்து முதலில் மக்கள் இயற்கைப் பொருட்களை வழிபட ஆரம்பித்தனர். பிறகு கண்ணால் காண முடியாத அருவங்களை வழிபட்டார்கள். அவ்வுருவங்களுக்குப் பின்னர் தாம் விரும்பிய உருவங்களைத் தந்தார்கள். இப்படி அருவமும் உருவமும் கலந்த வடிவந்தான் சிவலிங்கம். இதனைக் காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்—நிகழ் குறியிடம் சிவலிங்கம் என்று பெரிய புராணம் கூறும். இவ்வாறு வடிவங்களை வகுத்த மக்கள் மேடையின் மீது முதலில் மரநிழலிலும், பந்தலிலும், கரையிலும் பிறகு இல்லங்களிலும் அவ்வடிவங்களைப் பிரதிஷ்டை செய்யலாயினர். பிறகு வந்த பல்லவ அரசர்களில் சிலர் சமண சமயத்தைச் சார்ந்தவர்களாகவும், வடநாட்டுக் கலைகளை நன்கு அறிந்தவர்களாகவும் விளங்கினர். அவர்கள் பொதுவாகச் சிறந்த கலை வல்லவர்களாகவும் விளங்கினர். மண்ணையும் செங்கலையும் கொண்டு கட்டும் ஆலய அமைப்பு முறையை முதலில் அவர்கள்தாம் மாற்றிக் கற்களால் அமைக்க ஆரம்பித்தனர். மலைகளைக் குடைந்து குடவரைக் கோயில்களையும், தனியாகப் பெரிய கற்களைத் தேர் வடிவில் ஆக்கிய கோயில்களையும் அமைத்தனர். இக்கோயில் அமைப்பு முறைகளை நன்கு ஆராய்ந்த கோவை கிழார் சைவப் பேரறிஞர் சி. எம். இராமசந்திரன் செட்டியார் 'இந்த வகையில் மகேந்திரவர்மன் காலம் தொடங்கிக் கற்றளிகள் நாட்டில் ஏற்படத் தொடங்கின. தனிக் கற்கோயில்கள் ஒரே அளவு கொண்டவை. மண்டபக் கோயில்கள் தூண்களையும் பல சிற்றறைகளையும் கொண்டவை. கட்டுக்கோயில்கள் ஒன்றின் முன் ஒன்றாகக் கட்டின மண்டபங்களையும் மதில்களையும் கொண்டவை. தனிக் கற்கோயில் கருவறை, சிகரம் இரண்டும் அடங்கிய விமான முறையாகும். மண்டபக் கோயில் பல சிற்றறைகளுடன் (ஒன்று அல்லது மூன்று) முன் மண்டபமும் கொண்டவை. கட்டுக் கோயில் ஒன்று, மூன்று, ஐந்து என்ற ஒற்றைப்படையில் கொண்ட மண்டபங்களை நீளமாகக் கொண்டவை. இம்மூவகைக் கோயில்களும் பல்லவ மன்னர்களால் உண்டாக்கப்பட்டவை. அதே காலத்தில் அவற்றைப் போன்ற அமைப்பு மத்திய இந்தியாவில் சாளுக்கியர் ஆட்சியில் கட்டப்பட்டது. இவை ஏற்பட்ட காலத்தில் சித்திரம் அல்லது ஓவியம் பல மண்டபங்களில் திட்டப்பட்டது. கோயில்களின் விமானங்களைத் தேர் போலவும், சைத்திரியம் போலவும் சித்தரிக்கப்பட்டன. பிற்காலப் பல்லவர்கள் யானைமுதுகு போன்ற

சைத்திரியக் கோயில்களும் கட்டினார்கள் என்று கூறுகின்றார்.

பின்வந்த சோழர்கள் மூலஸ்தானங்களைப் பெரிதாகக் கட்டினார்கள். இக்காலத்தில்தான் கோயில் அமைப்பு அழகானதாகவும் கலைச் சிறப்புடையதாகவும் மிளிரலாயிற்று. அதற்குப் பின்னால் விஜயநகர வேந்தர்கள் காலத்தில் மண்டபங்கள், மதில்கள் பெரிதாக எழுப்பப்பட்டன. 4 கால் முதல் 1000 கால்கள் வரை மண்டபங்களும், பலநிலை மாடங்களைக் கொண்ட கோபுரங்களும் உருவாயின. தூண்களில் பலவித வேலைப்பாடுகள் எல்லாம் செய்யப்பட்டன. பின் நாயக்க மன்னர்களும், பிற்காலத்தே நாட்டுக்கோட்டை நகரத்தார்களும் சிற்பப் பணிகளையும், திருப்பணிகளையும் தொடர்ந்து செய்தார்கள்.

இக்காலத்தில் எல்லாத் துறையிலும் நாம் புதுமையான மாறுதல்களைக் கண்டு வருகிறோம். மாறுதலை வேண்டுவது மனித இயற்கைதான். அந்த வகையில் பிற சமயங்களைச் சார்ந்த கிறித்துவ ஆலயங்களையும், மசூதிகளையும், நவீனமாக வளர்ந்து வருகிற விஞ்ஞான வசதிகளையும் நாம் ஆராய்ந்து பயன்படுத்திக் கொள்ள வேண்டிய முறைகளையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். ஆலய அமைப்பில் அதிக வேறுபாடுகள் இல்லாமல், திருவுருவ அமைப்பில் மட்டுந்தான் சமணக் கோயில்களுக்கும், சைவக் கோயில்களுக்கும் வேறுபாடு இருக்கக் காணலாம். அந்த வகையில் வழிபட வருகின்ற மக்கள் வசதிக்கேற்பச் சில மாற்றங்களைக் கூற விரும்புகிறேன். மக்களாட்சிக் காலமாக விளங்கும் இக்காலத்தில் பல்லாயிரக் கணக்கான மக்கள் அன்றாட வழிபாட்டுக்கென ஆலயங்கட்குச் சென்று வருகின்றனர். திருப்பதி, பழநி முதலிய திருத்தலங்களில் பெருவாரியாகக் கூடி வழிபடுவதை இன்றும் காணலாம். ஒரு சேர மக்கள் நின்று வழிபட முடியாமல் குறுகிய இடமாக மூலஸ்தானம் விளங்குவதால் மக்கள் நெரிசல் ஏற்படுகிறது. கர்ப்பக்கிருகம், பின் அர்த்த மண்டபம், அதற்கப்பால் மகா மண்டபம் என்ற முறை வைப்பு இருக்கிறது. கர்ப்பக்கிருகத்துக்கு நேரே நேரடியாக மகாமண்டபம் அமைந்த திருக்கோயில்களும் உண்டு. மண்டபங்களில் 12 அடிக்கு ஒரு தூண் என்ற அளவில் தூண்கள் இருப்பதைக் காணலாம். கட்டிடக் கலையில் கருங்கற்களை வைத்து ஆலயம் அமைப்பதற்குப் பின்னால் வேறு கலை அமைப்பிற்கு நாம் செல்லவே இல்லை. செங்கற்களை வைத்துக் கட்டும் முறையைக் கூட நாம் கையாளவில்லை. ஆர். சி. காங்கிரீட் முறையைக் கையாளுவோமானால் 30 அடிக்கு 1 தூண் என்ற அளவில் விசாலமாகக் கட்டிடம் அமைக்க முடியும். பிரீஸ்டரெஸ்டு என்ற காங்கிரீட் முறையை மேற்கொள்வோமானால் தூண்களை மேலும் விரிந்த இடத்தில் அமைக்கமுடியும். தூண்கள் விசாலமான இடத்தில் நிற்பதால் நிறைந்த மக்கள் நேரடியாக நின்று சுவாமி தரிசனம் செய்ய முடியும். கற்களை வைத்துக் கட்டுவதென்ற பழைய முறையையே மேற்கொண்டு வருவதனால் சிற்ப அமைப்பு முதலிய செலவுகள் அதிகமாகின்றன, நம் மாவட்டத்தில் கிடைக்கும் கற்களைக் காட்டிலும் மைசூர் மாநிலத்தில் கிடைக்கும் கற்கள் சித்திர வேலைப்பாட்டிற்கு உரியதாக விளங்குவதாக இருப்பதால் அவற்றைக் கொண்டு வந்து பயன்படுத்தலாம். புராதனமான ஆலயங்களைப் புதுப்பிக்கும் பணியை மேற்கொள்ளும்போது மட்டும் அவைகள் இருந்தவாறே புதுப்பிப்பதற்கு அந்த முறையினையே மேற்கொள்ளலாம். போதிய பரப்பளவும், மக்கட் பழக்கமும் இல்லாத போது நிறைந்த தூண்களோடு நெருங்கி அமைக்கப்பட்டதால் பல பெரிய மண்டபங்கள் இருட்டறைகளாகவும், வௌவால்

# திருப்பணித் திருத் தொண்டு

எம். ஏ. ஆய்க் கவுண்டர், (செயலாளர், திருப்பணிக் குழு)

நாம் செய்யும் செயல்கள் யாவற்றையும் செய்வது எங்கும் நிறைந்திருக்கும் பரம் பொருளே என்பது பெரியோர் கண்ட உண்மை. இதை 'எல்லாம் ஈசன் செயல்'' என்று சொல்லி வைத்தார்கள். ஆனால் இத்தகைய மனநிலை நமக்கு வருவது எளிதல்ல. இந்தக் கொள்கை அத்வைதத்தை அடிப்படையாகக் கொண்டது. செயல் செய்பவன் என்ற பேதம் நீங்கி உய்யும் வழி பெறுவது அத்வைத முக்தி நிலை.

பவானி ஸ்ரீ சங்கமேஸ்வரர் ஆலயத் திருப்பணி நெடுநாள் திட்டமிட்டு ஆரம்பித்த திருப்பணியே அல்ல. இது ஈசன் செயல். எல்லாச் செயலுந்தான் ஈசனுடையது என்றாலும் எங்களை இதில் ஈடுபடுத்தியதற்குக் காரணம் எங்களை 'அவன்' இதன் மூலம் 'ஆட்கொண்டான்' என்றால் அது மிகையாகாது.

ஹிந்து மத அற நிலைய உதவி ஆணையர் திரு கே. வி. குமரன் நாயர் அவர்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்க இத்திருப்பணிக் குழு ஆரம்பிக்கப்பட்டது என்பது வெளிப் பேச்சு. நாங்கள் எந்தத் தைரியத்தில் இந்த ஆழம் காண முடியாத கல் திருப்பணி வேலையில் இறங்கி நீந்த இணங்கினோம்? அவ்வளவு துணிச்சல் எங்களுக்கு எப்படி வந்தது? எங்கிருந்து வந்தது? அது அங்கே கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சங்கமேஸ்வரப் பெருமானிடமிருந்தும், அவனுடன் இணைபிரியாதிருக்கும் அன்னை வேதநாயகியின் அருள் நோக்கின் கருணை வெள்ளத்திடமிருந்தும் வந்திருக்கும். ஆண்டவன் எங்களை இத்திருப்பணியில் ஈடுபடுத்தியதின் காரணம் பக்தியில் நாங்கள் முற்றியவர்களா? அதுவும் இல்லையே? ஒரு வேளை முன் ஜென்மத்தில் செய்த பூஜாபலத்தின் காரணமாகவும் இருக்கலாம்.

ஆண்டவன் தன் செயலைச் செய்வதற்கு—தான் தொக்கி நிற்கும் பொருள் என எங்களைக் கொண்டதற்கு—காரணம் நாவுக்கரசர் நவின்றபடியும் இருக்கலாம்.

*"அத்தாவுன் அடியேனை அன்பாலார்த்தாய் ;*
*அருள் நோக்கில் தீர்த்தநீராட்டிக் கொண்டாய்*
*எத்தனையும் அரியநீ எளியையானாய்*
*எனையாண்டு கொண்டிரங்கி யேற்றுக் கொண்டாய்*
*பித்தனேன் பேதையேன் பேயேன் நாயேன்*
*பிழைத்தனகள் எத்தனையும் பொறுத்தாயன்றே*
*இத்தனைக்கும் எம்பரமோ ஐயஐயோ*
*எம்பெருமான் திருக்கருணை இருந்தவாறே.*

*வஞ்சகப் புலையனேனை*
*வழியறத் தொண்டிற் பூட்டி*
*அஞ்சல் என்றாண்டு கொண்டாய்*
*அதுவும் நின்பெருமையன்றே;*
*நெஞ்சகம் கனியமாட்டேன்*
*நின்னையுள் வைக்க மாட்டேன்*
*நஞ்சிடம் கொண்ட கண்டா*
*என்னென நன்மை தானே?"*

மேலும் இத்திருப்பணி எவ்வித எதிர்ப்பும் இல்லாமல், பணத்தட்டும் இல்லாமல் சென்ற பன்னிரண்டு ஆண்டுகளாகச் செவ்வனே நடந்து முற்றுப்பெற்றதை எண்ணுந்தோறும் இது 'அவன் செயல்' என்றே நாங்கள் திடமாக எண்ணுகிறோம்—நம்புகிறோம். இதில் எங்கள் சாமர்த்தியம், திறமை ஒரு சிறிதும் இல்லை என்பதை நாங்கள் நன்கு உணர்கிறோம்.

இதற்கு முன்பு நாங்கள் இதுபோன்ற பெரிய திருப்பணிகளில் ஈடுபட்டதில்லை. எந்தத் தகுதியும் இல்லாத எங்களை 'அவன்' இம் மாபெரும் திருப்பணியில் ஈடுபடுத்தி நிறைவேற்றிக் கொள்ளுகிறான். திருப்பணி செய்யும் வயதோ, அநுபவமோ, ஆற்றலோ எங்களிடம் இல்லை. எங்கள் தாய் வேதநாயகி ஒவ்வொரு விநாடியும் எங்களைக் காப்பாற்றி அருளுகிறாள். அவள் இந்தத் திருப்பணிக்கு வேண்டும் அளவு வேண்டும்போது, சமயத்தில் புண்ணிய சீலர்களின் மனத்தில் தோன்றி நின்று, வேண்டும் பொருளை அள்ளி அள்ளி

வீசுகிருள். காரணம் ஏதும் இன்றிக் கருணை காட்டும் கண்கண்ட தெய்வம் எங்கள் அன்னை வேதநாயகி.

உணவு பரிமாற உதவும் அகப்பை எப்படி அந்த உணவு தயாரித்த பெருமைக்கு உரிமை கோர முடியாதோ அதேபோல் நாங்களும் இம் மாபெரும் திருப்பணியின் பெருமையில் உரிமை கொண்டாட முடியாது. உணவு செய்யச் செயல்படும் அகப்பை உணவை ருசிக்காது என்ருலும் உணவின் ருசியை மாற்றக்கூடும். பித்தளைக் கரண்டியால் தயிரைப் பரிமாறினுல் தயிரின் நல்ல சுவையும் கெட்டுக் கைத்துப் போய்விடும். ஆதலின் இத் திருப்பணியில் ஒரு சிறிய குறை நேர்ந்தாலும் அதன் பாபம் எங்களைச் சாரும் என்று அறிந்து, விழிப்புடன் இருந்து குறை நேரா திருக்கப் பார்த்து வருகிருேம்.

"இத்திருப்பணி நன்கு திறம்பட நடைபெற்று பூர்த்தி அடைந்து, தென்னுட்டின் பக்திக்கும் கலைக்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கும் என்பதில் ஐயமில்லை" என்று இதனைக் கண்ணுற்ற ஆஸ்திகப் பெரியோரும், அரசியலாரும் சொல்லும்போதும், எழுதும் போதும் எங்கள் நெஞ்சம் நெகிழ்கிறது. பூரிப்பு அடைகிறது. இத் திருப்பணியில் நாள் தோறும் சென்ற 12 ஆண்டுகளாகப் பாண்டிய நாட்டுக் கல் வேலைக்காரர்கள் 140 பேர்கள், சிற்ப சாஸ்திரத்தில் தேர்ச்சியும் புலமையும் கொண்ட திரு பி. ராஜரத்தின ஸ்தபதியின் கீழ் வேலை செய்து வருகிருர்கள். சிற்பக் கலையில் கைதேர்ந்த சிற்பிகள் உயரிய வேலைப்பாடுகளுடன் கூடிய அமர சிற்பங்களைப் பெரிய கற்றூண்களில் சிற்றுளியால் செதுக்குகிருர்கள். உயிரற்ற கற்பாறைகளிலும் நவரசங்களைக் கொண்டு வருகிருர்கள். மெழுகைக் குடைவது போல் பாறையைக் குடைந்து, சிந்திக்கவும் முடியாத வகையில் சிற்றுளிகளை ஏவி நல்ல உயிர்ச் சிற்பங்களை வடிக்கிருர்கள். தங்கள் கைத் திறமையையும் மனே தர்மத்தையும் காண்பித்துக் கல்லிலே கனவுகளை மெய்ப்பிக்கிருர்கள். இச் சிற்பங்களை எதிர்காலத்தில் சிற்பக் கலைக்கு மதிப்பும், கலா ரசிகர்களுக்கு மகிழ்ச்சியும் அளிக்கும் முறையில் செதுக்கியிருக்கிருர்கள்.

எங்கள் திருப்பணிக்கு வேண்டிய கற்கள் இருபத்து ஐந்து மைல் தொலைவிலுள்ள மலைப் பாறைகளில் பெரிய அளவில் தோண்டி எடுக்கப்பட்டு லாரிகளில் கொண்டு வரப் பட்டன. இதுவரை 80 ஆயிரம் கன அடிக் கற்கள் வந்துவிட்டதாகக் கணக்கிடப் பட்டிருக்கிறது. திருப்பணி பூர்த்தி அடையும் நிலையில் உள்ளது.

தற்சமயம் கர்ப்பக்கிருகம், அர்த்த மண்டபம், மஹா மண்டபம், நிருத்த மண்டபம், சுற்றி பத்தி மண்டபங்கள், ஸ்தூபி, விமானங்கள் முதலியவை கற்களில் நல்ல வேலைப்பாடுகளுடன் நடந்துவிட்டன. தட்சணுமூர்த்தி கொரடும், கற்சங்கிலிகளும் கண்ணைக் கவரும் விதம் அமைக்கப்பட்டிருக்கின்றன. கோமுகியின் 'மகரயாழி' பார்க்கத் தக்கது. மேல் விமானம் சாயம் பூசப்பட்டிருக்கிறது. அதன் சுதைகள் கண்ணைப் பறிக்கும் அழகுடன் ஆக்கப் பட்டிருக்கின்றன. கீழ்த் தளவரிசை பரவப் பட்டு வேலை நடந்துவரும் தருணத்தில் இதை வந்து கண்ணுற்ற அறநிலைய ஆணையர் திரு எம். எஸ். சாரங்கபாணி முதலியார் அவர்கள் இந்தத் திருப்பணியை மிகவும் போற்றி மகிழ்ந்து பூரித்துப் போனுர்கள்.

கடைசியில் அவர் எங்கள் குழுத் தலைவரிடம் ராய கோபுரத்தைச் சுத்தம் செய்து, சுதைகள் போட்டு, வர்ணம் தீட்டி அழகுறச் செய்யப் பணித்தார்கள். ஆனுல் அச்சமயம் எங்களிடம் அவற்றை உடனடியாகச் செய்யப் போதிய நிதி வசதி இல்லாமல் இருந்தது. ஆயினும் அதை நிறைவேற்ற ஆசை மிகுந்திருந்தது. வேதநாயகி திருவுள்ளப் பாங்கு எங்கள் பக்கம் (கடைக்கண் நோக்கு) உண்டாயிற்று.

பொள்ளாச்சி தொழில் அதிபர் திரு நா. மஹாலிங்கம் எங்கள் திருப்பணியைக் காண வந்தார். அவரிடம் ராயகோபுரம் புதுப்பிக்கும் பேச்சும் நிதி நிலையும் எடுத்துக் கூறப்பட்டது. நிலை அறிந்து, முன் வந்து அதன் செலவு முழுவதையும் தானே தந்து உதவுவதாக ஒப்புக் கொண்டார், கொடை வள்ளலான மஹாலிங்கம். அதன் பிறகு அதற்கு வேண்டிய

மதிப்பீடுகள் தயார் செய்யப்பட்டன. அதன்படி ராய கோபுரத்தைப் புதுப்பித்துச் சுதைகள் போட்டு, வர்ணம் வைத்து, மின் விளக்குகள் பொருத்த ரூ. 98. ஆயிரம் ஆகும் என நிர்ணயிக்கப்பட்டது. வேலையைத் துவக்கிச் சாரங்கள் போடப்பட்டன. ஆறு மாத காலத்திற்குள் சுமார் 410 சுதைகளுடன்—(பொம்மைகளுடன்) வர்ணம் பூசி முடிக்கும் வேலையில் தீவிரமாக இறங்கினோம். நல்ல கை தேர்ந்த ஸ்தபதியான திரு நடராஜ முதலியாரை அந்த வேலைக்கு அமர்த்தி, குறித்த காலத்தில் கோபுர வேலையையும் பூர்த்தி செய்து விட்டோம்.

இனி, சுற்று மதில் சுவர்கள் புதுப்பிக்கப்பட வேண்டும். கூடுதுறைக்குப் போகும் வழியில் சிறந்த முறையில் மதிலின் தென்புறம் நல்ல பாணியில் 'சாலாகாரம்' கட்டப்படவேண்டும். சுவாமி சந்நிதிக்கு முன்புறம் 'மூன்று நிலை' கோபுரம் கட்டுவதுடன் ஒரு புதுப் படித்துறையும் அமைக்க வேண்டும். இத்துடன் சுவாமி கோவிலைச் சுற்றிலும் வெளிப்புறம் நான்கு பக்கங்களிலும் தரையில் 'பாவுகல்' பாவுதல் வேண்டும். வேதநாயகி அம்மன் கோவில் கர்ப்பக்கிருகம், அதன் அர்த்த மண்டபம் இரண்டும் பழுது பார்த்துப் புதுப்பிக்க வேண்டும். அத்துடன் ஆதிகேசவப் பெருமாள் ஆலய முன் மண்டபமும் பழுது பார்த்துத் தீரவேண்டும் என்ற ஆசையும், ராய கோபுரத்திற்கு முன்புறம் கிழக்குப் பக்கத்தில் ஒரு கல்யாண மண்டபமும் அமைக்க வேண்டும் என்ற எண்ணமும் திருப்பணிக் குழு அங்கத்தினர் ஒவ்வொருவர் மனத்திலும் உதித்துக் கொண்டிருக்கிறது. கூடுதுறையில் தற்பொழுது இருக்கும் கல்மண்டபத்திற்கு மேல்புறத்தில் 'சிரார்த்தம்' முதலிய காரியங்கள் செய்ய வருபவர்களுக்கும், மகேஸ்வர பூஜை நடத்துபவர்களுக்கும் அநுகூலமாக இருக்கும்படி நல்ல கொட்டகை கட்டவேண்டும். ''எல்லாவற்றிற்கும் அவன் அருள் வேண்டும்'' என்று எதிர் பார்த்து, திட்டமிட்ட வேலைகளை மாத்திரம் ஒருவாறு செய்து முடித்து, தற்சமயம் கும்பாபிஷேகம் செய்து முடிக்க முனைந்திருக்கிறோம்.

சென்ற 12 ஆண்டுகளாக ஓய்வு ஒழிவு இன்றித் திறம்பட நடந்துவந்து தற்சமயம் முடிவு பெற்ற இம்மாபெரும் திருப்பணியின் திட்டச் செலவு ரூ 15½ லட்சம் ஆகிறது. ஆஸ்திகப் பெருங்குடி மக்களிடமிருந்தும், தென்னாட்டிலுள்ள உபரித் தொகை கொண்ட ஆலயங்களின் நன்கொடையிலிருந்தும், அரசியலார் நன்கொடையிலிருந்தும் இவ்வளவு தொகை வசூல் செய்து திருப்பணி நிறைவேறியிருக்கிறது. ராயகோபுர வேலைக்கு மாத்திரம் நா. மஹாலிங்கம் அவர்கள் தம் தொழில் நிருவனங்களிலிருந்தும் ஆப்பக் கூடல் 'சக்தி சுகர்ஸ் ஆலை'யிலிருந்தும் மனமுவந்து ரூ 98,000 கொடுத்து உதவி உள்ளார்கள். இதற்காக அவருக்கும், அவர் சகாவான திரு வி. எம். கைலாசம் (ஈரோடு) அவர்களுக்கும் எங்கள் திருப்பணிக் குழு தன் உள்ளங் கனிந்த நன்றியைச் செலுத்துகிறது.

தென்னாடு எங்கும் சுற்றி நாங்கள் இந்தத் திருப்பணிக்கு வசூல் செய்த காலத்தில் உபரித் தொகை கொண்ட ஆலயங்களின் அறங்காவலர்களையும், நிர்வாக அதிகாரிகளையும் நாங்கள் அணுகிய காலத்தில் எங்களை இனிய முகத்துடன் வரவேற்று உபசரித்து, உண்டி கொடுத்து, தங்கள் ஆலயங்களின் உபரி நிதியிலிருந்து பெருந் தொகைகளை அள்ளி அளித்த அறங்காவலர்களும், அதற்கு உடன் இருந்து உதவி செய்த நிர்வாக அதிகாரிகளும் எங்கள் நினைவிலிருந்து என்றும் நீங்க மாட்டார்கள். அவர்களுக்கு எங்கள் நன்றி.

இத்திருப்பணியில் நாங்கள் இறங்கி வேலை தொடங்கிய காலத்தில் இதன் பளுவை அறிந்து, இதன் கஷ்டத்தை உணர்த்தியும், எச்சரித்து எங்களுக்கு ஊக்கம் ஊட்டியும் எங்களுக்கு முழு உதவி செய்வதே தங்கள் உத்தியோகத்தின் தலையாய கடன் என்று கருதிய அச்சமய அறநிலைய ஆணையர் உயர்திரு ஏ. உத்தண்டராமபிள்ளை I.A.S. (Rtd) அவர்களுக்கும் துணை ஆணையர். திரு சர்க்கரை சேர்வை (மதுரை) அவர்களுக்கும் எங்கள் உளங் கனிந்த நன்றியைச் செலுத்தாமல் இருக்க முடியுமா ?

இத்திருப்பணியை இனிது முடித்துக் கும் பாபிஷேகத்தை இனிது நடத்த பலவகையிலும் பேருதவி புரிந்துவரும் அறநிலைய ஆணையர் திரு எம். எஸ். சாரங்கபாணி முதலியார் அவர்களேயும், துணை ஆணையர் திரு ஏ. சிதம் பரம் அவர்களேயும், உதவி ஆணையர் திரு எம். சூரியராஜ் அவர்களேயும் இச்சமயம் நினைவில் நிறுத்தி நன்றி செலுத்துகிறோம். மேலும் வேறு மாவட்டத்தில் இருப்பினும் இந் தத் திருப்பணியின் தன்மை அறிந்து இதன் வசூலில் தீவிரம் காட்டி எங்களுடன் அரும் பாடுபட்டவர் உதவி ஆணையர் திரு டி. எஸ். சங்கரநாராயண முதலியார் அவர்களாவர். அவருக்கும் மற்றும் இத்திருப்பணிக்கு மறை முகமாக இருந்து வசூலில் உதவி செய்து எங்களை ஊக்குவித்த நண்பர்கள் எல்லாருக் கும், பொருள் உதவி தந்த சிவநேயச் செல் வர்கள் யாவருக்கும் எங்கள் நன்றி.

எங்கள் திருப்பணிக்குத் தனிப்பட்ட மனிதர் உதவிய நன்கொடை ரூபாய் முப்பதினா யிரம். தந்தவர் திரு அ. ராமசாமி முதலியார், காளி செட்டிப்பாளையம், மேட்டுப் பாளையம் ஆவார்.

பழனி ஸ்ரீதண்டாயுதபாணி சுவாமி தேவஸ் தானம் தன் உபரித் தொகையிலிருந்து அள்ளி அளித்த பெருந் தொகை ரூபாய் ஒரு லட்சம்.

இத்திருப்பணியை முதலில் துவக்கி வைத்துப் பாலஸ்தாபனம் செய்து, என்னைக் காணும்போதெல்லாம் இத்திருப் பணிபற்றி நுணுக்கமாக விசாரித்து, என்னைத் தட்டிக் கொடுத்து, எனக்குத் தங்கள் திருக்கரத்தால் என் நெற்றியில் விபூதி இட்டு, ''நீ வஜ்ர தேகி யாக இரு. திருப்பணி செய்'' என்று ஆசி கூறி அருள் புரிந்த அமரர் சைவ சிந்தாந்த சரபம், ஆகமக் கொண்டல் பழனி ஸ்ரீலஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகளேயும், ''திருப் பணியே இனி உன்மூச்சு. உன் ஆயுளை இத் திருப்பணி என்னும் குண்டத்தில் ஆகுதி செய்து கொண்டிரு'' என்று எனக்கு ஆணை யிட்டு, ஆசிர்வதித்து மறைந்த அமரர்-அம்பாள் அருள் வடிவம்-திட்சன்ய பார்வை மூர்த்தி-சார்வாய் ஸ்ரீலஸ்ரீ அப்பண்ணு சுவாமிகளேயும் இந்தச் சமயம் என் நெஞ்சில் நினைத்துப் போற்றி வணங்குகிறேன்.

### திருப்பணிச் சிறப்பு

*புல்லினால் வருடங்கோடி புதுமண்ணால்*
*நூறுகோடி*
*துல்லிய செங்கல்லாலே தூய முன்னூறுகோடி*
*அல்லியங்கோதே கேளாய், அருள்தரும்*
*சிவாலயங்கள்*
*கல்லினால் அமைத்த பேர்கள் கைலைவிட்டு*
*அகலார்தாமே.*

---

# பவானி கூடல்

'அநுஷம்'

"ஆறு இல்லா ஊருக்கு அழகு பாழ்" என்று சொல்வார்கள். எத்தனை சிறப்புடைய ஊராக இருந்தாலும் அது ஓர் ஆற்றங்கரையில் இருக்குமானல் அதன் அழகே தனிதான். நம்முடைய நாட்டில் ஆறுகளுக்கு உள்ள சிறப்பைப் பலமுறையிலே காணலாம். தான் செல்லும் இடங்களில் இருமருங்கும் வளம் பெருக்குவது ஆறு. மலையின் மேல் பெய்யும் மழை நீரைக் கொண்டு நிலத்தை வளப்படுத்திக் கடலிடைக் கலக்கும் ஆற்றைப் பரம்பொருளோடு ஒப்பிட்டுப் பேசுகிறான் கம்பன்.

*"கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்*
*எல்லையில் மறைக ளாலும் இயம்பெரும் பொருளி தென்னத்*
*தொல்லையின் ஒன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்*
*பல்பெருஞ் சமயம் சொல்லும் பொருளும்போற் பரந்த தன்றே."*

தமிழ் நாட்டில் சிறந்த பெரிய ஆறு காவேரி. இது குடகு மண்டலத்தில் தோன்றிக் கருநட மண்டலத்தில் குதித்தோடிக் கொங்கு மண்டலத்தில் விளையாடிச் சோழ மண்டலத்தில் நடந்து கிழக் கடலை அடைகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகை நிலங் களினூடும் புகுந்து செல்கிறது. மலை வளங்களைக் கண்டு களித்து, காடுகளில் மலரும் மலர் களின் மணத்தையும், பிற பொருள்களையும் முகந்து கொண்டு, வாழை, கரும்பு, வெற்றிலைத் தோட்டங்களை வளர்த்து, வயலிலே வண்டலையும் நீரையும் தேக்கிப் பொன் கொழிக்கச் செய்து, மாநகரங்களும் சிற்றூர்களும் இருமருங்கும் அணி செய்ய, சிவதலங்களையும் திருமால் திருப்பதி களையும் அடிபணிந்து சென்று, சோழனுடைய தலைநகராகிய உறையூரைக் கண்காணித்துக் கொண்டு மாபெரும் நகராக இருந்த காவிரிப்பூம்பட்டினத்தில் அடங்கி ஒடுங்கிச் சென்று கட லென்னும் காதலனுடன் கலந்து உறவாடுகிறது.

புதிய யுகத்தின் படைப்புக்களாகிய அணைகளில் தேங்கி, மின்சார உற்பத்திசாலையில் ஒளி புகுத்தி வரும் காவிரியின் கரையிலே, மறையொலியும் பண்ணொலியும் முழங்குகின்றன; தொழிலும் கலையும் வளர்கின்றன; தவமும் அறமும் தழைக்கின்றன.

கொங்கு மண்டலத்தில் காவிரியாறு செல்லும் வழியில் இருப்பது திருநணு என்னும் பவானி. ஓர் ஆற்றுக்கே பெருமை என்றால் இரண்டு ஆறுகள் சேரும் இடத்துக்கு இரட்டிப்புப் பெருமை அல்லவா? காவிரியும் பவானியும் சேரும் இந்தத் திருத்தலம் பவானி கூடல் என்ற பெயரால் சிறப்படைகிறது. மாநதிகள் ஒன்றுகூடும் இடங்களின் சிறப்பைச் சாஸ்திரங்களும் புராணங்களும் பேசுகின்றன. கங்கையும் யமுனையும் கூடும் தலமாகிய பிரயாகை பாரத நாடு முழுவதும் போற்றும் பெருமையை உடையது. கண்ணுக்குத் தோன்றாமல் சரஸ்வதி என்னும் ஆறும் அந்தக் கூடுதுறையிலே கலப்பதனால் அதற்குத் திரிவேணி சங்கமம் என்ற பெயர் நிலவுகிறது. பாரத நாட்டின் வடக்குப் பகுதியில் திரிவேணி சங்கமம் இருப்பதுபோலத் தென்னாட்டில் சிறப்படையும் சங்கமத் தலம் பவானி. இங்கே கண்ணுக்குத் தோன்றாமல் அமுத நதி யென்னும் ஆறும் கலக்கிறது. காவிரி, பவானி, அமுத நதி என்னும் மூன்றும் கலப்பதனால் இதுவும் திரிவேணி சங்கமமே யாகும். இதைத் தட்சிணப் பிரயாகை என்று வழங்குவது பெரியோர் மரபு. கூடுதுறை யென்றும், பவானி கூடலென்றும், சங்கம க்ஷேத்திர மென்றும் இந்த மூன்று ஆறுகள் கூடும் சிறப்பினால் இத்தலம் பெயர் பெற்று விளங்குகிறது.

காவிரியும் பவானியும் கலந்தது எப்போது? அந்தக் காலம் தெரிந்தால் இந்தச் சங்கமத் திருத்தலம் உண்டான காலத்தை வரையறை செய்யலாம். அந்த இரண்டு ஆறுகளும் எத்தனையோ காலங் கண்டவை; பழமையானவை; இன்றும் புது நீரை உதவி மக்களுக்கு நலந் தருபவை. அவ்வாறே இந்தத் திருத்தலமும் மிகப் பழமையானது; பல பெருமக்கள் வந்து வழிபடப் பெற்றது; புராண காலத்தில் புகழ் பெற்று, திருஞான சம்பந்தர் காலத்தில் தேவாரம் பெற்று, அதன் பின்னர்ப் பல அடியார்களால் வழிபடப் பெற்று, இன்றும் வட நாட்டினரும் பிறரும் வந்து கூடுதுறையில் நீராடித் திங்ககன்று அருள் பெற வைக்கும் பெருமையுடையதாக விளங்குகின்றது.

இங்கே எழுந்தருளியிருக்கும் பெருமானுக்குச் சங்கமேசுவரர் என்று பெயர்; திருநணுவுடையார் என்பது கல்வெட்டில் கண்ட திருநாமம். இத்தலத்தைத் திருநணு என்று வழங்குவது பழைய வழக்கு. தேவாரத்தில் அப் பெயரே அமைந்திருக்கிறது. நண் என்பது நடு என்ற பொருளையுடையது, நண்பகல் என்பது போல. இரண்டு ஆறுகளுக்கு நடுவில் அமைந்தமையின் சிவபெருமான் நண் ஆம் நாதரானர். அப் பெயரே திருநணுநாதர் ஆகித் தலத்துக்கு நணு என்ற பெயரைத் தந்திருக்க வேண்டும். நட்டாற்றீசர் என்று பெருமானுக்கு ஒரு பெயர் வழங்குவதும் காண்க. தன்னை அண்டினோருக்குத் தீமைகள் நண்ணாத் தலம் ஆதலின் நணு என்று வந்தது என்று சிலர் கூறுவர்.

இத்தலத்தின் தெய்வத் திருமரம் இலந்தை. வேதமே இம்மரமென வந்ததாகப் புராணம் கூறும். இலந்தை மரத்தைப் பதரி என்பது வடமொழி வழக்கு. ஆதலின் இத்தலத்துக்குப் பதரிகாசிரமம், பதரிவனம் என்ற பெயர்கள் உண்டாயின. இன்றும் இத்தலத்தில் பதரி விருட்சம் இலங்குவதைக் காணலாம்.

சங்கமேசுவரருடைய சத்தியாக இங்கே எழுந்தருளியிருக்கும் அம்மைக்கு வேத நாயகி என்பது திருநாமம். ஒரு கல் வெட்டில் பண்ணார் மொழியம்மை என்ற திருப் பெயர் காணப்பெறுகிறது.

காவிரியில் காயத்திரி தீர்த்தம் என்ற இடம் இருக்கிறது. இதைக் காயத்திரி மடு என்று இப்போது வழங்குவார்கள். இதன் கரையில் காயத்திரி லிங்கத்தின் திருக்கோயில் இருக்கிறது. அமுதலிங்கம் என்ற ஒரு சிவலிங்க மூர்த்தியின் சந்நதி ஒன்று உண்டு. அமுதமே லிங்கமாய் மாறிற்றென்றும் அதைப் பராசர முனிவர் இங்கே நிறுவினாரென்றும் தலவரலாறு கூறுகிறது. இந்த லிங்கம் ஆவுடையாரின் மேல் வைக்கப் பெற்றிருக்கிறது. அதை யாரும் எடுக்கலாம். குழந்தை இல்லாதவர்கள் அதை எடுத்து இடையில் வைத்து ஆவுடையாரை வலம் வந்தால் மகப்பேறு பெறுவார்கள். இந்த அமுதலிங்கத்தின் அடியிலிருந்துதான் அமுதவூற்றுப் புறப்பட்டுக் காவிரியோடு கலக்கின்றது என்பார்கள்.

மூன்று காலும் மூன்று கையும் மூன்று தலைகளுமுடைய சுரஹரேசர் சந்நிதி ஒன்று தனியே இங்கே இருக்கிறது. கடுமையான சுரநோய் வந்தவர்கள் அந்தப் பெருமானைப் பிரார்த்தித்து நோய் தீர்கிறார்கள்.

இந்தத் திருக்கோயிலுக்குள் ஆதிகேசவப் பெருமாளும் சௌந்தரவல்லித் தாயாரும் எழுந்தருளியிருக்கிறார்கள். மைசூர் மன்னர் ஒருவர் நிறுவிய அழகுப் பிழம்பான வேணுகோபாலர், நரசிம்மர் ஆகிய மூர்த்திகளின் சந்நிதிகளும் உண்டு.

மிகப்பழைய திருக்கோயிலாகிய இதனைப் பிற்காலத்தில் கொங்கு நாட்டில் பெருவள்ளலாகத் திகழ்ந்த இம்முடிக் கட்டி முதலியார் செப்பஞ் செய்து புதிய மண்டபங்களைக் கட்டியிருக்கிறார். அவருடைய திருவுருவம் தூணில் இருக்கிறது.

கும்பினியார் ஆண்ட நாளில் இந்த ஊர் கோயம்புத்தூர் சேலம் மாவட்டங்களுக்குத் தலை நகராக இருந்தது. அக்காலத்தில் இவ்வூரில் கலெக்டர் ஒருவர் இருந்து வந்தார். வில்லியம் காரோ (William Garrow) என்பவர் இங்கே கலெக்டராக இருந்தபோது ஓர் அதிசயம் நிகழ்ந்தது. அவர் இந்தக் கோயிலுக்கு அருகில் உள்ள பங்களாவில் வாழ்ந்து வந்தார். பல ஊர்களிலிருந்து இந்த ஊருக்கு மக்கள் வந்து கூடுதுறையில் நீராடிக் கோயிலுக்குச் சென்று தரிசனம் செய்து போவதை அவர் கண்டார். கோயிலுக்குள் புகும் உரிமை அவருக்கு இல்லை. வேதநாயகி அம்பிகையின் பெருமையைப் பிறர் கூறக் கேட்டபோது தாமும் அம்மையின் தரிசனம் செய்து கொள்ளவேண்டும் என்று விரும்பினர். அவரோ கோயிலுக்குள் புக முடியாது. அவருடைய உண்மையன்பை உணர்ந்த அதிகாரிகள் ஒருவழி கண்டு பிடித்தார்கள். அம்பிகையின் சந்நிதிக்கு நேரே திருமதிலில் மூன்று துவாரங்களைச் செய்தார்கள். அவற்றின் வழியே பார்த்தால் அம்மையின் உருவம் நன்றாகத் தெரியும். அம்பிகைக்கு நன்றாக அலங்காரம் செய்து, எங்கும் விளக்குகள் ஏற்றிக் கலெக்டர் துரையைத் திருமதிலுக்கு வெளியிலிருந்து துளைகளின் வழியே காணும்படி செய்தார்கள். வேதநாயகியின் திருவுருவத்தைத் தரிசனம் செய்த கலெக்டர் உள்ளம் உருகியது. பிறர் பலகாலும் கூறியதைக் கேட்டு முன்பே ஈடுபாடு உடையவராக இருந்த அவர் இந்தக் கண்கொள்ளாக் காட்சியைக் கண்டு மெய்ம்மறந்தார். வேதநாயகியின் திருவுருவம் அவர் கண்ணிலும் கருத்திலும் நின்றது.

அன்று முதல் ஒவ்வொரு நாளும் மாலையில் வேதநாயகியின் தரிசனத்தைச் செய்து இன்புற்றார். அவர் காண்பதற்காகச் செய்த துளைகளை இன்றும் திருமதிலில் காணலாம்.

ஒரு நாள் காரோ துரை தம் பங்களாவில் மேல் மாடியில் தூங்கிக்கொண்டிருந்தார். அப்போது அவர் ஒரு கனவு கண்டார். வேதநாயகியைப் போல அலங்காரம் செய்து கொண்டிருந்த பெண் ஒருத்தி தம்மைத் தட்டி எழுப்பி, எழுந்து வா என்று கையைப் பற்றி வெளியிலே அழைத்துச் சென்றதாக ஒரு காட்சியைக் கனவிலே கண்டார். உடனே விழிப்பு உண்டாயிற்று. படுக்கையிலிருந்து எழுந்து வெளியே வந்து பார்த்தார். அப்போது அவர் படுத்திருந்த இடத்தின் மேலிருந்த விட்டம் ஒடிந்து விழ, மேல் கூரையே இடிந்து விழுந்து விட்டது. இதைக் கண்ட அவருக்குத் திகைப்பும் வியப்பும் உண்டாயின. அம்பிகையே தம்மைக் காப்பாற்றினள் என்ற உணர்வு தோன்றியது. நாள்தோறும் தரிசனம் செய்த பலனைத் தம் வாழ்க்கையிலே அவர் கண்டார்.

கலெக்டர் துரை தமக்கு நன்மை செய்த அம்பிகையின் அருளை எண்ணி உருகினர். தம்முடைய காணிக்கையாக ஏதாவது ஒன்று செய்து ஆலயத்துக்கு வழங்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு உண்டாயிற்று பலவாறு யோசனை செய்து, பின்பு தந்தத்தால் ஒரு கட்டில் செய்து அதில் தமிழிலும் ஆங்கிலத்திலும் தம் பெயரைப் பொறித்து அளித்தார். 1804–ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 11–ஆம் தேதி இந்தக் கட்டில் வேதநாயகியம்மைக்கு வழங்கப்பட்டதென்று அதிலுள்ள எழுத்துக்களால் தெரிய வருகிறது.

இந்தத் தலத்தின் மாகாத்மியம் பிரம்ம கைவர்த்த புராணத்தில் உள்ளதென்பர். வடமொழியில் 33 அத்தியாயங்கள் கொண்ட புராணம் ஒன்று உண்டு. அதை ஓராட்டுக்குப்பை, செட்டிபாளையம் மகாவித்துவான் வாசுதேவ முதலியார் என்னும் புலவர் தமிழ்ச் செய்யுளுருவத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். அது பதினெட்டுச் சருக்கமும், 901 பாடல்களும் உடையது. திருஞான சம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருப்பதிகம் ஒன்று இத்தலத்துக்கு உண்டு. அந்தப் பெருமான் ஒரு பாசுரத்தில்,

*"அல்லாத சாதிகளும் அங்கழன்மேற் கைகூப்ப"*

என்று பாடியுள்ளார். அது தீர்க்கத் தரிசன வாக்கு என்பதைப் பிற்காலத்தில் வில்லியம் காரோ துரை வழிபட்ட செய்தியால் உணரலாம்.

இவ்வூரில் பாலபாரதி முத்துசாமி ஐயர் என்ற புலவர் வாழ்ந்திருந்தார். அவர் நட்டாற்றீசுவரர் சதகம் என்ற நூலையும் இந்தத் தல சம்பந்தமாகப் பல கீர்த்தனைகளையும் இயற்றியிருக்கிறார். ஒரு கீர்த்தனையில்,

*"போதார் மன வதரி நீழலின்*
*பூங்காவனம் சிவ சங்கமேச்வர*
*புனிதப்ரபு விடமேவிய மலைபெற்றிடு மகளேமது*
*பொழிவுற்றிடு மொழியேஎழில் செழுமைக்குழல் வேதாம்பிகை"*

என்று அம்பிகையைப் போற்றுகிறார். வேதநாயகி பிள்ளைத் தமிழ் ஒன்று இருந்தது. அதைப் பாடியவர் இன்னாரென்று தெரியவில்லை. சில பாடல்களே கிடைக்கின்றன.

*"கரியே யனைய தனமுருசங் கரியே வருக களத்தினிடை*
*கரியேய் பரமன் மகிழெழிற்சா கரியே வருக ஆகமெல்லாம்*
*கரியே நிகர்மால் முதலுயிர்க்குக் கரியே வருக ஐந்தெனுமக்*
*கரியே வருக மிகுகருணை கரியே வருக பிறப்புறுபூ*
*தரியே திருநண் ணுவுருப தரியே விரும்பும் மாயவன்சோ*
*தரியே வருக எங்குநிரந் தரியே வருக குழலெனுங்கந்*
*தரியே வேத நாயகிசுந் தரியே வருக வருகவே*
*தாயேழ் புவியுங் காக்கவருந் தாயே வருக வருகவே"*

என்பது அதில் வரும் பாடல்களில் ஒன்று.

அருணகிரியார் பாடிய திருப்புகழ் ஒன்றும் இத்தலத்துக்கு உண்டு. இத்தலத்தின் சிறப்பை,

*"காலில் அரவம் இருசுட ரைப்பற்றும் காலத்திலே*
*மேலுல கம்பெறு வோர்புனல் மூழ்க விரும்புவது*
*காலம் மிகுந்த பவானியும் பொன்னியும் கூடுதுறை*
*வாலிப காசிநண் ணூர் பயில்கொங்கு மண்டலமே."*

என்று கொங்குமண்டல சதகம் எடுத்தோதுகிறது. அதிலிருந்து கிரகண காலங்களில் இத்தலத்தில் வந்து நீராடப் பலர் விரும்புவார் என்று தெரிகிறது. இன்றும் அந்தக் காட்சியைக் காணலாம்.

கொங்கு மண்டலத்தில் வடகரை நாடு என்னும் பிரிவில் உள்ள இருபத்து நான்கு ஊர்களில் ஒன்று இது; கொங்கேழ் சிவ தலங்களில் ஒன்று.

இத்தகைய சிறப்புப் பெற்ற இத்தலத்தில் உள்ள திருக்கோயில் இப்போது சிவத் தொண்டர்களின் முயற்சியால் புதுத் திருப்பணி செய்யப்பெற்றுப் பூர்த்தியாகிக் கும்பாபிஷேகமும் நடைபெறுவது தமிழ்நாடு போற்றும் செயல். திருப்பணி நிறைவேறி ஆலயம் அழகு பெற்றுத் திகழ்கிறது. வேதநாயகி பங்கராகிய சங்கமேசுவரர் திருவருள் எங்கும் பரவ வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

*இனைய காசியும் வதரியா ரணியமும்*
*ஏற்றமார் தென்னாட்டில்*
*வினையும் நலத்திரி வேணிசங் கமமுமாய்*
*விளங்குறு திருநணா*
*உனையும் அன்பருக் கருள்சங்க மேச்சுரன்*
*உமைமறை நாயகிபங்*
*கனையும் சிற்பரன் நிலவிய பெருந்தலம்*
*அடைந்தவர் பெரியோரே.*

---

# கலைச் செல்வங்கள்

ம. சூரியராஜ், பி. ஏ., பி. எல்.
(அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையாளர்)

பழம் பெருமை வாய்ந்த நம் தமிழ்நாடு தொன்றுதொட்டு அறிஞர்களைப் போற்றுவதிலும், கலைஞர்களை ஆதரிப்பதிலும், சமயத்தை வளர்ப்பதிலும், கலையைப் பேணுவதிலும் மற்ற எல்லா நாடுகளுக்கும் முன்னோடியாக திகழ்ந்திருக்கிறது. பண்டைய அரசுகளும் இவைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து ஆதரவாய் இருந்திருக்கின்றது. இதன் பயனாக நாம் பாரம்பரிய முறையிலே பெற்ற பேறுகளும் நன்மைகளும் பல பல. இவைகளுள் எல்லாம் சிகரமாகத் திகழ்வதுதான் நம் முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்ற கோவில்களும், அதில் காணும் கலைச் செல்வங்களும் ஆகும்.

தந்தை விட்டுச்சென்ற செல்வத்தைப் பேணிப் பெருக்குவது சற்புத்திரனுடைய செயலாகும். அத்தகைய சற்புத்திரர்களாக நாம் இருக்க வேண்டுமானால் நாம் நம்மிடம் விட்டுச் சென்றுள்ள கலைச் செல்வங்களைப் பேணிப் போற்றிப் பாதுகாக்கக் கடைமைப் பட்டுள்ளோம். கோயிலில்லா ஊரிலே குடியிருக்கவேண்டாம் என்ற முதுமொழிக்கேற்ப நம் முன்னோர்கள் பட்டிதொட்டிகள் தோறும் அழகும், ஆன்மிகமும், பெருமையும் நிறைந்த பல பல ஆலயங்களை நிர்மாணித்துச் சென்றார்கள். அவைகளை எல்லாம் காலம் எனும் காலனிடமிருந்து பாதுகாத்து புதுப்பிக்க வேண்டியது அவசியம் என்று எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். அவைகளைப் பாதுகாக்கும் முறையிலும் புதுப்பிக்கும் வகையிலும் எத்தனையோ கருத்து வேறுபாடுகள் இருப்பினும் அவைகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. அத்தகைய பாதுகாக்கும் முயற்சியில் ஆலய நிர்வாகிகளுக்கு மட்டுமின்றி ஆலயம் சென்று வரும் மக்களுக்கும் முக்கிய பங்கு உண்டு. ஆலய நிர்வாகிகள் குறிப்பிட்ட காலங்களில், குறிப்பிட்ட முறையில், உரிய அளவில் திருப்பணிகள் செய்து கொடுப்பதின் மூலம் தங்கள் பங்கை செய்கிறார்களென்றால், ஆலயத்தைப் பயன்படுத்தும் முறையிலும் அங்குள்ள கலைச் செல்வங்களுக்கு ஊறு செய்யாவண்ணம் அதைப் பேணிக் காப்பதிலும் தங்கள் முக்கிய பங்கை செய்ய மக்கள் கடமைப் பட்டுள்ளார்கள்.

தமிழ் நாட்டிலுள்ள ஆலயங்களில் முக்கியத்துவம் வாய்ந்த அனைத்தும் கல்லால் ஆன கட்டிடங்களே. அவைகளுக்குப் பராமரிப்பு என்பது கட்டிடங்களில் செடி கொடிகள் முளைக்கா வண்ணம் பாதுகாப்பதும், முளைக்கின்ற செடிகளை உடனுக்குடன் அப்புறப் படுத்துவதும், கட்டிடங்களின் சுவர்கள் முதலியன பழுதடையா வண்ணம் பாதுகாத்துக் கொள்வதுமேயாகும். கல் மண்டபங்களின் மேல் தளங்களில் வெடிப்புகள் ஏற்பட்டு மழைத் தண்ணீர் இறங்காமலும், அதிலிருந்து செடிகள் முளைக்கா வண்ணமும், உரிய காலத்தில் மண்டபங்களின் மேற்புறங்கள் நீர்புகா அமைப்புடன் அமைக்கவேண்டியது நிர்வாகிகளின் பிரதான கடமையாகும். இது செய்யத் தவறும்பொழுது முளைக்கின்ற செடிகளின் வேர்கள் மூலம் கட்டிடங்களின் கற்கள் நகர்த்தப்பட்டுப் பின்பு பெரும் பொருட்செலவில் திரும்பப் பிரித்துக் கட்டவேண்டிய பெரும்பொறுப்பை ஏற்படுத்திவிடுகின்றது. ஆகவே நிர்வாகிகள் அவ்வப்பொழுது தாங்கள் ஆற்றவேண்டிய கடமைகளைச் செவ்வனே செய்து வருவதன் மூலம் பெரும்பழுதுகள் ஏற்படுவதைத் தடுக்க முடியும்.

கல்லும் கவிபாடும் என்ற நிலைக்கேற்ப நம் ஆலயங்களின் அமைப்பில் ஒவ்வொரு தூணும் அதில்செதுக்கப்பட்டுள்ள சிலைகளும், கட்டடங்களின் மூலை முடுக்குதோறும் உள்ள வளைவுகளும் சிற்பங்களும் பாதுகாக்கப்படவேண்டிய உயர்ந்த சின்னங்களாகும். பல கோவில்களிலும் அநேக சூழ்நிலைகளில் அவைகள் பாழ்படுத்தப்பட்டுள்ளன.. திருவிழாக் காலங்களில் அதிகமான அளவில் மக்கள் கூடும்பொழுது தங்கள் தற்காலிக சௌகரியத்திற்காக அறிந்தும் அறியாமலும் அத்தகைய கலைச்செல்வங்

கள் பாழடைவதற்குக் காரணமாய் அமைத்து விடுகிறார்கள். திருவிழாவைப் பார்ப்பதற்கு நல்ல இடம் கிடைக்க வேண்டும் என்பதற்காகத் தூண்களில் அமைந்துள்ள சிற்பங்களைப் பிடித்து ஏறி நிற்கின்றதையும், விளிம்புகளைப் பயன்படுத்தப் போய் அதைப் பாழ்படுத்தி, திருவிழாவைக் காண முயற்சிப் பதையும் காண்கின்றோம். அதோடு திருவிழாக் காலங்களில் நிர்மாணிக்கப்படும் பந்தல்களா லும் உபயோகிக்கப்படும் எடுபிடி போன்ற உப கரணங்களைக் கவனக் குறைவாக கையாளு வதாலும், அறிந்துபட்ட கலைச் செல்வங்கள் பல பல. விமானங்களிலும் கோபுரங்களிலும் சாரங்கள் போடும்பொழுதும் அலங்கார விளக்குகள் அமைக்கும்பொழுதும் எத் தனையோ சிற்பங்கள் பாழ்படுத்தப்பட்டிருக் கின்றன. வண்ணப் படங்கள் பலவற்றிலும் வந்து போனவர்களின் பெயர் எழுதப்பட்டு, அழகு அலங்கோலமான அவல நிலையை அடைந்திருப்பதையும் காண்கிறோம்.

இப்படிப்பட்ட நிலைகள் எல்லாம் ஏற்பட்டுப் பாழ்பட்டதற்குக் காரணம் என்ன என்று சிந்திப் போமானால் அதற்கு பிரதானமாக அமைவது நிர்வாகிகளும் மக்களும் அவைகளைக் கலைச் செல்வங்கள் என்று அறிந்து கொள்ளாததே என்று தோன்றுகிறது. நாம் அனைவரும் அவை எல்லாம் போற்றிப் பாதுகாக்கப்பட்ட வேண்டிய அரும்பெரும் பெட்டகங்கள் என்று நினைவுபடுத்திக் கொண்டாலே அப்போது காப்பு முயற்சியில் பெரும் பங்கை நிறை வேற்றியவர்களாகிறோம். ஆகவே நம் ஆலயங் களைப் பாதுகாப்பதற்கு முயற்சி எடுத்துக் கொள்ளும் பெருமக்கள் செய்ய வேண்டிய முதற்தொண்டு நம்மக்கள் அனைவரையும் அதன் பெருமைகளை உணர வைப்பதே ஆகும்.

திருப்பணியில் ஈடுபட்டிருக்கும் பெரு மக்கள் சிலர் அவ்வப்போது ஏற்படுகின்ற சூழ்நிலையில் எடுத்துக் கொண்ட திருப்பணி விரைவில் முடியவேண்டும் என்ற ஆர்வத்தில் சில பழம்பெரும் செல்வங்களை, எதை எம் முறையில் செய்தால் அவைகளுடைய பெருமை பழமை குன்றாது என்று உரிய வல் லுனர்களை வைத்து முடிவு எடுக்காமல் திருத் தியும் மாற்றியும் அமைத்து விடுகிறார்கள். கோவில் நிர்வாகிகளும் திருப்பணி செய்ய வரும் பெருமக்கள் அனைவரும் பழம் பொருள் பாதுகாப்புக் கலையில் வல்லுநர்கள் அல்ல என்பதை மறந்து விடக்கூடாது. சிற்பத்திலும் கட்டிடங்களிலும் சிறிய மாற்றங்கள் செய்வதி லுங் கூடச் செய்யவேண்டியது என்ன என்பதைத் தகுந்த வல்லுநர்களுடன் ஆழ்ந்து சிந்தித்து முடிவெடுக்கப்பட வேண்டும். அவர்கள் எடுக்கும் ஒவ்வொரு முடிவும் பின்னால் பல நூற்றாண்டுகளாக வரும் சந்ததி யினர்கள் ஆய்வு செய்து நல்ல தீர்ப்பு கொடுக் கின்ற வகையில் அமையவேண்டும் என்ற சிந்தனையுடன் செயல்படுவார்களானால் அதுவே திருப்பணி சிறப்புடன் முடிய ஓர் உறுதியான அடிப்படையாக விளங்கும்.

இன்று பவானி ஆலயத்தில் கட்டப்பட் டுள்ள புதக்கோயிலானது இன்னும் அன்று போல் சிறந்த சிற்ப வேலைகளுடன் கூடிய கோவிலை நிர்மாணிக்கும் திறனுள்ள கலைஞர்கள் இருக்கின்றார்கள் என்று சொல்லுவதற்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. அப்படிப் பட்ட சிறந்த கலைஞர்களை ஊக்குவிக்கவும் அத்தகைய கலை நுணுக்கங்கள் பாரம்பரியமாக நமது சந்ததியாருக்கு விட்டுச் செல்வதற்காக வாவது, இத்தகைய திருப்பணிகள் பொருட் செலவைப் பொருட்படுத்தாமல் செய்யப்படு தல் அவசியமாகும். இந்த ஆலயத்தைச் சுமார் 12 ஆண்டுகளாக திரு கே. கே. சுப்பண்ண கவுண்டர் அவர்களும் திரு ஆய்க்கவுண்டர் அவர்களும் தங்களுடைய சகாக்களின் துணை யுடன் சீரிய முறையில் கட்டி முடித்திருப் பதைப் பாராட்டி நன்றி செலுத்தத் தமிழ் நாட்டு மக்கள் அனைவரும் கடமைப்பட்டுள்ளோம். அவர்களுக்கு உரிய முறையில் நன்றி செலுத்து வது என்பது அவர்களால் கட்டப்பட்ட இக் கோயிலையும், இதேபோல் நம் முன்னோர்கள் கட்டி முடித்த ஆயிரமாயிரம் கோவில்களையும் நல்ல முறையில் பராமரித்துப் பல நூற்றாண்டு கள் பேணிப் பாதுகாப்பதே ஆகும் என்று கருதுகிறேன். இவைகள் எல்லாம் நிறைவேற மனிதன் ஒரு கருவியாகத்தான் இருக்க முடியுமே தவிர, அவனன்றி ஓரணுவும் அசை யாது என்பது தெளிவு.

---

# பவானித் தல வரலாறு

[கொங்கு நாட்டில் தேவாரம் பெற்ற தலங்கள் ஏழில் ஒன்றான பவானியின் பெருமையையும் வரலாற்றையும் கூறும் புராணம் ஒன்று உண்டு. "பவானி கூடற் புராணம்" என்ற பெயருடைய அந்த நூலை இயற்றியவர் ஓராட்டுக் குப்பை—செட்டிபாளையம் மகாவித்துவான் வாசுதேவ முதலியார். அது சித்திரபானு ஆண்டில் கோயமுத்தூர்க் குட்டியண்ண முதலியார் என்பவரால் அச்சிடப்பட்டது. 18 சருக்கங்களும் 901 விருத்தங்களும் அடங்கியது அது. அந்தப் புராணத்திற் கண்ட செய்திகளின் சுருக்கம் இங்கே உரைநடையில் அளிக்கப் பெறுகின்றது.]

### விநாயகர் துதி

நல்லவை நீடி மல்கத் தீயவை நலிய நாயேன்
சொல்லவை நல்லோர் சூழல் துலங்கிடத் திருநண் ணுவாழ்
வல்லபை இடத்து வைத்த வாரணமுகவன் தெய்வப்
பல்லவம் மருட்டும் பைம்பொற் பதயுகம் பணிதல் செய்வாம்,

### சுரகண்டேசர் துதி

எரிகண்ட திரணமென வல்வினையும் பல்பிணிகள்
எனைத்தும் நீற
அரிகண்ட சுதைநுகரும் அரசெனப்பே ரழகுமுயர்
அறிவும் ஓங்கப்
புரிகண்ட முந்நூலும் மணிமார்பும் திருவடியும்
பொலிந்து வைகும்
திரிகண்ட சுரகண்ட மாதேவன் திருத்தாள்எம்
சிரத்தின் வைப்பாம்.

### சூரியமூர்த்தி துதி

மாயிரு ஞாலம் கோத்த வல்லிருட் படலம் வாங்கி
ஆயிரம் கரத்தால் தைவந் தனைத்துயிர்க் கறிவீந் தன்பால்
சேயிரு விசும்பு போற்றும் திருநணு வுடையான் செல்வக்
கோயில்வாழ் இரவிப் புத்தேள் குரைகழல் வணக்கம் செய்வாம்.

### ஆதிகேசவப் பெருமாள் துதி

அஞ்சிறைவண் டினம்குழுமி அலம்பமுகை உடைந்துமடல்
அவிழ்ந்த செம்பொற்
கஞ்சமகள் இனிதுறையும் மணிமார்பும் வனமாலை
கமழ்திண் டோளும்
பஞ்சவிதப் படைக்கரமும் மணிமுடியும் பார்முழுதும்
அளந்த பைம்பொற்
செஞ்சரண இணைமலரும் நினைந்தாதி கேசவனைத்
தியானம் செய்வாம்,

**குபேரன் பூசித்தது :**

சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கைலாயத்தின் வடபுறத்தில் அளகாபுரி என்ற நகரம் இருக்கிறது. அங்கே வாழ்ந்திருந்த வைசிரவா என்பவனுக்குக் குபேரன் என்னும் புதல்வன் பிறந்தான். அவன் இளமை முதலே சிவபெருமானை வழிபட்டுச் சிவபக்தியில் சிறந்து நின்றான். அதனால் திருவுளம் மகிழ்ந்த சிவபெருமான் அவனைத் தனக்குத் தோழனாக ஏற்றுக்கொண்டு, இருநிதிக்கும் வடதிசைக்கும் தலைவனாக இருக்கும் படி அருளினான். இவ்வாறு தலைமை பெற்ற குபேரன் புட்பகம் என்னும் தெய்வ விமானத்தைத் தனக்கு உரியதாகப் பெற்றுச் சிவபூசா துரந்தரனாக வாழ்ந்து வந்தான்.

அவன் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பல தலங்களுக்கும் பல நதிதீரங் களுக்கும் சென்று சிவபிரானைப் பூசித்து வந்தான். ஒரு நாள் அவன் தன்னுடைய விமானத்தில் ஏறி வரும்போது வளம் கொழித்துப் படருகின்ற காவிரியாற்றைக் கண் குளிரக் கண்டான். அதன் கரையில் ஓரிடத்தில் வளம் கெழுமிய சோலைகளையும் அவற்றின் நடுவே தெய்விக ஒளி பொருந்திய பதரியாகிய இலந்தை மரத்தையும் கண்டான். அவ்விடத்தில் புலியும், மானும், பசுவும், யானையும், சிங்கமும், எலியும், நாகமும் பகையின்றி ஒருங்கே ஆற்றங்கரையில் நீர் உண்டு விளையாடும் அற்புதத்தையும் பார்த்தான். அந்தத் திருத் தலத்தில் தவம் நிறைந்த முனிவர்களும், யோகிகளும், கின்னரர், கந்தருவர் முதலியோரும் குழுமியிருந்தனர். இந்தக் காட்சிகளைக் கண்ட குபேரன், 'நாம் பண்டு செய்த தவப்பயனால் இந்தச் சிறந்த தலத்தைத் தரிசித்தோம்' என்று உள்ளம் கரைந்து கைகளைக் குவித்து நின்றான். பின்பு அந்த இடத்தில் சிவபெருமானை வழி பட்டுப் பூசிக்க எண்ணினான். அந்தச் சமயத்தில் வானிலிருந்து ஓர் ஒலி எழுந்தது. "குபேரனே, முன்னாலே நீ செய்த தவப்பேற்றினால் சிவபூசை செய்யவேண்டுமென்று நீ நினைத்தாய். அதற்கு ஏற்ற தலம் இன்னதென்று சொல்லுகிறோம். காவிரி நதிக்கு மேற்குப் பக்கத்தில் பவானி என்னும் ஆற்றுக்குக் கிழக்கே, இந்த இரண்டு ஆறுகளுக்கும் நடுவில் வேதமே வடிவாகிய இலந்தை மரம் இருக்கிறது. அதன் அடியில் சோதி மயமான இலிங்கம் இலங்குகிறது. திருச்செங்கோட்டுக்கு இருபது கோச தூரத்தில் உள்ளது அந்தத் தலம். பண்டைக் காலத்தில் அசுரர்களுக்கு அஞ்சிய தேவர்கள் அந்தத் திருத் தலத்துக்கு வந்து காவிரியும், பவானியும் சங்கமமாகும் இடத்திலுள்ள இலந்தையடியில் எழுந்தருளியிருக்கும் இறைவனை வாழ்த்தினார்கள். அவர்களுடைய துதியைக் கேட்டு மகிழ்ந்த எம்பெருமான் அவர்களுக்கு முன்னே தோன்ற, தேவர்கள் முறையாகப் பூசை செய்து வழிபட்டார்கள். இறைவன் திருவருளால் அமரர்கள் பிறகு அசுரர்களாகிய பகைவர்களை வென்று நல்வாழ்வு பெற்றார்கள். தேவர்கள் வெற்றி பெறுவதற்குக் காரண மான இடமாதலின் இதற்கு விஜயாபுரி என்றும் விரபுரி என்றும் பெயர்கள் அமைந்தன.

"வைசிரவனனாகிய குபேரனே, நீ இந்தப் புண்ணிய தலத்தை அடைந்து இறைவனை வழிபடுவாயாக. இந்தத் தலத்தில் செய்யும் பூசை பலமடங்கு பலனைத் தரும்" என்று அசரீரி கூறியது.

அதனைக் கேட்ட குபேரன் தலையின்மேல் கை குவித்து நின்று மனமுருகி, இறைவனை வாழ்த்தினான். விமானத்தை விட்டிறங்கி, பதரி வனமாகிய அத்தலத்துக்கு வந்து, அங்கே பராசர முனிவன் எழுந்தருளியிருந்த ஆசிரமத்தைக் கண்டான். உடனே

அம்முனிவனை வணங்கி எழுந்து நின்றான். முனிவன் அவனுடைய அன்பைக் கண்டு மகிழ்ந்து ஆதனம் கொடுத்து இருக்கச் செய்து சொல்லலானான்: "நீ முயன்று செய்த தவத்தின் பயனால் இரண்டு நதிகளின் நடுவே தோன்றும் இந்தத் தலத்தைத் தரிசிக்கப் பெற்றாய். இந்தத் தலத்தில் யாரேனும் நிலையாக வாழ்ந்தாலும் ஒரு கணப் போதேனும் தங்கினாலும் சிவபெருமானுடைய பரிபூரண அருளைப் பெறலாம். இத்தலத்தின் சிறப்பை யறிந்து பிரமன் முதலிய தேவர்களும் முனிவர்களும் பிறரும் இங்கே வந்து தங்கி இறைவனை வழிபட்டு வருகிறார்கள். நீயும் இங்கே எழுந்தருளியிருக்கும் சிவபிரானையும் வேதநாயகியாகிய அம்பிகையையும் முறைப்படி பூசித்து அரிய பேற்றை அடைவாயாக" என்றான்.

அதனைக் கேட்ட இயக்கர் கோமானாகிய குபேரன் கண்களில் நீர் சொரிய மன முருகி ஆகாயவாணி கூறியதையும் பராசர முனிவன் சொன்னதையும் எண்ணி, அன்பு மீதூரத் தன்னை மறந்திருந்தான். பிறகு முனிவனை வணங்கி இரண்டு ஆறுகளும் கூடும் சங்கமத்தானம் சென்று, உரிய கடன்களை எல்லாம் முடித்து, உருத்திராட்சத்தையும் திரு நீற்றையும் புனைந்து கொண்டான். பூசைக்குரிய பொருள்களை எல்லாம் சேர்த்துக்கொண்டு இறைவனுடைய சந்நிதிக்குள் சென்றான். அங்கே சுயம்பு மூர்த்தியாய் எழுந்தருளி யிருக்கும் இலிங்கத்துக்கு ஆகம முறைப்படி அபிடேகம் முதலியன செய்து பூசை புரிந் தான். பூசையை நிறைவேற்றிய குபேரன் மனமுருகிப் பவானி கூடலில் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானைத் துதிக்கத் தொடங்கினான்:

*"கங்கையணி வேணிய, கலாதர; பவானி*
*மங்கையருள் நான்மறை மடந்தைமண வாள,*
*எங்கள்தனி நாயக, இலந்தைநிழல் வாழும்*
*சங்கர, புராதன, சதாசிவ, மகேச!"*

*"மங்கள கரம்பொலி பவானிநதி பொன்னி*
*சங்கம மனோகர, தயாபர; கனிச்சிப்*
*புங்கவ, அகண்டபரி பூரண, புயங்க*
*கங்கண, மகாவதரி காவன மகேச!"*

இவ்வாறு குபேரன் துதித்ததைக் கேட்ட சிவபெருமான் திருவுள்ளம் உவந்து சிவ லிங்கத்தினின்றும் தோன்றிக் காட்சியளித்தான். சிவந்த சடாமுடியும் சங்கக் குழையும் புன்னகை பூத்த முகமும் நீலகண்டமும் நான்கு தோள்களும் பன்றிக் கொம்பும் ஆமை ஓடும் அராவணியும் கொண்டு, வேதவல்லியை ஒரு பங்கில் வைத்து வந்த அபய கரங் களும் இரண்டு திருத்தாளும் ஒளிர எழுந்தருளினான். இறைவனுடைய காட்சியைக் கண்டு அன்பு மீதூர்ந்து எழுந்த குபேரன் பெருமானின் தாளில் விழுந்து எழுந்து தலையின்மேல் கைகுவித்து 'ஹர ஹர' என்ற தொனி முழக்கிப் பல பாடல்களைப் பாடினான்; நடனமாடினான்; இறைவனுடைய அருட்கடலில் ஆழ்ந்தான்.

அப்போது சிவபெருமான் அவனை நோக்கி, "நீ செய்த பூசையால் மனம் மகிழ்ந் தோம். நீ நினைத்த வரம் ஏதானாலும் கேட்டால் வழங்குவோம்" என்று திருவாய் மலர்ந் தருளினான்.

குபேரன் இறைவனை வணங்கி, "எம்பெருமானே, அன்று எனக்கு அளித்த அளகா புரியைப் போல இந்தத் தலத்துக்கும் நினக்கும் அப்பெயரே நிலவவேண்டும்" என்று பணிந்தான். இறைவன் அப்படியே வரத்தை வழங்கினான். அது முதல் இத்தலம் தட்சிண அளகை என்ற திருப்பேர் பெற்றது. இறைவனுக்கும் அளகேசன் என்னும் திருநாமம் உண்டாயிற்று. குபேரனுக்கு வரம் அருளிய எம்பெருமான் மீட்டும் இலிங் கத்துள் மறைந்தான்.

இறைவனுடைய அருள் பெற்ற குபேரன், அவ்விடத்தில் கோயிலும் நகரமும் அமைக்க எண்ணி, மயனை அழைத்துத் தன்னுடைய கருத்தைச் சொன்னான். அப்படியே அவன் அங்குள்ள காட்டைக் களைந்து மதிலும் மாளிகைகளும் மண்டபங்களும் மணி மேடைகளும் திண்ணைகளும் நாற்சந்திகளும் அமைத்தான். நந்தவனம் பலவற்றை உண்டாக்கினான். சிவபெருமானுடைய ஆலயத்தை எல்லாவகை உறுப்புக்களும் பொருந்த அழகாக அமைத்தான். குபேரன் இப்படி மயனைக் கொண்டு ஆலயம் முதலியவற்றை அமைத்த பிறகு, அப்பெருமானுக்கு விழா எடுத்துச் சிறப்புச் செய்தான். அப்பால் பராசர முனிவரிடம் விடைபெற்றுக் கொண்டு தன்னுடைய நகராகிய அளகா புரியை அடைந்தான்.

### *நான்கு அசுரர் வரலாறு:*

பழங்காலத்தில் தேவர்கள் அமுதத்துக்காகப் பாற்கடலைக் கடைந்தபோது அமுதம் எழுந்தது. தேவரும் அசுரரும் சேர்ந்து கடந்தமையால், அமுதம் எழுந்தபோது அசுரர்கள் தேவர்களை மிஞ்சிக் கொண்டு அமுதத்தை அருந்து வதற்கு வந்தார்கள். அப்போது திருமால் மோகினி வடிவத்தோடு அங்கே எழுந் தருளினான். அவுணர்கள் மோகினியின் எழிலைக் கண்டு மயங்கி அவளைச் சுற்றிக் கொண்டார்கள். "தேவர்களோடு போராடி வென்று அமுதக் குடத்தைக் கைப்பற்றி முழுவதையும் இவளுக்கு அளித்துவிடுவோம்" என்று ஆரவாரித்தார்கள். அப்போது மோகினி ஒவ்வோர் அசுரனையும் பார்த்துப் புன்முறுவல் பூத்து, யாவரையும் காமநோய் தலைக் கொண்டு மயங்கச் செய்து, அமுதக் குடத்தை வவ்வினாள். மோகினியாக வந்த திருமால் அந்தக் குடத்தைப் பாதுகாப்பான இடத்தில் வைத்துப் பிறகு தேவர்களுக்கு வேண்டிய அளவுக்கு உதவினான். அவர்களுக்கெல்லாம் கொடுத்தது போக எஞ்சிய அமுதத்தை ஒரு பொற் குடத்தில் நிரப்பி வைத்தான். அந்த அமுதைப் பராசரர் போன்ற முனிபுங்கவர்களுக்கு வழங்கவேண்டும் என்ற எண்ணத்தால், "இந்தக் குடத்தைக் கொண்டு போய்ப் பராசர முனிவனிடம் கொடுப்பாயாக!" என்று கருடனை ஏவினான். கருடனும் அமுத கும்பத்தோடு புறப்பட்டுப் பவானிக்கும் காவிரிக்கும் மத்தியில் உள்ள பத்ரிகா வனமாகிய திருநணாவை அடைந்து சிவபெருமானைப் பணிந்து, கொண்டு வந்த அமுத கும்பத்தை அங்கிருந்த பராசர முனிக்கு வழங்கினான்.

அதனை வாங்கிக் கொண்ட பராசரன் இறைவனுடைய திருவருளை எண்ணி உருகினான். பிறகு அசுரர்கள் அதனைக் கவருவார்கள் என்று பயந்து, காடுகளிலும் மலைக் குகைகளிலும் தவம் செய்த பல முனிவர்களை அழைத்து அங்கே இருக்கச் செய் தான். சமய மறிந்து அதனைப் பயன்படுத்தலாம் என்று, பாதுகாப்பான இடத்தில் அதை வைத்துவிட்டுத் தன்னுடைய பர்ணசாலையில் வந்து தங்கினான்.

காமமோகிதராகி மயங்கியிருந்த அசுரர்கள் ஒருவாறு தெளிந்து, திருமாலே தமக்கு அமுதம் கிடைக்காதபடி செய்து வஞ்சித்தான் என்பதை உணர்ந்து, கோபங் கொண்டு அமுதக் குடத்தைத் தேடிப் புறப்பட்டார்கள். பலவகையான படைக் கலங்களை ஏந்திக் கொண்டு சேனைகளோடு வந்த அவர்கள், தேவர்களை அச்சுறுத்தித் தேவலோகம் முழுவதும் தேடியும் காணுமல், நிலவுலகத்துக்கு வந்தார்கள். பல இடங்களைப் பார்த்துக் கொண்டு பவானி கூடலை அணுகினுர்கள். அங்கே உள்ள முனிவர்களையும் யோகியர் களையும் பயமுறுத்தி, அமுதக் குடம் எங்கே இருக்கிறது என்று வினவினுர்கள்.

இவ்வாறு எழுந்த அசுரப் படைகளுக்குத் தலைவர்களாக நால்வர் இருந்தனர். அவர்கள் இலவணுசுரனின் பிள்ளைகளாகிய தண்டகாசுரன், வீராசுரன், வஞ்சகாசுரன், வக்கிராசுரன் என்பவர்கள். அவர்கள் தங்கள் படைகளை நான்கு பிரிவாகப் பிரித்துக் கொண்டார்கள், தண்டகாசுரனைத் தலைவனுகக் கொண்டு எண்ணுயிரம் அசுரர்கள் ஒரு படையாக அமைந்தார்கள். பவானி கூடலுக்குத் தெற்கே உள்ளே மங்களகிரியில் தண்டகாசுரன் தன் படையுடன் வந்து தங்கினுன். வீராசுரன் என்பவன் பதினுயிரம் அசுரர்களோடு வீரமாநகர் என்ற இத்தலத்துக்கு மேல் திசையில் சென்று தங்கினுன். வஞ்சகாசுரன் ஆருயிரம் அசுரர்களோடு கீழ்த் திசையிலும், வக்கிராசுரன் பதினெட்டா யிரம் அசுரர்களோடு வடக்குத் திசையில் வேதகிரியை அடுத்தும் தங்கினுன்.

இவ்வாறு நான்கு திசைகளிலும் அசுரர் படைகள் கருங்கடலைப் போலத் திரண்டு திருநணுவை முற்றுகை யிட்டிருப்பதை அறிந்து, பராசரன் முதலிய முனிவர்கள் திகைத் தார்கள். அமுதம் இருந்த பொற் குடத்தைப் பூமிக்குள் புதைத்துத் திருநணுவுடைய நாயகனைப் போற்றிப் பிறகு இந்திரனைக் குறித்து, "இந்த அமுதக் குடத்தைக் காப்பது உன்னுடைய கடமை" என்று வேண்டிக் கொண்டார்கள். இந்திரன் அவர்களுடைய விண்ணப்பத்தைக் கேட்டு வாயுவையும் வருணனையும் அந்த அமுதக் குடம் தெரியாதபடி மண்மாரியும் புனல்மாரியும் பெய்து மறைத்துக் காக்கும்படி ஏவினுன். சங்ககிரி, வேதகிரி, பதுமகிரி, நாககிரி, மங்களகிரி என்னும் ஐந்து மலைகளுக்கும் நடுவில் உள்ள திருநணு என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் வேதநாயகி சமேதனுகிய சங்கமேசு வரனுடைய சந்நிதிக்குத் தெற்கே அந்தக் குடத்தை வைத்திருந்தார்கள். இந்திரனுடைய கட்டளைப்படி மேகங்கள் பொங்கி வந்து மண்ணும் புனலும் கலந்த மழையை அமுதக் குடம் மறையும்படி பொழிந்தன.

பராசரன் அசுரர்களுடைய வலிமையைப் போக்குவதற்காக எம்பெருமானை வழி பட்டு வேண்டிக்கொள்ளத் திருவாலயத்தை அடைந்தான். அடைந்து, "எம்பெருமானே, நின்னுடைய திருவருளால் அமுத கும்பத்தை இங்கே பாதுகாப்பாக வைத்தோம். அதனை அசுரர்கள் கவர்வார்கள் என்று முனிபுங்கவர்கள் அஞ்சுகிறுர்கள். இந்த இடையூற்றி னின்றும் எங்களையும் அமுதக் குடத்தையும் காத்தருளவேண்டும்" என்று துதித்துப் பராவினுன். இறைவன் அப்போது சோதி வடிவாக எழுந்தருளிக் காட்சி அளித்தான். அந்தக் கோலத்தைக் கண்டு பராசரன் முதலியவர்களெல்லாம் மனம் குழைந்து துதிக்கத் தொடங்கினுர்கள். "சிவபெருமானே, தேவர்களில் இந்திரன் நீ. பிரமாதி மூர்த்திகளில் சதுர்முகன் நீ. மாயா தேவதைகளுக்குள் திருமால் நீ. உருத்திரர்களுள் சங்கரன் நீ. வேதங்களில் சாமவேதம் நீ. நான்கு வருணத்தினரில் வேதியன் நீ. பன்னிரண்டு

ஆதித்தர்களில் உபேந்திரன் நீ. தெய்வ முனிவர்களில் நாரதன் நீ. தெய்வ மடந்தையர் களில் உமாதேவி நீ. ஒளிச் சுடர்களில் சூரியன் நீ. மகாயோகிகளில் சனத்குமாரன் நீ. ஈசுவரர்களில் மகேசுவரன் நீ. பறவைகளில் கருடனும், மலைகளில் மேருமலையும், யானை களில் ஐராவதமும், ஆறுகளில் கங்கையும், வீரர்களில் வீரபத்திரனும், கணங்களில் விநாயகனும், பதங்களில் முத்தியும் நீயே. மனுக்களில் ஸ்வாயம்பு மனுவும், பூதங்களில் வானமும், அந்தக்கரணங்களில் மனமும், வில்வீரர்களில் இராமனும், மரங்களில் கற்பகமும் நீயே. எல்லாப் பொருள்களும் நீயே. எங்குமாய் நிறைந்த பரப்பிரம்மமும் நீயே'' என்று, இவ்வாறு பராசரனும் மற்ற முனிவர்களும் துதித்து நிற்க, சிவபெருமான் பராசரனை நோக்கித் திருவாய் மலர்ந்தருளலானான்: "தவஞ்செய்பவர்களில் உன்னைப் போல் சிறந்தவர் யார்? இந்த உலகத்தில் இந்தப் பதரிகாவனம் போலச் சிறந்த தலம் வேறில்லை. நீ பலகாலம் தவம் செய்து, என்னை வழிபட்டு அதனால் உயர்ந்த பேற்றை அடைந்தாய். உன்னுடைய மனத்தில் நினைந்ததை நாம் அறிந்தோம். அமுத கும்பத்தை அசுரர்கள் கொண்டு போவார்கள் என்ற அச்சத்தை விடுப்பாயாக. அந்த அசுரர்கள் முன்னாலே செய்த தவப்பேற்றால் இந்தத் தலத்தில் இறுதியை அடையும் பொருட்டு வந்திருக்கிறார்கள். எம்முடைய அருள் சக்திகளால் அசுரர்களை அழிக்கச் செய்து உன்னுடைய எண்ணத்தை நிறைவேற்றுவோம், அதுவரையில் எம்முடைய ஆலயத் தில் பஞ்சாட்சர மந்திரத்தை ஜபித்துக்கொண்டு தங்கியிருப்பாயாக. நம்முடைய வாம பாகத்தில் உறையும் வேதநாயகியினிடமிருந்து நான்கு சக்திகள் உதித்து அசுரர்களை அழித்து, இந்த நகரின் நான்கு திசைக்கும் காவலாக இருப்பார்கள். அசுரர்களும் சாருபம் பெறுவார்கள். சந்தனத்தை வெட்டிய ஆயுதமும் மணம் வீசுவது போலப் பகையுணர்ச்சி யுடன் இந்தத் தலத்துக்கு வந்து இங்கே இறந்தாலும் நல்ல கதி உண்டாகும்'' என்று முனிவனுக்கு அருள் செய்து, தன்னுடைய தேவியைப் பார்த்துத் தன் குறிப்பை வெளிப் படுத்தி, இலிங்கத்துள் மறைந்தான் சிவபெருமான்.

அப்பால் பராசரன் வேதநாயகியை வாழ்த்திப் பஞ்சாட்சரத்தைச் செபித்துக் கொண்டு அங்கே இருந்தான். இறைவனுடைய திருவருளால் வேதநாயகியினிடமிருந்து நான்கு சக்திகள் தோன்றினார்கள். கண்டார் நடுங்கும் வெந்திறலோடும் படைக் கலங்க ளோடும் ஏகவீரை, ஜயந்தி, மர்த்தினி, சண்டகாதினி என்று துர்க்கையின் அம்சமுள்ள நான்கு சக்திகள் வந்து நின்றார்கள். வேதநாயகியைப் பணிந்து, "எங்களுக்கு இட்ட பணி யாது?'' என்று கேட்டனர். எம்பெருமாட்டி, "இந்த நகர்ப்புறத்தே அலைகடலைப் போல வளைந்திருக்கும் அசுரர்களை அழித்துவிட்டு இங்கே வாருங்கள்'' என்று அருள் செய்தாள். உடனே அந்த நால்வரும் யாவரும் அஞ்சும்படியாக ஆரவாரம் செய்து கொண்டு அசுரர்களை அழிக்கப் புறப்பட்டனர்.

அசுரர்களுக்கும் இந்தச் சக்திகளுக்கும் கடுமையான போர் மூண்டது. அசுரப் படை தளர்ச்சியை அடைந்தபோது, அப்படையில் உள்ளார் தம் படைத் தலைவராகிய நால்வரையும் அடைந்து, "நான்கு பெண்கள் நம்முடைய படைகளை எல்லாம் சாடினர்'' என்று சொன்னார்கள். அது கேட்டு மானமும் கோபமும் மீதூரத் தண்டகன் என்னும் அசுரன், "நான் சென்று அந்தப் பெண்களைக் கொன்று வருகிறேன்'' என்று புறப்பட்டான். அவன் அசுரப் படைகளோடு சென்று கடுமையாகப் போர் செய்தான். அவன் விடுத்த

ஆயுதங்களை எல்லாம் ஏகவீரை என்னும் சக்தி வேறு பாணங்களை விட்டு அறுத்தெறிந்தாள். பல அசுரர்கள் பட்டனர். அப்போது தண்டகாசுரன் தேரின் மேல் ஏறி வந்து, ஏகவீரையின் முன் நின்று, "பெண்ணே, உன்னுடைய இடை மெலிந்ததுபோல உன்னுடைய வலிமையும் மெலிந்தது என்று எண்ணி, இதுவரைக்கும் உன்னை ஒன்றும் செய்யாமல் இருந்தேன். ஒரு பெண்ணைக் கொன்றான் என்ற பேர் எனக்கு வராமல் நீ பிழைத்துப் போவாயாக" என்று சொன்னான். அது கேட்ட ஏகவீரை புன்முறுவல் பூத்து, "தண்டகாசுரனே, பேய்கள் உன்னுடைய உடலைச் சுவைக்கும்படி ஆயிரம் துண்டுகளாக ஒரு கணத்தில் வெட்டிப் போடுவேன். இதைப் பார்ப்பாயாக" என்று சினந்து கூறினாள். அதைக் கேட்டுச் சினங்கொண்ட அசுரன் மலை போன்ற பெரிய கதாயுதத்தை எடுத்துச் சுழற்றி வீசினான். அதனை ஏகவீரை தன்னுடைய மோதிரவிரலால் பொடிபடச் செய்தாள். அதன் பின்பு பல பல படைக்கலங்களை அசுரன் ஏவ, அவற்றையெல்லாம் அந்தச் சக்தி அழித்து நின்றாள். இறுதியில் சூலத்தை எடுத்துத் தண்டகாசுரன் மேல் வீச, அவன் உயிரை இழந்தான். தேவர்கள் பூமாரி பெய்து அவளை வாழ்த்தினார்கள்.

வெற்றி பெற்ற ஏகவீரை வேதநாயகியின் சந்நிதியில் போய் வணங்கி நிற்க; எம்பெருமாட்டி அந்தத் துர்க்கா சக்தியை இந்த நகரத்தின் கீழ்த்திசைக்குக் காவலாக இருக்கும்படி பணித்தாள்.

தண்டகாசுரன் போரில் சாய்ந்த செய்தியைக் கேட்ட வீராசுரன் தீயைப் போலப் பொங்கித் தேரின்மேல் ஏறிக்கொண்டு போர்க்களத்தை அடைந்தான். "என்னுடைய தம்பியை அழித்த பெண் எங்கே?" என்று கண்ணில் கனல் தழைக்க இதழைக் கடித்துக் கொண்டு கேட்டான். அப்போது ஜயந்தி எனும் சக்தி கையில் வில்லை எடுத்துக்கொண்டு போர்க்களத்துக்கு வந்தாள். முதலில் அசுரனுடைய வில்லை மோதி உடைத்தாள். அவன் கதாயுதத்தை வாங்கி ஜயந்தியின் முன் உங்காரத்துடன் எறிந்தான். அந்தக் கதையை எளிதிலே பொடிபடுத்திவிட்டுச் சூலாயுதத்தை எடுத்து வீசினாள் ஜயந்தி. அசுரனும் மற்றொரு சூலத்தை எடுத்து வீச ஜயந்தி விட்ட சூலம் அசுரன் விட்டதை அழித்துவிட்டு அசுரனையும் அழித்து மீட்டும் ஜயந்தியின் கையில் வந்து அமர்ந்தது; வெற்றி பெற்ற ஜயந்தி வேதநாயகியைச் சென்று வணங்கி, அந்தப் பெருமாட்டியின் ஏவலால் இந்த நகரின் தென்திசையில் காவலாக அமர்ந்தாள்.

அடுத்தபடியாக வஞ்சகாசுரன் போர்க்களத்துக்கு வர, அவனை எதிர்த்து மர்த்தினி என்னும் சக்தி முந்தினாள். வஞ்சகன் ஒரு வயிர வாளை எடுத்து மர்த்தினியைத் தாக்கினான். அது மர்த்தினியின் மேற்பட்டுப் பொடிப் பொடியாகப் போயிற்று. மர்த்தினி தன் கையினால் அசுரன் தலையில் ஓங்கிக் குட்டினாள். அது தாங்காமல் அசுரன் முடிந்தான். வெற்றிபெற்ற மர்த்தினி வேதநாயகியை வணங்க, அவளை அம்பிகை மேல் திசைக்குக் காவலாக இருக்கும்படி பணித்தாள்.

தன்னுடைய மூன்று தம்பியரும் போர்க்களத்தில் மாண்டதை அறிந்து யாவருக்கும் மூத்தவனாகிய வக்கிராசுரன் கொதித்தெழுந்தான். அவன் பதினாயிரம் யானைகளின் பலம் கொண்டவன். இந்திரன் முதலியோரை அவன் எதிர்த்தால் அவர்கள் புறங்காட்டி ஓடுவார்கள். அவன் வக்கிர கவசம் பூண்டு வில்லையும் அம்பறுத் தூணியும் எடுத்துப்

போர்க்கோலம் கொண்டான். நால்வகைச் சேனையும் புடைசூழ ஒரு தேர்மேல் ஏறிப் போர்க்களம் குறுகினன். அவனுடைய கோலத்தையும் மிடுக்கையும் கண்டு அமரர் அஞ்சினர். ஆதிசேடனும் நடுங்கினன். எட்டுத் திசைகளிலும் அசுரர் படையின் ஆர்ப்பொலி எழுந்தது.

சண்டகாதினி என்ற சக்தி போர்க்கோலம் பூண்டு களத்தை அணுகினள். அவளைக் கண்ட வக்கிராசுரன் கொதித்து, "இன்று உன்னையும் என் தம்பியரை மாய்த்தவர்களையும் யமபுரம் குறுகச் செய்கிறேன், பார்" என்று கூறி எழுந்தான். அது கேட்ட சண்டகாதினி புன்னகை பூத்து, "உன்னுடைய வலிமையையும் வீரத்தையும் ஒரே அம்பினல் வீழ்த்தி விடுவேன். தருமம் செய்யாதவர்கள் கைப்பொருளை இழப்பதைப்போல நீ அழியப் போகிருய். உன்னைச் சேர்ந்தவர்களையும் வாளுக்கு இரையாக்குவேன்" என்று அறை கூவினள். அசுரன் தன் வில்லை வளைத்து அம்புகளை விடத் தொடங்கினன். சக்தியும் தன்னுடைய வில்லிலிருந்து அம்புமாரியைப் பொழிந்து அவன் விடும் பாணங்களையெல்லாம் தகர்த்தாள். பிறகு அவனுடைய தேரையும் பாகனையும் சிதைத்தாள். அப்போது வக்கிராசுரன் பெரிய உருவத்தை எடுத்துக்கொண்டு தரையிலே குதித்து வில்லை ஏந்தியபடி எதிர்வந்து நின்ருன். அது கண்ட சண்டகாதினி அவனைப்போல இருமடங்கு பெரிய உருவம் எடுத்து வந்து நின்ருள். இருவருக்கும் பெரும் போர் மூண்டது. அசுரன் விட்ட சரங்களுக்கு மாற்ருன சரங்களைவிட்டு அந்தச் சக்தி எல்லாவற்றையும் குலைத்தாள். அசுரன் ஆக்கினேயாஸ்திரம்விட சக்தி வாருணாஸ்திரம் விட்டு அழித்தாள். அசுரன் பன்னகாஸ்திரம் விட அந்த வீரமகள் கருடன் படையை விட்டுத் தொலைத்தாள். தான் விட்ட பாணங்கள் எல்லாம் அழிந்தொழிவதைக் கண்ட அசுரன் ஒரு கதையை எடுத்துச் கழற்றி வீசினன். சக்தி அதை ஓர் அம்பால் கணப்போதில் சிதைத்தாள். மற்ருேர் அம்பு தொடுத்து அவனுடைய கவசத்தையும் வில்லின் நாணையும் துணித்தாள். அசுரன் வெகுண்டெழுந்து ஓர் வேலை எறிந்தான். சண்டகாதினியும் அதற்கு எதிரே ஒரு வேலைத் தொடுத்துப் பொடிபடுத்தினள்.

இப்படித் தளர்வுருமல் இருவரும் போரிடும்போது வானிலிருந்து ஓர் ஒலி சண்டகாதினியின் காதில் விழுந்தது. "பல பல படைக்களங்களால் இந்த அசுரனை மாய்த்தல் அரிது. இவனுக்குப் பிரமன் தந்த வரம் அது. எருமையின் கொம்பு ஒன்றை எடுத்து இவன் மார்பில் குத்தினுல் இவன் இறந்து படுவான்" என்று அந்த அசரீரி கூறியது. அதைக் கேட்ட சண்டகாதினி அப்படியே எருமைக் கொம்பை உருவி அசுரன் மார்பில் குத்தவே, இரத்தம் ஆறுபோல் ஒழுக மலைபோல மயங்கி விழுந்தான் அசுரன். இரண்டரை நாழிகை நேரம் அவ்வாறு கிடந்தவன் பிறகு அறிவு தெளிந்து எழுந்து, ஆணவம் அகன்று சத்துவகுணம் நிரம்பியவனய் இரண்டு கண்களிலும் நீர் வழிய, மனம் உருகி எதிர் நின்ற சண்டகாதினியை நோக்கி, "வேத முடிக்கும் எட்டரிய முதல்வியாகிய நின்னைச் சிறிதும் அறியாத புல்லறிவுடைய நாயினேன் இந்நகரில் நின்னேடும் சமர் மலைந்தேன். இந்தப் பிழையைப் பொறுத்து யான் உய்யும் வழி காட்ட வேண்டும்" என்ருன்.

சக்தி, "நீ ஒன்றுக்கும் அஞ்சாதே. உனக்கு எது வேண்டுமோ அதைச் சொல்; வழங்குவோம்" என்று சொல்ல, அவன், "அன்னையே, இந்தத் தலத்தில் உன்னேடு நான் சமர் புரிந்ததால் இதற்கு ஏன் நாமம் அமைய வேண்டும். இங்கே எழுந்தருளியிருக்கும்










1. சிரிக்கும் சிலை—
கல் விரிக்கும் கலை

2. கொட்டிக் கொடுத்த
கெட்டி முதலியார்

3. கடவுள் பணிக்குக்
காத்துக் கிடக்கும்
கற்குவிரில்

1

2

3



இராஜ கோபுர மாடத்தில் அமைந்துள்ள புதிய சிற்பங்கள் பொலியும் காட்சி

சிவபெருமானுக்கும் என்னுடைய நாமம் இருக்க வேண்டும். என் மார்பில் புதைந்திருக்கும் எருமைக் கொம்பை வாங்கி, எனக்கு நற்கதி அருளவேண்டும் என்றான். அசுரன் வேண்டுகோளைக் கேட்ட சண்டகாதினி திருநணுவில் எழுந்தருளியிருக்கும் வேதநாயகியையும் சங்கமேசுவரனையும் செய்து வணங்கி, அசுரனுடைய வேண்டுகோளைக் கூறினான். சிவபெருமான், ''அவ்வாறே ஆருக'' என்று அருள் செய்தான். பின்பு போர்க்களத்துக்கு வந்து வக்கிராசுரன் மார்பில் குத்தியிருந்த கொம்பைப் பறிக்க, அவன் சிவசிவ எனக் கை கூப்பியபடியே ஆவியை விட்டான். அவன் கைலையை யடைந்து கணங்களில் ஒருவனான். அவனுடைய சகோதரர்கள் மூவரும் சிவ சாருபம் பெற்றனர்.

சண்டகாதினி வேதநாயகியைப் போய் வணங்கி நிற்க, ''நீ இந்த நகருக்கு வட திசையில் வைகுவாயாக'' என்று அப் பெருமாட்டி அருள் செய்ய, அந்தச் சக்தி அப்படியே வடதிசைக் காவல் பூண்டாள். இவ்வாறு கிழக்கே ஏகவீரையும் தெற்கே ஜயந்தியும் மேற்கே ஜயமர்த்தினியும் வடக்கே சண்டகாதினியும் அமர்ந்து பவானி கூடலை காவல் செய்து வருவாராயினர். மழை குன்றும் போது இந்தச் சக்திகளுக்கு அபிஷேகம் செய்து வழிபட்டால் மழை பெய்து நலம் உண்டாகும்.

வக்கிராசுனுடைய வேண்டுகோளின்படி இந்த நகருக்கு வக்கிரபுரம் என்ற பெயரும் சிவபெருமானுக்கு வக்கிரேசுவரன் என்ற திருநாமமும் அமைந்தன.

### *அமுதலிங்கப் பிரதிஷ்டை :*

அசுரர்களின் தொல்லை எல்லாம் ஒழிந்த பின்பு பராசர முனிவன் சிவபெருமான் சந்நிதிக்கு நிருதி திசையில் ஆழ்ந்து கிடந்த அமுதக் குடத்தை அகழ்ந்தெடுத்தான். பல நாட்களாகக் கல்லும் மண்ணும் நிறைந்த இடத்தில் புதைந்து கிடந்தமையால் அந்த அமுதம் கல்லைப் போலத் திரண்டு கடினமாக இருந்தது. பராசரன் அதைக் கண்டு வியந்து இது இலிங்க வடிவாக விளங்குகிறது என்று மகிழ்ச்சி பெற்று, அதனைப் பிரதிஷ்டை செய்ய எண்ணினான். அமுதம் புதைந்துகிடந்த பள்ளத்தை முனிவன் ஒரு தீர்த்தமாக்கி, அமுதத் தீர்த்தம் என்ற பெயரிட்டுக் கங்கை முதலிய தெய்வத் திருநதிகளை அங்கே ஆவாகனம் செய்தான். உடன் இருந்த முனிவர் யாவரும் தங்கள் கமண்டலத் தீர்த்தத்தை அதில் பெய்தார்கள். பின்பு பஞ்சாட்சரத்தை ஜபித்து விதிப்படி மூவாயிரம் முனிவர்களும் நீராடித் தர்ப்பணம் முதலியவற்றைச் செய்தார்கள். பராசரன் மங்கல வாத்தியங்கள் முழங்க அமுதக் குடத்தோடு பதரி மூலநாயகனை வலஞ் செய்து ஆலயத்துக்கு அருகில் நிருதி திசையில் அந்த அமுதத்தை லிங்க உருவமாகத் திரட்டிப் பிரதிட்டை செய்தான். பூஜை முதலியன செய்து அமுதலிங்கப் பெருமானைத் தோத்திரம் செய்யத் தொடங்கினான்.

*''வலந்தரு புலிக்கால் மாதவன் மழலை*
*மதலைபால் வேண்டிட இரங்கி*
*நலந்தரு தண்பால் நறுங்கடல் பரிந்து*
*நல்கிய நம்பனே போற்றி !*
*சலந்தரும் கனகன் தாக்கிய தூணில்*
*சனித்திடும் மானிட மடங்கற்*
*கலந்தசெங் கதிரோன் அணையகூர் ஆழி*
*அளித்தருள் அமலனே போற்றி !''*

*''கந்தடு தருகட் கடாங்கவுட் பணிக்கைக்*
*கதக்களிற் றுரியனே போற்றி*
*அந்தகன் ஆவி பறித்தசெஞ் சூல*
*அடற்படைச் செங்கையாய் போற்றி !*
*வந்தெதிர் கூற்றை மடித்தொரு மறையோன்*
*மைந்தனுக் காருயிர் அளித்த்*
*சந்திர மௌலிச் சடையனே போற்றி !*
*சங்கரா சயசய போற்றி !''*

இவ்வாறு பராசரன் துதி செய்ய அமுதலிங்கத்திலிருந்து இறைவன் எழுந்தருளிக் காட்சி கொடுத்தான். தன்னை வணங்கிய முனிவனைப் பார்த்து, ''பதரி மூலத்தில உள்ள சிவலிங்கத்தில் நாம் எழுந்தருளியிருப்பதைப் போல இந்த அமுதலிங்கத்திலும் இருந்தருளி வழிபடுபவர்களுக்கு வேண்டிய வரங்களைக் கொடுப்போம். எத்தகைய பிழையைச் செய்வாராயினும் மனம் இரங்கி இங்கே வந்து நீ உண்டாக்கிய அமுத தீர்த்தில் நீராடி அமுதலிங்கத்தை வழிபடுவார்களானுல் அவர்களுடைய பாவத்தைப் போக்கி நலம் உண்டாக்குவோம்'' என்று திருவாய் மலர்ந்தருளி இறைவன் மறைந்தான். பராசரனும் மற்ற முனிபுங்கவர்களும் மகிழ்ச்சிக் கடலில் துளைந்து ஹரஹரவென்று ஆர்த்தார்கள். பிறகு பராசரன் அமுதம் இருந்த குடத்தைக் கொணடுபோய் அமுத தீர்த்தத்தில் புதைக்கவே, அங்கிருந்து ஓர் ஊற்றுப் புறப்பட்டுக் காவிரி பவானி சங்கமத்தில் கலந்தது. இதனுல் அவ்விடம் மூன்று நதிகளின் சங்கமமாக விளங்கலாயிற்று. காவிரியைக் கங்கையாகவும் யமுனையே பவானியாகவும் அமுதநதியே வாணியாகவும் அமைய, இந்தத் தலம் திருவேணி சங்கமத்தைப் போன்ற சிறப்பை அடைந்தது. பராசரன் அமுதத்தைத் திரட்டித் தன்னுடைய திருக்கரத்தால் இலிங்க வடிவாக்கி நிறுவியதால் அதற்குக் கரதலலிங்கம் என்னும் திருநாமமும் உண்டாயிற்று. சுதா சங்கமலிங்கம் என்ற பெயரும் அமைந்தது. இந்த அமுதலிங்கமூர்த்தியின் சந்நிதியில் தேவர்கள் ஒரு தீர்த்தத்தை உண்டாக்கித் தேவதீர்த்தம் என்ற பெயர் அமையச் செய்தார்கள். தேவர்கள் தம் கையால் அகழ்ந்து அமைத்த தேவதீர்த்தத்தில் நீராடி ஆதிகேசவன் பாதமலர் பணிந்தவர்களுக்கு எண்ணிய காரியம் இனிது நிறைவேறும்.

பராசர முனிவன் அத்தலத்தில் சிவபெருமானுக்குத் திருவிழாக்களை நடத்திச் சிறப்பித்தான். சித்திரை மாதம் பூர்வபட்சத்தில் திருவாதிரையும் சப்தமி திதியும் பொருந்தும் சுபதினத்தில் துவசாரோகணம் செய்து, இந்திரன் முதலிய தேவர்களை அழைக்க, அவர்கள் வந்து குழுமினுர்கள். பின்பு ஒவ்வொரு நாளும் வாகனத்தில் எம் பெருமானை எழுந்தருளிச் செய்து பௌர்ணமி வரைக்கும் விழாவை நடத்தினுன். இறைவன் திருவீதி உலா வரக்கண்டு தேவர்களும் பூவுலகத்தில் உள்ளவர்களும் கண்டு களித்து இன்புற்றுர்கள். பௌர்ணமியன்று குபேரன் செய்து வைத்த பொன் தேரில் இறைவனையும் அம்பிகையையும் எழுந்தருள்ச் செய்வித்துத் தேர் விழாவை நன்கு நடத்தினுன் முனிவன். திருத்தேர் விழாவுக்கு முதல் நாளாகிய சதுர்த்தசியன்று இந்தத் தல புராணத்தைப் பாராயணம் செய்பவர்களுக்குக் கொடிய பாவங்கள் தீரும். பராசரன் அத்தலத்தில் இருந்த மூர்த்திகளைத் தரிசித்துக் காலந்தவறுமல் பூசை செய்து கொண்டு இந்நகரில் இருந்து தவஞ்செய்து வந்தான்.

இந்த நகரத்துக்குத் திருநணு, சங்கமக்ஷேத்திரம், வீரபுரம், பதரிவனம், தட்சிண அளகை, பராசர க்ஷேத்திரம், வக்கிரபுரம், பவானி கூடல் என்ற திருநாமங்கள் உண்டாயின.

***தர்மசர்மன் சாபம் தீர்ந்தது :***

அங்கதேசத்தில் அந்தணர்கள் பலர் வாழ்ந்திடும் ஓர் ஊரில் யக்ஞசர்மன் என்ற வேதியன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு ஒரு மைந்தன் பிறக்க, அம்மைந்தனுக்குத் தர்ம சர்மன் என்று பெயரிட்டு, உரிய காலத்தில் முந்நூல் அணிவித்து வேதம் முதலிய சாத்திரங்களை ஓதுவித்தான். குருகுலவாசத்தில் இருந்து கலைகளை எல்லாம் நன்கு கற்றறிந்த தர்மசர்மன், குருவைப் பணிந்து விடைபெற்றுத் தன்னுடைய தாயையும் தந்தையையும் சென்று பணிந்து அவர்களுடன் வாழ்ந்தான். அவனுக்குத் திருமணம் செய்ய எண்ணி மகளையும் பேசினார்கள். அதற்கு முன் வேண்டிய பொருள்களை யெல்லாம் ஈட்டினார்கள். அப்போது ஒரு நாள் யக்ஞசர்மன், "காட்டுக்குச் சென்று தர்ப்பை, சமித்து ஆகியவற்றைக் கொண்டுவா'' என்று ஏவ, அவன் வேறு சில அந்தணச் சிறுர்களையும் அழைத்துக்கொண்டு காட்டுக்குச் சென்றான். அங்கே அவர்கள் வைகானச முனிவன் ஆசிரமத்தைக் கண்டார்கள். அம்முனிவனுடைய மைந்தனாகிய மாலுதான முனிவன் ஒரு மர நிழலில் எல்லாவற்றையும் மறந்து தவம் செய்துகொண் டிருந்தான். தலை முழுவதும் சடையும் மேனியெங்கும் உரோமக்காடும் கை விரல்களில் நீண்ட நகங் களும் தோன்ற அமர்ந்திருந்த அம்முனிவனைக் கண்டு, தர்மசர்மனும் பிறரும் அவன் மேல் மண்ணையும் கற்களையும் வாரி வீசினார்கள். அந்த முனிவன் தன்னை மறந்து யோக நிலையில் இருப்பது கண்டு மீண்டும் மணலையும் கல்லையும் வாரிப் பெய்தார்கள். அப்போது முனிவன் கண் விழித்துப் பார்த்துச் "சிறு பிள்ளைகள் அறியாமல் செய்தார்கள்'' என்று எண்ணி, அந்த இடத்தை விட்டு வேறிடம் சென்று தவம் செய்யலானான், அங்கும் அவர்கள் சென்று கல்லை வீச முனிவன் சிறிது கோபமுற்று, "நீங்கள் கல்லாக மாறுவீர் களாக!'' என்று சாபமிட்டான். உடனே அவர்கள் பயந்து, அம்முனிவனைப் பணிந்து, 'எங்கள் குற்றத்தைப் பொறுத்தருள வேண்டும்'' என்று வேண்டினார்கள். "உங்களுடைய சாபம் போவதற்குரிய பரிகாரத்தைச் சொல்கிறேன். தெற்குத் திசையில் உளள கொங்கு தேசத்தில் காவிரியும் பவானியும் அமுத நதியும் ஒன்றாகச் சேரும் சங்கம க்ஷேத்திரத்தில் பதரி மரநிழலில் சுயம்பு மூர்த்தியாகச் சிவபெருமான் விளங்குகின்றான். அந்தத் தலம் தன்பால் வந்தவர்களுடைய பாவங்களையெல்லாம் போக்கி, வேண்டிய நலங்களைத் தரும். அந்தத் தலத்துக்கு நீங்கள் சென்று அங்குள்ள புண்ணிய தீர்த்தத்தில் ஆடினால் உங்கள் சாபம் நீங்கும்'' என்று கூறி, மீண்டும் தவம் செய்யத் தொடங்கினான். அதைக் கேட்ட தர்மசர்மன் மற்ற அந்தணப் பிள்ளைகளோடு வழி நடக்கும்போது, அங்கே வந்த பெரியவர் களிடம் தாம் சாபம் பெற்ற செய்தியைத் தங்கள் தாய் தந்தையருக்கு உரைக்கும்படியாக வேண்டிக் கொண்டான். சிறிது நேரத்தில் சாபத்தின் பயனாக அவர்கள் யாவரும் கல் உரு அடைந்தார்கள்.

சாபம் பெற்ற தர்மசர்மன் கூறியதைக் கேட்டுச் சென்ற வழிப்போக்கர்கள் அவனு டைய தந்தையை அடைந்து நடந்ததைச் சொன்னார்கள். அதைக் கேட்ட யக்ஞசர்மன் மார்பிலும் தலையிலும் அடித்துக் கொண்டு மிக்க துயரத்தில் ஆழ்ந்தான். அப்போது வந்த வர்கள் தாம் கேட்டபடி சாப நிவாரணத்துக்கு உரிய வழியைச் சொன்னார்கள். உடனே

சிறிது தெளிவு பெற்ற யக்ஞசர்மன் பவானி கூடலுச்குச் செல்ல நினைத்தான். மற்ற மறையவர்களோடும் காட்டுக்குச் சென்று ஒரு மரத்தினடியில் சிலை வடிவாக இருந்த மைந்தர்களைக் கண்டான். அந்தக் கல் உருவங்களை மறையவர் தம்முடைய தோளில் தூக்கிக் கொண்டு பவானியை நோக்கிப் புறப்பட்டார்கள். அவர்கள் பதரி வனத்தை அணுக அணுக அந்தக் கல் உருவங்கள் நெட்டியைப் போலக் கனம் குறைந்து வருவதை அறிந்தார்கள். யக்ஞசர்மன் சிவபெருமானுடைய கோயிலையும் கோபுரத்தையும் கண்டு வணங்கினான். அந்தத் தலத்துக்குள் புகுந்து மறையவர்கள் திரிவேணி சங்கம தீர்த்தத்தை அடைந்து, சங்கற்பம் செய்து நீராடித் தர்ப்பணம் செய்து மற்ற நியமங்களையும் முடித் தார்கள். பிறகு தாம் கொண்டு வந்திருந்த சிலையுருவங்களைப் பஞ்சாட்சர மந்திரத்தை ஜபித்து மூன்று முறை அந்தச் சங்கமப் புனலில் ஆட்டினார்கள். கல்லுருவாகிய மைந்தர்கள் எல்லோரும் வியக்க, உயிர்பெற்று எழுந்து தம் தந்தைமாரைப் பணிந்தனர். தர்மசர்மாவும் தந்தையையும் தாயையும் அந்தணர்களையும் வணங்கி எழுந்து நின்றான். பின்பு அவன் வேதநாயகி பாகனை விதி முறைப்படி பூசித்து, அங்கப் பிரதட்சணம் செய்து, சில யக்ஞங்களை முடித்து இறைவனுடைய திருவருளால் குறை நீங்கியிருந்தான் பின்பு, பெற்றவர்களோடு அங்க தேசம் சென்று வாழ்ந்து வந்தான். அவனுடைய தந்தை அவனுக்குத் திருமணம் செய்து சிலகாலம் வாழ்ந்து, பிறகு இறைவன் திருவடியை அடைந்தார். தர்மசர்மனும் பல போகங்களைத் துய்த்துப் பிறகு எம்பெருமான் திருவடியை அடைந்தான்.

பதரிகா வனத்தில் பராசர முனிவனை அல்லாமல் சுக முனிவர், விபண்டர், விசுவா மித்திரர், காசிபர், கௌதமர், கபிலர், பாரத்துவாசர், நாரதர், வசிஷ்டர், வியாசர் முதலிய முனிவர்களும் தவம் செய்தார்கள்.

இந்தப் பதரிகாவனத்துக்கு வடக்கே மூன்று நாழிகை தூரத்தில் வேதகிரி என்ற மலை இருக்கிறது. திருநணுவுக்கும் கிழக்கே பத்து நாழிகை தூரத்தில் யானைமலையும் நாகாசலமாகிய திருச்செங்கோடும் இடையில் கமலாசலமும் இருக்கின்றன. தென்பக் கத்தில் மங்களகிரி விளங்கும். இவ்வாறு ஐந்து மலைகளுக்கு நடுவில் சிறந்த தலமாய் விளங்குவது பதரிகாவனம்; இங்கே காயத்திரி சிலை என்ற சிறப்பான பாறை ஒன்று உண்டு. அங்கே வந்து தவம் புரிபவர்கள் பெரும் பேற்றை அடைவார்கள்.

### *விசுவாமித்திரர் நலம் பெற்றது*

கோசிகன் என்ற மன்னன் ஒரு நாள் காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். சேனைகளோடு சென்று ஒரு மலைச் சார்பை அடைந்து பல விலங்குகளை வேட்டை யாடினான். வெயில் வெம்மையால் சிறிது நேரம் மரத்தின் நிழலில் தங்கி அப்பால் வசிஷ்டன் இருந்த ஆசிரமத்தை அடைந்தான். மன்னனை வசிஷ்ட மாமுனிவன் வரவேற்று உபசாரம் செய்ய, அம்மன்னன் முனிவனை வணங்கி, "விடை தருவாயாக" என்றான். வசிஷ்டன் "இங்கே உணவருந்திச் செல்லலாம்" என்றான். "நான் சாப்பிடு வதெல்லாம் உன்னுடைய திருவருளால் தான். மிகப் பெரிய சேனை என்னுடன் வந்திருக் கின்றது. உன்னுடைய அருள் ஒன்றே போதும்" என்று கோசிகன் சொல்ல, வசிஷ்டன் புன்முறுவல் பூத்து, "நீங்கள் யாவரும் நீராடி உணவருந்திச் செல்லலாம்" என்று மீண்டும் வற்புறுத்தினான். கோசிக மன்னன் மறுக்கமாட்டாமல் நியமங்களை

எல்லாம் முடித்துவர, வசிஷ்டன் காமதேனுவை அழைத்து, அவர்களுக்கு வேண்டிய விருந்தை வழங்கும்படி ஏவினன். அங்கே வந்திருந்த யாவருக்கும் இந்திரனுக்கும் கிடைக்க முடியாத இனிய விருந்தைக் காமதேனு வழங்கியது. பிறகு யாவருக்கும் ஆடை, பொன் ஆபரணங்கள், தாம்பூலம் ஆகியவற்றையும் கொடுத்தது. இதனைக் கண்ட கோசிக மன்னன் வியந்து, "இத்தகைய சிறந்த அதிசயத்தைத் தவத்தின் மகிமையால் இந்த முனிவன் செய்தான்" என்று எண்ணித் தன்னுடைய க்ஷத்திரிய வலிமையை வெறுத்தான். வசிஷ்டரைப் பார்த்து, "உன்னுடைய தவ வலிமையை நான் தெரிந்து வியந்தேன். உனக்கு அரிய பொருள் ஒன்றுமில்லை. இந்தப் பசுவை எனக்குக் கொடு" என்று கேட்டான். "இந்தப் பசு நம்முடையது அன்று. நீ அழைத்தால் அது வருவதாக இருந்தால் கொண்டு செல்வாயாக" என்று வசிஷ்ட முனிவன் கூறினன்.

உடனே கோசிகனுடைய ஆணையால் சிலர் சென்று காமதேனுவைக் கயிற்றினல் கட்ட, அது அதனை அறுத்துவிட்டு வசிஷ்டனிடம் வந்து வணங்கி, "என்னை அவர்கள் கவரும்படி நீ ஏவினையோ?" என்று கேட்க, "இல்லை" என்று வசிஷ்டன் கூறினன். உடனே காமதேனு தன் இருப்பிடத்தை நோக்கிப் புறப்படும்போது, கோசிகன் தன் படை வீரர்களை நோக்கி, அதைப் பற்றிக் கொணரும்படி ஏவினன். சேனை அந்தத் தெய்வச் சுரபியைச் சுற்றி வளைத்தபோது அதன் உரோமக் கால்கள் தோறும் பல வீரர்கள் உதித்து மன்னனுடைய சேனையை மோதினர். அரசரின் படைகள் தோற்று ஓட, காமதேனு தன் இடத்தை அடைந்தது. தோல்வியுற்ற படைகளைக் கண்ட கோசிகன் 'தவத்தின் பலமே பலம்' என்பதை அறிந்து, தன்னுடைய அரசை மந்திரிகளிடம் கொடுத்து, "நான் இனிமேல் தவம் செய்து பிரம்ம ரிஷி ஆவேன்" என்று புறப்பட்டுவிட்டான்.

மேருமலையின் கிழக்கே ஒரு வன்னிமரத்தின் நிழலில் அமர்ந்து கோசிகன் தவ யோகம் செய்யலானன். காயத்திரி ஜபத்தைச் செய்து அதன் பொருளாகிய சிவசொரூபத்தைத் தியானித்துப் பதினயிரம் ஆண்டுகள் தவம் செய்தான். அதன் பின் தங்கத்தைப் போல ஒளிவிடும் உடலோடு எழுந்து சென்று வசிஷ்டனை அடைந்து, "நான் இப்போது பிரம்மரிஷி ஆகிவிட்டேன்" என்று சொன்னன். வசிஷ்டன், "நீ இன்னும் பிரம்மரிஷி ஆகவில்லை" என்று கூறக்கேட்ட கோசிகன் எழுந்த கோபத்தை அடக்கிக்கொண்டு, வேதாரணியம் என்ற திருத்தலத்தை அடைந்து ஒரு வன்னிமர நிழலில் அமர்ந்து மீண்டும் தவம் செய்யத் தொடங்கினன். அங்கே லட்சம் ஆண்டு தவம் செய்த பிறகு மீண்டும் வசிஷ்டனிடம் சென்று, "நான் இப்போது பிரம்மரிஷி ஆகிவிட்டேன்" என்று சொல்ல, அம்முனிபுங்கவன் "நீ பலகாலம் தவம் செய்ததால் தவசியாக விளங்குகிறாய்" என்று கூறினன். அதைக் கேட்ட விசுவாமித்திரன் 'இன்னும் இவர் நம்மைப் பிரம்மரிஷி என்று ஒப்புக்கொள்ளவில்லையே. இன்னும் இரு மடங்கு தவம் செய்வோம்' என்று எண்ணிச் சையமலையை அடைந்து ஒரு நெல்லிமரத்தினடியில் இருந்து தவம் செய்யலானன். அங்கே பத்து லட்சம் ஆண்டுகள் தவம் செய்தபோது, அந்தத் தவத்தின் சக்தி உலகமெங்கும் பரந்தது. அப்போது தேவ குருவாகிய வியாழ பகவானும் மற்றத் தேவர்களும் சையமலையை அடைந்து விசுவாமித்திரனைப் பார்த்து, "முனிவர்பிரானே, உன்னைப் போலத் தவம் செய்தவர்கள் வேறு யார்? நீ அப்படிச் செய்தும் பிரம்மயோகத்தை அடையவில்லை. பவானி கூடல் என்னும் தலத்துக்குப் போனல் உன் விருப்பம் நிறைவேறும்" என்று சொல்லிப் போனர்கள்.

விசுவாமித்திரன் பவானி கூடலை அடைந்து அங்குள்ள தீர்த்தங்களில் நீராடி, காயத்திரி சிலையிடத்திலும் சங்கமேசுவரன் சந்நிதானத்திலும் வேதகிரியின் உச்சியிலும் பல காலம் இருந்து தவம் செய்தான். இந்தத் தலத்தின் விசேடத்தால் நூறு ஆண்டுகள் அவன் செய்த தவக்கனல் பலமடங்கு வலிமை பெற்று எங்கும் தகித்தது. அப்போது இந்திரன் முதலிய தேவர்கள் நடுங்கி வசிஷ்டமுனிவனிடம் சென்று வணங்கினார்கள். வசிஷ்டன் விசுவாமித்திர முனிவனிடம் வந்து, "அப்பா, இப்போது நீ பிரம்மரிஷி ஆனாய். இந்தப் புண்ணிய தலத்தில் வந்து தவம் செய்தமையால் இந்தப் பேறு உனக்குக் கிடைத்தது. உனக்கு அரிய செயல் ஏதும் இல்லை'' என்று கூறினான். விசுவாமித்திரன் மன நிறைவுடன் எழுந்து பவானி கூடலில் உள்ள சிவபெருமானையும் அம்பிகையையும் வணங்கிச் சில காலம் அங்கே தங்கிப் பூசை செய்து கொண்டு வாழ்ந்தான்.

வேதகிரியிலும் காயத்திரி சிலையிலும் இருந்து ஜபம் செய்தால் பல மடங்கான பலன் கிடைக்கும். காயத்திரி சிலை சிவனுடைய வடிவே. விசுவாமித்திரன் சில காலம் அங்கே தங்கிப் பின்பு மேருமலையை அடைந்து வாழ்ந்தான்.

### *தந்துவர்த்தனன் புத்திரப் பேறு பெற்றது :*

சோழர் குலத்தில் உதித்த தந்துவர்த்தனன் என்னும் மன்னன் முறைப்படி அரசியல் வழுவாமல் அரசாண்டு வந்தான். தவத்தின் வலிமையால் தனலட்சுமி முகத்திலும், வித்தியாலட்சுமி நாவிலும், விஜயலட்சுமி புயங்களிலும், தைரியலட்சுமி மனத்திலும், சந்தானலட்சுமி வயிற்றிலும், கீர்த்திலட்சுமி கரத்திலும், வீரலட்சுமி துடையிலும், சௌபாக்கியலட்சுமி மார்பிலும் வீற்றிருக்க, யாவரும் புகழும்படி செங்கோல் ஓச்சி வந்தான். ஒரு நாள் அந்த மன்னனிடம் ப்ரத்துவாஜ கோத்திரத்தில் உதித்த சங்க கன்னன் என்ற மறையவன் வந்தான். அவனுக்கு அரசன் உபசாரங்களைச் செய்து வணங்கி ஓர் ஆசனத்தில் இருத்தினான். அப்போது அந்தணன் அரசனை நோக்கி, "தர்மமும் மைந்தரும் செல்வமும் அமைந்து சுகமாக இருக்கிறாயா?'' என்று கேட்டான். மன்னன் "எனக்கு எந்த விதமான குறையும் இல்லை. ஆனால் என் குலத்தை விளக்க ஒரு மைந்தனைப் பெற்றிலேன். வானம் மேகத்தினாலும், இரவு சந்திரனாலும், பெண்கள் சாந்த குணத்தாலும், வீடுகள் மங்கலச் செயல்களாலும், சொல் பிரசங்கத்தாலும், ஓடை துறைகளாலும், நீர்க்கரை அன்னங்களாலும், சபை தமிழ்வாணர்களாலும், புகழ் கொடையாலும், குலம் புதல்வனாலும் விளங்குமென்று சொல்வார்கள். தேவரீருடைய திருவடிகளை வணங்கிய நன்மையால் அடியேன் மைந்தனைப் பெறுவேன்'' என்று சொல்லி வணங்கினான்.

"சோழ மன்னனே, கொங்கு மண்டலத்தில் காவிரியும் பவானியும் சங்கமமாகும் இடத்தில் ஒரு சிவத்தலம் உண்டு. அங்குள்ள இலந்தை மரத்தின் அடியில் சிவலிங்கம் ஒன்று உண்டு. அங்கே பராசரன் முதலிய முனிவர்கள் அந்தப் பெருமானை வணங்கித் தவம் செய்து வேண்டியவற்றை அடைந்தார்கள். வித்யாதரரும் யட்சரும் தேவரும் மறையவர்களும் அந்தத் தலத்தில் எப்போதும் நீங்காமல் உறைவார்கள். அங்கே எழுந்தருளியிருக்கும் சங்கமேசுவரனையும் காயத்திரி சிலையையும் வேதகிரியையும் பதரி விருட்சத்தையும் வலஞ்செய்து திரிவேணி சங்கம தீர்த்தத்தில் படிந்தவர்களுக்கு எண்ணிய காரியங்கள் யாவும் ஈடேறும். ஆதலால் நீயும் அந்தப் புண்ணிய தலத்தை அடைந்து

பதரிகாவனக் கடவுளை அன்புடன் வழிபட்டால் உனக்கு மைந்தன் பிறப்பான். அங்கே சென்று நாள்தோறும் நூற்றெட்டு முறை வலம் செய்து பிறகு ஒரு மாதம் தங்கினால், அங்குள்ள இலந்தை மரத்தில் இறைவன் அருளால் ஒரு கனி கிடைக்கும். அந்தக் கனியை உன்னுடைய மனைவிக்கு அளித்து உண்ணச் செய்தால் எம்பெருமான் அருளால் நீ மகப்பேறு அடைவாய்'' என்றான். அந்த மறையவன் ஆசியைப் பெற்ற மன்னன் மிக மகிழ்ந்து, அவனுக்கு வேண்டிய சிறப்புக்களை நல்க, அவன் விடைபெற்றுச் சென்றான்.

மன்னன் வேதியவன் கூறியவற்றை அமைச்சரிடம் சொல்லிப் பவானி தலத்துக்குப் போகவேண்டும் என்ற விருப்பத்தோடு, அதற்கு ஆவனவற்றைச் செய்யத் தொடங்கினான். சாத்திரங்களைத் தெரிந்தவர்கள் தேர்ந்து கூறிய நல்ல நாளில் நல்ல முகூர்த்தத்தில் மன்னன் திருநணாவை நோக்கி எழுந்தான். வாத்தியங்கள் முழங்கின. வேதியர் ஆசி கூறினர். மாதவர் வெண்ணீறு வழங்கினர். சோழ மன்னன் தன்னுடைய நகரினின்றும் புறப்பட்டு மேல்திசையை நோக்கிச் சென்று, இடையில் உள்ள சிவத் தலங்களை யெல்லாம் தரிசித்துக் கொண்டு கொங்கு நாட்டை அடைந்தான். திருநணா என்னும் புண்ணிய தலத்தைப் பரிவாரத்துடன் வந்தடைந்த அரசன் பல்லக்கிலிருந்து இறங்கி, பூசுரர்கள் மங்கல ஆசி கூற அவர்களை வணங்கி, அந்த நகரத்துக்குள் புகுந்தான். கோயிலை அணுகிக் கோபுர வாயிலை வணங்கிச் சங்கமக் கரையை அடைந்து சங்கற்பம் செய்துகொண்டு, தன்னுடைய தேவியுடன் நீராடி, தர்ப்பணம் முதலியவற்றைச் செய்தான். பலவகைத் தானங்களைச் செய்து காயத்திரி சிலையைப் பணிந்து ஏத்திச் சங்கமேசுவரன் திருக்கோயிலுக்குள் புகுந்தான். எம்பெருமானுடைய சந்நிதியில் நின்று, அவனைத் தரிசித்த ஆனந்தத்தால் அனலில் பட்ட மெழுகுபோல் உருகி, கரம் குவித்து ஓவியம் போல நின்றான். ஒரு நாழிகை அளவு அப்படி நின்றவன் கீழ் விழுந்து வணங்கி, அபிஷேகம் முதலியவற்றைச் செய்வித்தான். மிகச் சிறப்பாகப் பூசையை நிறைவேற்றிய பிறகு பிரதமைத் திதி முதல் முப்பது நாட்கள் இறைவனை வலம் வரும் விரதத்தை மேற்கொண்டான். ஒருநாள் அங்குள்ள தெய்வத் தருவாகிய இலந்தை மரத்துக்கு அருகே ஒரு கனி கிடந்ததைக் கண்டு, ''இது ஈசன் திருவருள்'' என்று இறைஞ்சி எடுத்துக் கண்களில் ஒற்றித் தலையின் மேல் வைத்துக் கொண்டான். இறைவனுடைய சந்நிதானத்துக்குச் சென்று வணங்கி, அக்கனியைத் தன் மனைவியின் கையில் அளித்தான். அதனை அவள் அருந்தினாள்.

அப்பால் ஒவ்வொரு நாளும் சங்கமேசனை மூன்று காலமும் தொழுது ஆலயத்தை மன்னன் வலம் வரும்போது, ஒரு நாள் சிவபெருமான் எழுந்தருளிக் காட்சி கொடுத்தான். அந்தத் திவ்ய தரிசனத்தைக் கண்ட சோழ மன்னன் அன்பினால் உருகி மயிர்க்கூச்செறிந்து தலைமேல் கை வைத்து நாக் குழற நின்றான். அவனை எம்பெருமான் அருள் கண்ணால் பார்த்து, ''உன்னுடைய அன்பினால் நாம் மகிழ்வுற்றோம். உன் குலம் தழைத்திட ஒரு மைந்தனையும் தந்தோம். அவனுக்குக் குலவர்த்தனன் என்று பெயர் வைத்து, நாட்டை நன்கு புரந்து பின்பு நம் பதத்தை அடைவாயாக'' என்று அருளி மறைந்து போனான். இறைவனுடைய திருக்காட்சியைக் கண்ட வேந்தன் ஆனந்தக் கடலில் அழுந்திச் சங்கம நாயகனைத் துதிக்கத் தொடங்கினான்.

*''விண்ணாகி மண்ணாய் விரிபுனலாய்த் தீயாகித்*
*தண்ணாரும் காலாய்ச் சராசரமாய் எவ்வுயிர்க்கும்*
*கண்ணாய் அனுத்திரண காட்டங் களும்நிறைந்த*
*நண்ணா வுடைய அருள் நாயகிநின் தாள் சரணம்!''*

*"பூவேறு கண்ணிறைடும் புள்வாய் கிழித்தருளும்*
*ஏவேறு கையாய், எளியேன் குறைதீர்த்த*
*தேவாதி தேவா, திருநன்னு வீற்றிருக்கும்*
*சேவே னுடைய சிவனே நின் தாள்சரணம்!"*

இவ்வாறு துதித்த மன்னன் மீட்டும் எம்பெருமானைப் பூசித்து, பல தானங்களைச் செய்து பராசரன் அமைத்த அமுதலிங்கத்தையும் வழிபட்டு எல்லாருடைய ஆசியையும் வாழ்த்தையும் பெற்று அந்த நகரத்தை விட்டுப் புறப்பட்டான்.

தன்னுடைய நகரத்தை அடைந்த தந்துவர்த்தனன் ஒரு மைந்தனைப் பெற்று, அவனுக்குக் குலவர்த்தனன் என்ற பெயரைச் சூட்டிப் பல கலைகளும் கற்பித்து, உரிய பருவத்தில் திருமணம் செய்வித்து முடி சூட்டினான். பிறகு சாதனங்களை இயற்றி ஞானி யாகித் தவஞ் செய்து இறைவன் திருத்தாளை அடைந்தான்.

***மருத்தவன் கதி பெற்றது:***

நரகாசுரனுடைய பிள்ளையாகிய அந்தகாசுரனுக்குத் தூமாட்சன் என்ற பிள்ளை பிறந்தான். அவனுடைய மகனாகிய மருத்தன் என்பவன் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மறையவர்களுக்கும் தீங்கு செய்து பெரு வலிமையோடு சன்மலிபுரத்திலிருந்து அரசாட்சி புரிந்து வந்தான். இத்திரன் முதலியவர்கள் அவனோடு போரிட்டுத் தோற்று, இமாசலத்தில் போய்த் தங்கினார்கள். தவமும் வேள்வியும் ஒழிந்து மண்ணுலகமும் வானுலகமும் மயக்கமடைந்து நடுங்கின. இமாசலத்தில் பலகாலம் இருந்த தேவர்கள் தங்கள் குருவாகிய பிரகஸ்பதியினிடம் சென்று தங்கள் குறைகளைக் கூறினார்கள், தேவ குரு அவர்களை அழைத்துக் கொண்டு பிரமதேவனைச் சார்ந்தான். பிரமன் அவர்களை எல்லாம் இருக்கச் செய்து அவர்கள் கூறியவற்றைக் கேட்டு, "நீங்கள் சொன்ன மருத்தன் என்ற அசுரன் யாராலும் வெல்லுவதற்கரிய வலிமை உள்ளவன். சிவபெருமானுடைய திருவருள் பலத்தால் அன்றி வேறு எதனாலும் அவனை அடக்க முடியாது" என்று கூறினான். பிறகு அவர்களையும் அழைத்துக் கொண்டு கைலாய மலையை அடைந்து, நந்தியெம்பெருமானை வணங்க, அப்பெருமான் உட்சென்று இறைவனுடைய திருவுள்ளக் குறிப்பை அறிந்து வந்து கூற, யாவரும் உள் புகுந்தனர். சிவபெருமானை யாவரும் வணங்கி நிற்கப் பிரமன், மருத்தன் என்னும் அசுரன் செய்யும் கொடுமைகளை எல்லாம் சொல்லி அருள் புரியவேண்டும் என்று வேண்டிக்கொண்டான். அதைக் கேட்ட சிவ பெருமான், "நான் அகோர உருவம் கொண்டு அந்த மருத்தனைத் தடிந்து உங்களைக் காப்பாற்றுவோம். நீங்கள் மிகச் சிறப்பைப் பெற்ற பதரிகாவனம் என்னும் தலத்தை அடையுங்கள்" என்று கூறி விடையளித்தான். இறைவன் ஏவியபடியே தேவர்களும் இந்திரனும் பிரமதேவனும் பதரிகா வனத்தை அடைந்து, அங்குள்ள திரிவேணி சங்கமத்தில் நீராடி, வேதநாயகியையும் சங்கமேசுவரனையும் பணிந்து, அங்குள்ள முனிவர்களோடும் பேசி மகிழ்ந்து தங்கினார்கள்.

தேவர்கள் பதரிகா வனத்தில் தங்கியிருப்பதை உணர்ந்த மருத்தன் தன்னுடைய படையுடன் புறப்பட்டான். பல காலமாகப் போர் செய்யாமல் தினவு எடுத்த தோளை உடையவனாகிப் பெருங்கோபத்துடன் காலனும் நடுங்கும்படி அங்கே வந்து சேர்ந்தான்.

அவனைக் கண்ட தேவர்கள் சிந்தை கலங்கி, "எம்பெருமானே, எங்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று முறையிட, பதரி மூலத்தில் உள்ள சுயம்பிரகாச லிங்கத்திலிருந்து இறைவன் அகோர ரூபம் எடுத்துக்கொண்டு தோன்றினன். அவனைச் சுற்றி எண்ணற்ற பூதகணங்கள் எழுந்து வந்தன. பூதகணம் அசுரனை அணுகி, "போருக்கு வா" என்று அழைத்தார்கள். அவனும் இடிபோல் ஆர்த்தெழுந்து, கடல் போன்ற படையுடன் வந்து சுற்ற, அப்போது அங்கே இருந்த பூதகணத்தினர் அத்தனைபேரும் பெண் உருவாக மாறினர்கள். அவர்களுடைய அழகிய உருவத்தைக் கண்ட அசுரன் மயங்கி, "இவர்களை நம்முடைய நகரத்துக்கு எடுத்துச் சென்று இன்பம் நுகர்வோம்" என்று எண்ணினன். அவர்கள் நகரத்தின் அருகே வந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து அசுரனும் வந்தான். நகரத்தின் பக்கத்தில் வந்தவுடன் மாதர்களாக இருந்த பூதகணத்தினர் தம்முடைய பழைய வடிவத்தை எடுத்துக்கொண்டார்கள். அதைக் கண்ட அசுரன் அனலைப்போல் பொங்கி, "வஞ்சக வடிவம் எடுத்து வந்த இவர்களை இப்போதே அழித்து விடுவேன்" என்று தாக்கப் புகுந்தான்.

அப்போது சிவபெருமான் அகோர ரூபத்தோடு அங்கே தோன்றி அசுரனோடு போர் புரியத் தொடங்கினன். அசுரன் விட்ட படைகளையெல்லாம் அறுத்து எறிந்து கடைசியில் அவன் மேல் சூலத்தை விட்டான். அது அவன் மார்பில் பாய்ந்து அவன் உயிரை வவ்வி மீட்டும் எம்பெருமான் திருக்கரத்தில் வந்து தங்கியது. சிவபெருமானுடைய சூலத்தினால் உடம்பு பிளந்து உயிரைவிட்ட மருத்தன் அந்தப் புண்ணியத்தால் ஞான நிலையை அடைந்து முடியின் மேல் கைகளைக் கூப்பி, எம்பெருமானிடம், "அடியேன், உன்னுடைய கைப்படையினால் உயிர்விடும் பாக்கியத்தை இத்தலத்தில் பெற்றேன். அடியேனுக்கு உன் திருவடியைத் தந்து ஆட்கொள்ளவேண்டும். உனக்கு என்னுடைய பெயர் அமையவேண்டும் என்று வேண்டிக்கொண்டான். எவ்வளவு இழிந்த செயலை உடையவராக இருந்தாலும் தம்மை அண்டினவரைக் காக்கின்ற கருணாநிதி யாகையால் சிவபெருமான் அவ்வசுரன் வேண்டிய வரத்தை ஈந்தான்.

மருத்தன் உயிரைச் சிவகணங்கள் அழைத்துச் சென்று கைலாய மலையில் சேர்த்தினர்கள். அது முதல் இங்குள்ள சிவபெருமானுக்கு மருத்துலிங்கம் என்னும் திருநாமமும் உண்டாயிற்று. அகோரரூபமாய் எழுந்தருளிய எம்பெருமான் மீட்டும் மூல லிங்கத்துள் புகுந்தான். தேவர்கள் யாவரும் சங்கம தீர்த்தத்தில் நீராடி, சங்கம லிங்கத்தைப் பூசை பண்ணி இந்தத் தலத்தில் தங்கியிருந்தார்கள். இந்தத் தலத்தில் அகோரமூர்த்தியின் மந்திரத்தை ஜபித்து எட்டு நாட்கள் தங்கியிருந்தவர்களின் பாபங்கள் எல்லாம் மறைந்து அழியும்.

### *தீர்த்தங்களின் பெருமை :*

சங்கமேசுவரனுடைய சந்நிதிக்குக் கிழக்கே சூரியன் ஓர் இலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து, அதற்கு மேற்கே தன் பெயரால் ஒரு தீர்த்தத்தையும் உண்டாக்கினன். அதில் விசேட நாட்களில் நீராடினோர் பலவித நற்பலன்களைப் பெறுவார்கள். காவிரிக்குக் கிழக்கே ஒரு குரோச தூரத்தில் உரோமச முனிவன் ஒரு சிவலிங்க நேர்த்தியைப் பிரதிஷ்டை செய்தான். மேற்கு நோக்கிய சந்நிதியை உடைய அந்தப் பெருமானுக்கும் உரோமகேசுவரன் என்ற திருப்பெயரையும் இட்டபின், பதரி விருட்சத்தின் தெற்கே ஓர்

அம்பு விடும் தூரத்தில் திருமால் உண்டாக்கிய சக்கரதீர்த்தம் இருக்கிறது. அதில் நீராடினவர்களுக்கு நினைத்த காரியங்கள் நிறைவேறும். திரிவேணி சங்கமமாகிய தீர்த்தத்தில் நீராடினவர்கள் செய்த பாவங்கள் எல்லாம் போய்ச் சிவபெருமான் திருவடியை அடைவார்கள். இம்மையில் வளவாழ்வு வாழ்ந்து மறுமையில் வீட்டு இன்பத்தையும் பெறுவார்கள்.

வேதகிரிக்கு இரண்டரைக் குரோச தூரத்தில் தெற்கே சங்கமலிங்கத்தின் தென் கிழ்ப் பக்கம் காயத்திரியே சிலை வயவாக விளங்குகிறது. பாண்டிக் குலத்தில் தோன்றிய இந்திரத்துய்மன் என்பவன் தீர்த்தயாத்திரை செய்ய எண்ணிப் புறப்பட்டு, இடையிலுள்ள தீர்த்தங்களில் எல்லாம் பணிந்து, தமிரவர்ணி ஆற்றங்கரையை அடைந்தபோது நாரத முனிவன் அங்கே எழுந்தருளினன். அம் முனிவனை மன்னன் வணங்கி, "கொங்கு நாட்டில் சங்கம க்ஷேத்திரமென்று மிகச் சிறந்த தலம் ஒன்று இருப்பதாக அறிஞர்கள் புகல்கிறார்கள். அதன் மகிமையைக் கேட்டும் ஆவல் எனக்கு மிகுதியாக இருக்கிறது" என்று சொல்ல, நாரதன் சங்கம தீர்த்தத்தின் மகிமையையும் பதரிகாவனத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய சிறப்பையும் கூறிவிட்டு, காயத்திரி சிலையின் பெருமையை சொல்லத் தொடங்கினன்.

சங்கம லிங்கத்துக்கு அக்கினி திசையில் காயத்திரி சிலை இருக்கிறது. அந்த இடத்தை அடைந்து நீராடி இருபத்து நான்கு அட்சரங்களையுடைய காயத்திரி ஜபத்தைச் செய்தால் பலவகை நன்மைகள் உண்டாகும். காயத்திரி சிலையின் பக்கத்தில் வாணி தீர்த்தம், சாவித்திரி தீர்த்தம் என்று இரண்டு தீர்த்தங்கள் உள்ளன. அவற்றில் நீராடுவோர் பாவம் நீங்கி இம்மை வாழ்வின் பின் கைலாயத்தை அடைவார்கள். துர்வாச முனிவர் காயத்திரி சிலையிலிருந்து தவம் செய்தார். பார்வதி தேவியார் இவ்விடத்தில் தவம் செய்து திருச்செங்கோட்டில் நாககிரீசுவருடைய பாகத்தைப் பெற்றாள். திருமகள் கேள்வனாகிய திருமால் காயத்திரி தீர்த்தத்தில் மூழ்கி இலங்கையடி இறைவனைப் பூசித்துத் தேவர்கள் எல்லாம் போற்ற அங்கே இருந்தான். இராமபிரானும் இங்கே வந்து பணிந்து அருள் பெற்றான். "துரோணன், பீஷ்மன் முதலியவர்களை வெல்வதற்கு வழி யாது?" என்று வியாச முனிவனைக் கேட்க, அம்முனிவன் இந்தத் தலத்தையடைந்து காயத்திரி தீர்த்தத்தில் நீராடி வழிபடும்படி பணித்தான். அவ்வாறே செய்த விஜயன் பாரதப் போரில் வெற்றி பெற்றான். துரோணருடைய மகனாகிய அசுவத்தாமன் இங்கே வந்து வழிபட்டுச் சிரஞ்சீவிப் பதவியைப் பெற்றான்.

இவ்வாறு நாரதன் காயத்திரி சிலையின் மகிமையையும் காயத்திரி தீர்த்தப் பெருமையையும் சொல்லி, வேதகிரியின் மகிமையைக் கூறத் தொடங்கினன்.

### *வேதகிரியின் சிறப்பு :*

மது, கைடவர் என்ற இரண்டு அசுரர்கள் பேராற்றலை உடையவர்களாய்த் தேவர்களுக்குத் தீங்கு செய்து வந்தார்கள். தேவர்களோடு போராடி வென்று பிரமன் இருக்கும் மனோவதியை அடைந்து நான்கு வேதங்களையும் பறித்துக்கொண்டு ஓடிச் சென்று கடலின் கீழேயுள்ள பாதாலத்தை அடைந்தார்கள். வேதம் மறைந்தமையால் வைதிக ஒழுக்கமும் வேள்வியும் மறைந்தன. புறச் சமயத்தார் எங்கும் பரவித் தம் சமயத்தை நிலைநாட்டினார்கள்.

வேதத்தை இழந்து வருந்திய பிரமன் திருமாலை அணுகி நிகழ்ந்ததைச் சொல்ல, அப்பெருமான், "நீ அஞ்சாதே. மது கைடவர்களை அழித்து வேதத்தை மீட்டுத் தருவோம்'' என்று அருளினன். பிறகு திருமால் பதரிகா வனமாகிய திருநணுவுக்கு வந்து இறைவனைப் பூசித்து அருள் பெற்று, மச்சாவதாரமெடுத்துக் கடலிற் புகுந்து மது கைடவரைச் சங்காரம் செய்து வேதத்தை மீட்டுத் தந்தான்.

அவ்வேதம் தலை தடுமாறிக் கிடந்ததைக் கண்ட முனிவர்கள் திருமாலிடம் அதைச் சொல்ல, அவன் விபாச முனிவனகத் தோற்றிப் பதரிகாவனமாகிய பவானிகூடலை அடைந்து அமலனைப் பூசித்தான். நூறு ஆண்டுகள் தொடர்ந்து பூசனைபுரியத் திருவுளம் மகிழ்ந்த எம்பெருமான் சோதியுருவோடு தோன்றினன். தன்னைப் பணிந்த வியாச முனிவனை நோக்கி, "உன்னுடைய பூசையை ஏற்று உள்ளம் மகிழ்ந்தோம். இந்தத் தலத்துக்கு வடக்கே உள்ள வேதகிரியை அடைந்து அங்கே வேதத்தை நான்காகச் செப்பஞ் செய்வாயாக!'' என்று அருளினன். அவ்வாறே முனிவன் அவ்விடத்தை யடைந்து சிவபெருமான் திருவடியைத் தியானித்து, தலைகால் தெரியாமல் திரிந்து குன்றி னளவாய்க்கிடந்த வேதத்தைச் செப்பஞ் செய்யப் புகுந்தான். அனுவாகம், காண்டம், பிரச்னம் என்று மூன்று வகையாக்கி, அந்த வேதங்களை இருக்கு, எசுர், சாமம், அதர் வணம் என்று நான்கு பிரிவாக்கி மறையவர்களுக்கு வழங்கினன். அது முதல் மறைய வர்கள் வைதிக முறை பிறழாமல் வாழ்ந்து வேள்வி முதலியவற்றைச் செய்தார்கள். வியாசர் மறையை ஒழுங்கு செய்த இடமாதலின் அதற்கு வேதகிரி என்ற பெயர் உண்டாயிற்று. திருமால் தான் செய்யும் ஒவ்வோர் அவதாரத்திலும் இந்த வேதகிரிக்கு வந்து பூசித்துச் செல்வான்.

விருத்திராசுரன் என்பவன் கடுமையான தவம் செய்து, அதன் வலிமையினல் தேவலோகத்திலும் மற்ற இடங்களிலும் உள்ளவர்களைத் துன்புறுத்தினன். இந்திரன் முதலிய தேவர்கள் திருமாலிடம் சென்று முறையிடவே, அப்பெருமான் இந்திரனுக்கு அளவில்லாத வீரத்தை அருளி விடை கொடுத்தான். வரம் பெற்று எழுந்த இந்திரன் விருத்திராசுரன் தவம் செய்து அமர்ந்திருந்த இடத்தை அடைந்து தன்னுடைய வச்சிரப் படையால் அவனைத் தடிந்தான். அதனல் பிரம்மஹத்தி இந்திரனைச் சூழ்ந்து வரவே, தன்னுடைய நாட்டு வாழ்க்கையை இழந்து அச்சத்துடன் உணவும் உறக்கமும் இன்றி உலகத்தில் உள்ள எண்ணற்ற தலங்களுக்கெல்லாம் சென்று சுற்றியும் பிரம்மஹத்தி தோஷம் நீங்கவில்லை. இப்படி ஓராண்டு திரிந்த பிறகு பவானி கூடலை வந்தடைந்தான். அங்கே திரிவேணி சங்கமத்தில் நீராடிச் சங்கமேசுவரனை வழிபட்டு, நாள்தோறும் வேதகிரியை வலம் செய்து அத்தலத்தில் நூறு யாகம் செய்தான். பிரம்மஹத்தி அவ னிடத்திலிருந்து விடுபட்டபோது, "நான் போவதற்குரிய இடம் யாது?'' எனக் கேட்டது. "பூமியில் களர் நிலமாகவும் பெண்களிடத்தில் பூப்பாகவும் தண்ணீரில் நுரையாகவும் மரங்களில் பிசினகவும் நீ இருப்பாயாக'' என்று சொல்லி விடை கொடுத்தான்.

இந்திரன் மீட்டும் அமராவதிக்கு வந்து பழையபடி அரசாட்சி செய்யத் தொடங்கினன்.

இவ்வாறு நாரத முனி இந்திரத்துய்மனுக்குக் காயத்திரி சிலை மகிமையையும் வேதகிரியின் உயர்வையும் உரைத்தான்.

*பிரமன் நலம் பெற்றது*

பிரமதேவன் திலோத்தமை என்னும் பெண்ணை மிக முயன்று படைத்தான். அவளுடைய பேரழகைக் கண்டு அவனே மையலடைந்து கெட்ட எண்ணத்தோடு அவளைத் தொட அவனுடைய பழைய தூய நிலை மாறியது. அவன் அமைத்த படைப்புக்கள் யாவும் வேறுபட்டன. அதைக் கண்டு பயந்த நான்முகன் சிவபெருமானுடைய வழிபாட்டால் இந்த நிலையை மாற்றவேண்டும் என்று எண்ணிப் பவானி கூடலை அடைந்தான். அங்கே சங்கமலிங்கத்துக்கு அபிஷேகம், அருச்சனை முதலியன செய்து வழிபட்டுக் கோயிலை வலஞ் செய்து இறைவனைத் துதிக்கத் தொடங்கினான் :

*" முப்புரம் ஒருங்கு செந்தீ*
*மூட்டிய நகையாய் போற்றி !*
*துப்புறழ் சடையாய் போற்றி !*
*சுடர்விடும் சூல போற்றி !*
*கப்பிணர் வதரி மூலக்*
*கறைமிடற் றமல போற்றி !*
*தற்பர பரமா னர்தச்*
*சங்கமேச் சுரனே போற்றி !"*

*" அரியநான் மறையும் ஓரா*
*றங்கமும் உணர்ந்த சைவப்*
*பெரியவர் இதயக் கஞ்சப்*
*பீடிகை இனிது வைகும்*
*பரிபுரப் பாத போற்றி !*
*பராபரப் பொருளே போற்றி !*
*தரியலர் புரமூன் நட்ட*
*சங்கமேச் சுரனே போற்றி !"*

இவ்வாறு பிரமன் துதித்தபோது சங்கமலிங்கத்திலிருந்து எம்பெருமான் கோடி சூரியப் பிரகாசத்தோடு எழுந்தருளி அகத்தியனையும் நாரதனையும் பார்த்து, "இந்தப் பிரமனுக்குப் பஞ்சாட்சர உபதேசத்தைச் செய்யுங்கள்" என்று கூறி, பிரமதேவனைப் பார்த்து, " நீ இந்த முனிவர்களிடம் உபதேசம் பெற்று நன்மை அடைவாயாக" என்று அருளிச் செய்து மறைந்தான். அப்படியே அம்முனிவர்களிடம் பஞ்சாட்சர உபதேசம் பெற்றுத் தெளிவடைந்த பிரமன் திருமாலை அடைந்து, அந்தப் பெருமானுடைய நாவியிலிருந்து முளைத்த தாமரைத் தண்டின் ஊடே போய் மேலே இருந்த மொட்டை உடைத்து, அலர்ந்த பூவின் மேல் தங்கி மீட்டும் புவனங்களைப் படைக்கலானான்.

அப்படிப் படைத்தபோது அவனுக்குச் சிறிது மயக்கம் தோன்ற, மீண்டும் பவானி கூடலுக்கு வந்து இறைவனை இறைஞ்சி வேதகிரியில் தங்கினான். அங்கிருந்து காயத்திரி சிலைடை அடைந்து, தீர்த்தங்களில் ஆடி மூன்று காலமும் இறைவனைப் பணிந்து வழிபட்டான். கார்த்திகை மாதம் பௌர்ணமியில் தாமரை மலரால் சகசரநாம அர்ச்சனை புரிந்தான். "எம்பெருமானே, யான் செய்த குற்றங்களை எல்லாம் பொறுத்தருள வேண்டும்" என்று கூறிக் கீழ் விழுந்து வணங்க, சங்கமமூர்த்தி வெளிப்பட்டுப் பிரமனைத் தன் திருக்கரங்களால் அணைத்து, சிவபஞ்சாட்சர மூல மந்திரத்தை உபதேசித்து மறைந்தருளினான். இறைவனால் உபதேசம் பெற்ற நான்முகன் மனநிறைவு பெற்றுத் தன்

இடமாகிய மனோவதியை அடைந்து தன் தொழிலை முறைப்படி இயற்றலானான். இந்தத் தலத்தில் பஞ்சாட்சரத்தை ஜபித்தால் அது பல கோடி மடங்காகப் பலனைத் தரும். பஞ்சாட்சரத்தை ஓதி மானசிக பூஜை ஆற்றினால் முக்திப்பேறு கிடைக்கும்.

### *இருவர் பேறு பெற்றது:*

முன்னொரு காலத்தில் கலிங்க தேசத்தில் இலிங்கி, விருடாகவி என்னும் இருவரும் விபூதி ருத்திராட்சங்களில் பக்தி உடையவராகி, அவற்றை அணிந்து விளங்கினர். ஒரு நாள் அவர்கள் நந்தவனம் சென்று விளையாடும்போது, அங்கே இரண்டு புறுக்கள் ஒன்றோடு ஒன்று இணைந்து போகம் செய்திருந்தன. அதைக் கண்டு இலிங்கி சிரிக்க, அருகில் இருந்த விருடாகபி அவன் தன்னை இகழ்ந்து சிரித்தான் என்று எண்ணி இலிங்கியை அடித்தான். இலிங்கி எதிர்த்து அடிக்க இருவரும் அடித்துக்கொண்டு இறந்து போயினர். விபூதி ருத்திராட்சம் அணிந்த புண்ணியத்தால் ஒருவன் கலிங்க அரசனுக்கு மகனாகப் பிறந்தான். பாராவதன் என்னும் பெயரை அவனுக்கு வைத்தார்கள். மற்றொருவன் அமைச்சனுடைய மகனாக உதித்து, வலிமுகன் என்னும் பெயரோடு விளங்கினான். விபூதி ருத்திராட்சம் அணிந்த புண்ணியத்தால் முன்னைப் பிறப்பின் உணர்வைப் பெற்று அப்போது கேட்ட பவானி கூடல் மகிமையை உளத்தில் எண்ணி இருவரும் திருநணுவை அணுகிச் சங்கமேசுவரனைப் பூசித்துச் சிவபதம் அடைந்தார்கள்

### *சங்கோசன் வரலாறு:*

அவந்தி தேசத்தில் புலையர் குலத்தில் உதித்த சங்கோசன் என்பவன் யாரிடமோ பவானி கூடலின் பெருமையை உணர்ந்து, அங்குள்ள சங்கமேசுவரனையும் வேதநாயகியையும் சங்கம தீர்த்தத்தையும் எப்போதும் எண்ணிக்கொண்டிருந்தான். இப்படி மானச பூஜையாகச் சங்கமேசுவரனைத் தியானித்துக் கொண்டுவந்த அவன் ஒரு நாள் இரவில் அவனுடைய அரண்மனையில் புகுந்து களவாடிப் பொருள்களை எடுத்துக்கொண்டு வெளியே வந்தான். அப்போது காவலர்கள் அவனைப் பற்றிப் பிணித்து வைத்து அரசனிடம் போய்ச் செய்தியைக் கூற அரசன், "அவனிடம் உள்ள பொருள்களை எல்லாம் வாங்கிக் கொண்டு மதிலுக்குப் புறம்பே அழைத்துப் போய்க் கொலை செய்து விடுங்கள்" என்று பணித்தான். காவலர் அவனைக் கொண்டு போய்த் தம்முடைய வாளால் வீசினார்கள். சங்கோசன் தன் கையைத் தலை மேல் குவித்து, "பவானி ஈசனே, என்னைக் காப்பாயாக" என்று ஓலமிட்டான். அப்போது காவலர் வீசிய வாள் மாலையாக அவன் கழுத்தில் விழுந்தது. அங்கே எழுந்தருளிய சங்கமேசுவரன் தேவர்களை விமானம் கொண்டுவரச் செய்து, அதில் அவனை ஏற்றிச் சிவலோகத்தைச் சேரும்படி பணித்தான். அவனும் அவ்வாறே சேர்ந்து நலம் பெற்றான். இந்த வரலாற்றையும் நாரதன் இந்திரத்துய்மனுக்குச் சொன்னான்.

### *பிங்கலை வரலாறு:*

இந்தத் தலத்தில் கணிகையர் குலத்தில் பிங்கலை என்னும் ஒருத்தி பிறந்தாள். நிறைந்த அழகும் பரதநாட்டியம் ஆடும் ஆற்றலும் சிறந்து விளங்கிய அப்பெண் சங்கமேசுவரனை மூன்று காலமும் சென்று வழிபட்டு வந்தாள். காலையில் காவிரி நீரில் தோய்ந்து

ருத்திராட்சமும் திருநீறும் அணிந்து, இறைவன் கோயிலை வலஞ்செய்து, சந்நிதிக்கு வந்து நடனம் செய்தாள். தனக்குக் கிடைத்த பொருள்களை எல்லாம் சிவபிரான் அடியவர்களுக்குக் கொடுத்து வந்தாள். ஒரு நாளைக்கு நூறு பொன் தந்தவர்களுக்கு இன்பத்தை அளிக்கும் தொழிலை மேற்கொண்டாள். அரசரானாலும் நூறு பொன்னில் சிறிது குறைந்தாலும் ஏற்கமாட்டாள். நூறு பொன் கொடுத்தவர் எவராயினும் அவர்களோடு அளவளாவுவாள்.

அந்த நகரில் வணிகர் குலத்தில் உதித்த சுநந்தனன் என்னும் மைந்தன் பிங்கலையைக் கண்டு மயல் கொண்டு அவளோடு இன்புற எண்ணினான். அவன் கையில் தொண்ணூற்றைந்து பொன்னே இருந்தது. அதைக் கொண்டுபோய்ப் பிங்கலையிடம் காட்ட அவள், "குறையாக உள்ள ஐந்து பொன்னையும் எடுத்துக்கொண்டு என் வீட்டுக்கு வா" என்று சொன்னாள். இரவெல்லாம் மயலால் உழந்து வணிகன் துன்புற்றான். இரவு கழிந்து சூரியன் உதித்தவுடன் குறைப் பொன்னை நிரப்பிக் கொள்வதற்காகச் சுநந்தனன் பலரிடம் சென்று கடன் கேட்டான். யாரும் அவனுக்குக் கொடுப்பார் இல்லை. அதனால் வருந்திய வணிகன் சங்கமேசுவரன் சந்நிதிக்கு வந்து பணிந்து, கண்ணீர் தாரை தாரையாக விட்டுக்கொண்டு, "எம்பெருமானே, இப்போது நான் இறந்து போவேன். அப்படி இறந்து போனால் அடுத்த பிறவியிலாவது பிங்கலை என்னுடைய மனைவியாகும்படி அருள் செய்ய வேண்டும்" என்று வேண்டிக்கொண்டு, திரிவேணி சங்கமத்தை அடைந்து அதில் விழுந்து உயிரை விடுத்தான். அந்தச் செய்தியைக் கேட்ட பிங்கலை தன்னை அடையாமை காரணமாக வணிகன் உயிர் விடுத்ததை எண்ணித் தன் கையில் இருந்த பொருள்களை எல்லாம் தானம் செய்துவிட்டுத் தானும் திரிவேணி சங்கமத்தில் விழுந்து உயிரை விட்டாள்.

அடுத்த பிறவியில் இவ்விருவரும் முறையே ஆண் புறுவாகவும் பெண் புறுவாகவும் பிறந்து இத்தலத்தில் பலகாலம் இன்புற்றிருந்து, பிறகு சிவபெருமானுடைய கணங்களோடு சேர்ந்து விட்டார்கள்.

இந்தத் தலத்தில் உயிர் விட்டவர்களுக்கும் நல்ல கதி கூடும் என்பதை இந்த வரலாற்றால் தெரிந்துகொள்ளலாம்.

***விசுவதர்மன் பேறு பெற்றது:***

கலிங்க தேசத்து மன்னனாகிய சுதாமன் என்பவனுக்கு விசுவதாமன் என்னும் மைந்தன் பிறந்தான். அவன் ஒரு நாள் வேட்டையாட எண்ணிக் குதிரையின்மேல் ஏறித் தென் திசையை நோக்கி வந்து கொண்டிருந்தவன், பல காடுகளையும் மலைகளையும் தாண்டிதட்சிண அளகையாகிய பதரிகாவனத்தை அடைந்தான். அங்கே நின்றுகொண்டிருந்த ஒரு பசுவை மான் என்று நினைத்து ஓர் அம்பால் அதனைக் கொன்றான். அதை நெருங்கிப் பார்த்து உண்மையை அறிந்தபோது, 'என்ன பாதகம் செய்துவிட்டேன்' என்று நடுங்கி உளம் சோர்ந்தான். அப்போது கண்வ முனிவன் அங்கே வந்து தோன்ற மன்னன் அவன் அடி வீழ்ந்து நடந்ததைச் சொல்லி, "நான் துன்பத்தை அடையாமல் உய்யும் நெறி இன்னதென்று அருள வேண்டும்!" என்று வேண்டினான். கண்வமுனிவன் "பதரி வனத்திலுள்ள காயத்திரி தீர்த்தத்தில் மூழ்கிக் காயத்திரி சிலையில் அமர்ந்து

பஞ்சாட்சரத்தைப் பதினுயிரம் தடவை ஜபித்தால் கோஹத்தி தோஷம் நீங்கும்" என்ருன். கலிங்க அரசன் அவ்வாறே செய்து, கோஹத்தியினின்றும் நீங்கிப் பழைய பொலிவைப் பெற்றுச் சங்கமேசுவரன் கோயிலில் பல திருப்பணிகளைச் செய்து சிலகாலம் அங்கே தங்கினுன். தனியே சிவலிங்கம் ஒன்றையும் பிரதிஷ்டை செய்து இறைவனுக்கு விழா நடத்திப் பின்பு தன் நாட்டை அடைந்தான்.

*முனிவர் வழிபட்டது :*

இந்தப் பவானி கூடல் வரலாற்றைச் சூத முனிவன் அருளச் சௌனகாதி முனிவர்கள் கேட்டு மகிழ்ந்து, தாமும் அந்தத் தலத்தை அடைந்து வழிபடுவதற்கு எண்ணிஞர்கள். நைமிசாரணியத்திலிருந்து புறப்பட்டு, இடையிலுள்ள பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு அவ்வனத்தை அடைந்தார்கள். அங்கே சங்கம தீர்த்தத்தில் நீராடிக் கோபுரத்தைப் பணிந்து, திருக்கோயிலுக்குள் சென்று சிவபிரானை வணங்கிப் பூசை செய்தார்கள். பின்பு அத்தலத்தில் நிகழ்ந்த வரலாறுகளை எல்லாம் நினைவுபடுத்திக்கொண்டு இறைவனைப் பலவாறு துதித்தார்கள் :

''பிங்கலன் பூசனை பெரிது வந்தினி
தங்களன் பேர்புனை அமல போற்றி,மெய்
தங்கிய பராசரன் தவமு வந்தருள்
சங்கம சேத்திரத் தலைவ போற்றியே''

''மற்கைவாள் அவுணரை மடிக்க ஈரிரு
துர்க்கையர் தமைத்தரும் சோதி போற்றிஅவ்
வக்கிரற் கடிந்தவன் வரங்கள் வேட்டதை
நற்கரு ணையின்அருள் நம்ப போற்றியே.''

''ஈசநின் திருவடி போற்றி, எம்மனோர்
பூசைகொண் டருளிய புனித போற்றி,முன்
மாசகல் சூதனின் மகிமை நங்களுக்
கேசறச் சொலத்தரும் இறைவ போற்றியே!''

இவ்வாறு இறைவனைத் துதித்த முனிவர்கள், அவனுடைய திருவருள் பெற்று இன்பமடைந்து, அங்கிருந்து மீட்டும் நைமிசாரணியத்தை அடைந்து வாழலாயினர்.

*''வாழி அந்தணர் வானவர் ஆனிரை
வாழி வையகம் மாதவர் அன்பர்கள்
வாழி தென்னள கேசன் மலர்க்கழல்
வாழி ஆரண வல்லிபொற் ருட்களே!''*

———

# ‘காசியின் மேலாய கடிநகர்’

புலவர். செ. இராசு

*‘ஆதி கருவூர் அணிவெஞ்சை மாக்கறைசை*
*நீதி அவிநாசி நீள்நணு—மேதினியின்*
*தஞ்சமாம் செங்குன்றூர் தண்முருகன் பூண்டிதமை*
*நெஞ்சமே நித்தம் நினை’*

—என்று நல்லிசைப் புலமை நாவலர்களால் போற்றப்பெறும் கொங்குச் சிவாலயங்கள் ஏழி னுள்ளே திருஞானசம்பந்தர் வருகை தந்து பதிகம் பாடியதும், கங்கையிற் புனிதமாய காவிரி, பாவலர் பரவும் பவானி ஆகிய இரண்டு பேராறுகள் கூடும் கூடுதுறையில் விளங்குவது மாகிய சீரார் திருத்தலம் பவானியும் ஒன்று. இப்பெருமான் திருக்கோயில் திருப்பணி முடியப் பெற்றுக் குடமுழுக்கு விழா நடைபெறு வது அன்பர் உள்ளங்களையெல்லாம் குளிரச் செய்யும். இத்தலத்தின் பெருமைகளை ஒரு சிறிது காண்போம்.

## நாடும் நகரமும்:

கொங்குநாடு சங்க காலத்தே தனித்து விளங் கிய நாடு. சேர, சோழ, பாண்டிய நாடுகளுடன் தொண்டை நாட்டையும் கொங்கு நாட்டையும் சேர்த்துத் ‘தமிழ்நாடு ஐந்து’ என்று கூறும் வழக் கம் இருந்ததாகத் தண்டியலங்கார மேற்கோள் பாடல் கூறும் * இக் கொங்கு நாட்டைத் தொண்டை நாட்டிலிருந்து இங்கு வந்து குடி யேறிய பழங்குடி மக்கள் நிருவாக வசதிக்காக 24 நாடுகளாகப் பிரித்தனர். பூந்துறை நாடு, காங்கேய நாடு, அரைய நாடு என்பன அவை. அவைகளில் பவானித் தலம் விளங்கும் வட கரை நாடு என்பதும் ஒன்று.

அந்தியூரைத் தலைநகராகக் கொண்டு பழமை யான 24 ஊர்களைத் தன்னகத்தே கொண்டது வடகரை நாடு. பவானியாற்றின் வடகரையில் அமைந்திருக்கும் காரணத்தால் இந்நாடு வட கரைநாடு என்று பெயர் பெற்றது. வடகரை நாட்டு 24 ஊர்களில் ஆறுவதாக வைத்துச் சிறப்பிக்கப் படுவது நமது பவானி.

## பெயர்க் காரணம்:

மேற்கூறிய வடகரை நாட்டு ஊர்த்தொகைப் பாடல் பவானியை வானி என்றே குறிப்பிடு கிறது. ‘வானி’ என்பதுதான் பவானியாற்றின் பழம்பெயர். எனவே‘சென்னிமலை’ சிவன்மலை, திருச்செங்கோடு போன்ற மலைகளின் பெயர் அதன் கீழ் அமைந்த ஊருக்குப் பெயராக அமைந்தது போல வானியாற்றின் பெயரே அதன் கரையில் அமைந்த ஊருக்கும் பெயராக ஏற்பட்டது. ஆற்றின் பெயர் பவானி என மாறிய பின் ஊருக்கும் பவானி என்ற பெயர் ஏற் பட்டது.

‘பவானி’ என்பது பார்வதி தேவிக்குரிய பல திருநாமங்களில் ஒன்று. எனவே அம்மனின் பெயரால் இத்தலத்திற்கும் பவானி என்ற பெயர் ஏற்பட்டது.

இறைவி ஆண்டவனை ‘நீயே இறைவன்’ என்ற கருத்தில் ‘பவா நீ’ என்று அழைத்ததாக வும் பின்னர் அப்பெயரே பவாநி—பவானி என்று மாறியது என்றும் சிலர் கூறுவர்.

## சங்க காலத் தொடர்பு:

பதிற்றுப் பத்தில் குறிப்பிடப்பெறும் ‘நன்று’ என்னும் குன்று இதன் அருகில் உள்ள ஊராட் சிக் கோட்டை மலை என்பது அறிஞர் சிலர் துணிபு. திருஞான சம்பந்தர் தன் பதிகத்தில்

---

* *‘நறவேந்து நங்கை நலங்கவர்ந்து நல்கா*
*மறவேந்தன் வஞ்சியான் அல்லன்—துறையின்*
*விலங்காமை நின்ற வியன்தமிழ்நா டைந்தின்*
*குலங்காவல் கொண்டொழுகும் கோ,’*

இவ்வூரைத் 'திருநணா' என்றே குறிப்பிடு கின்றார். சங்க காலத்து நன்று, தேவார காலத் தில் நணாவாக மாறிற்று. இன்றும் இவ்வூருக் குத் திருநணா என்ற பெயர் வழக்கில் உள்ளது.

சேர இளவரசன் ஆட்டனத்தியும், சோழர் குலக் கொடி ஆதிமந்தியும் நீர் விளையாட்டுக்கு வந்து கலந்து கொண்ட 'கழார்' நீர்த்துறை பவானிக் கூடுதுறைதான் என்பதும் சிலர் கருத்து.

கூடலூர் (கூடல்+ஊர்) என்று சங்க இலக் கியங்களில் பேசப்படுவது இவ்வூராகத்தான் இருக்கலாம்.

## பவானியாறு :

பவானிக்குச் சிறப்பு இங்கு பவானியும் காவிரியும் கூடுகின்ற கூடுதுறையினால்தான். கேரளத்திலுள்ள அட்டபாடிப் பள்ளத்தாக்கில் தோன்றி குன்னூராறு, மாயாறு, பாய்கரை யாறு முதலிய கிளையாறுகளுடன் இங்கு வந்து காவிரியுடன் கலக்கின்றது. பதிற்றுப் பத்தில் பெருங்குன்றூர்க்கிழார் இளஞ்சேரல் இரும்பொறையைப் புகழும் பாடலில் வானி யாற்றின் நீரைப்பற்றிக் குறிப்பிடுகின்றார்.

*புனல்பாய மகளிர் ஆட ஒழிந்த*
*பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்*
*சாந்துவரு வானி நீரினும்*
*தீந்தண் சாயலன் மன்ற தானே!*

என்பது அப்பாடலாகும்.

சென்னிமலையாண்டவன் பிள்ளைத் தமிழில் இவ்வானியாறு சிறப்பாகப் புகழப் பெற் றுள்ளது.

'தெய்வ வானி' என்று ஓரிடத்தில் அதன் ஆசிரியர் குந்தாணி சாமிநாதக் கவிராயர் பாடு கின்றார்.

*'சரசகாவிரி வாணி காஞ்சியனுமையும்*
*சதுர்வித நதி'*

என்று காவிரியோடு வானியை இணைத்துப் பாடுகின்றார் அவர்.

வேதாந்த தேசிகரும் பரமபதபங்கத்தில் ''மாதவனூர் வடகொங்கில் வானியாற்றில்'' என்று குறிப்பிடுவார், கொங்கு மண்டல சதகத்திலும் இன்னும் பல பிரபந்தங்களிலும் வானியாறு புகழ்ந்துரைக்கப்படுகிறது.

## திருப்புகழ் பெற்ற தலம் :

கி.பி 15ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 16ஆம்நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்து சந்தத்தமிழ் மூலம் முருகன் புகழ் ஓதிய அருண கிரிநாதர் கொங்கு நாட்டில் சுமார் 40 தலங் களுக்கு வருகை புரிந்து 250க்கு மேற்பட்ட திருப்புகழ்ப் பாடல்களை பாடியுள்ளார்.

*'சிலைவேட சேவற் கொடியோனே*
*திருவானி கூடற் பெருமாளே''*

என்பது இத்தலத்துத் திருப்புகழின் ஈற்றுப் பகுதியாம். இதனைச்

*''சிலைவேட சேவற் கொடியோனே*
*திருவானி கூடற் பெருமாளே !''*

என்று மாற்றிப் பதிப்பித்து மதுரைத் திருப்புக ழோடு (கூடல்) சேர்த்துப் பவானிக்கே திருப் புகழ் இல்லை என்று கூறுகிறது சில திருப்புகழ்ப் பதிப்புக்கள். ஆனால் திருப்புகழ் ஓலைச் சுவடி களிலே கூடத் 'திருவானிகூடல்' என்றே காணப்படுகிறது. பவானிக் கல்வெட்டுக்களி லும், இலக்கியங்களிலும் பவானி 'வானி கூடல்' என்றே பேசப்படுகிறது.

## புராணச் சிறப்புக்கள் :

பவிசுபோத்தர புராணம், பிரம கைவர்த்த புராணம் போன்ற வடமொழிப் புராணங்களில் இத்தலத்தைப் பற்றிய குறிப்புக்கள் உண்டு. இதனைப் பின்பற்றி ஓராட்டுக் குப்பை செட்டி பாளையம் வாசுதேவ முதலியார் தமிழில் தல புராணம் இயற்றியிருக்கின்றார். அது 18 சருக் கங்களையும் 901 பாடல்களுமுடையது. இவ் வூரை ''பஞ்சகிரி மத்யப் பிரதேசம்'' என்று குறிப்பிடுகின்றார். நாககிரி சங்ககிரி, வேதகிரி, பத்மகிரி, மங்களகிரிஎன்ற ஐந்து மலைகளால் சூழப்பட்டபகுதி என்பது இதன் கருத்தாகும்.

இத்தலத்தைச் சிறப்பிக்கப் பல புராணக் கதைகள் எழுந்தன. குபேரன் இங்கு வந்து

பூசித்தான் எனவே தட்சிண அளகை என்ற பெயர் ஏற்பட்டது. இலந்தை மரம் இங்குத் தல விருட்சமாக இருப்பதால் (இலந்தைக்கு வடமொழியில் பெயர் பதரி) தட்சிண பதரிகாச்சிரமம் என்றும் பெயர் ஏற்பட்டது என்பர். இந்த இலந்தை மரம் நாள்தோறும் இறைவன் பூசைக்கு ஒரு பழம் தருமாம். இதனைக் கொங்குமண்டல சதகம் கூறும்.

*''அருந்தவ மாமுனி வோர்களும் தேவரும்*
*அன்புடனே*
*நிரந்தரமாகத் தொழும்ஆல யத்துக்கு*
*நித்தநித்தம்*
*திருந்தும் பரம சிவன்பூச னைக்கொரு*
*தென்னிலந்தை*
*மரங்கனி யீவது நண்ணூர் சூழ்கொங்கு*
*மண்டலமே''*

வேதகிரி என்று புகழப்படும் ஊராட்சிக் கோட்டை மலை நாரதரின் வேள்விச் சாம்பலில் வளர்ந்த மலையாம்!

*''அலையாடும் பூம்புனல் மேவிய காவிரி*
*யாற்றருகே*
*நிலையான வேத கிரியென்ப தேன்நிதி*
*நித்தநித்தம்*
*தலையான மாதவ நாரதர் வேள்வியிற்*
*சாம்பல்கொட்டி*
*மலையாய் வளர்ந்தது நண்ணூர் பயில்*
*கொங்கு மண்டலமே !**

## கூடுதுறைச் சிறப்பு :

இவ்வூர் மிகப் பெருமையைப் பெறுவது கூடுதுறை யினாலாகும். வடநாட்டில் உள்ள பிரயாகைக்கு (திரிவேணி சங்கமம்-அலகாபாத்) ஒப்பாக இதனைக் கூறுவர். அங்குக் கங்கையும் யமுனையும் கண்ணுக்குத் தெரியாமல் (அந்தர் வாகினியாக) சரசுவதியாறும் கூடுகின்றன வாம். அதே போலப் பவானியிலும் காவிரி யாறும், பவானியாறும் கண்ணுக்குத் தெரியாமல் அமுதநதியும் ஒன்றாகக் கூடுகின்றன.

*''பொன்னயே கங்கை யமுனையே பவானி*
*பொருவரும் பராசரன் வகுத்த*
*மின்னவிர் அமுதநதி''*

என் று ஒரு பழம் பாடல் கூறும்.

கிரகண காலங்களில் இங்கு மூழ்குவது புண்ணியம் என்று கொங்கு மண்டல சதகம் கூறும்.

*''காலில் அரவம் இருசுடரைப் பற்றும்*
*காலத்திலே*
*மேலுல கம்புக விரும்புவோர் சென்று*
*மூழ்குவதும்*
*கோல மிகுந்த பவானியும் பொன்னியும்*
*கூடுதுறை*
*வாலிப காசி நண்ணூர் பயில்கொங்கு*
*மண்டலமே*

என்பது அப்பாடல். வேறொரு பாடல்

*''காசியின் மேலாய்க் கவினும் இக்*
*கடிநகர் அன்றே''*

என்று சிறப்பிக்கும் இப்பாடல்களால் இத்தலம் காசியுடன் ஒப்பிட்டு எண்ணத்தக்கது என்று அறிகின்றோம்.

## இலக்கியங்கள் :

சங்கப்பாடலும், தேவாரமும், திருப்புகழும், தல புராணமும், கொங்கு மண்டல சதகமும் புகழ்கின்ற பகுதிகளை மேலே பார்த்தோம்; பூந்துறைப் புராணமும், அவிநாசித் தல புராணமும் இத்தலத்தின் புகழைக் கூறுகின்றன.

இத்தல அம்மன் பேரில் வேதநாயகி அம்மன் பிள்ளைத் தமிழ் என்ற நூலொன்றுண்டு. அந்நூல் பாடல் ஒன்றில் ''ஏழ்புவியும் காக்கவரும் தாய்'' என்று வேதநாயகியைப் புகழ்கின்றார் ஆசிரியர்.

பதிற்றுப் பத்தந்தாதி, மாலை, உலா, கலம்பகம் போன்ற பிரபந்தங்கள் இத்தலத்திற்கு உண்டு. இவ்வூரில் வாழ்ந்த 'பாலபாரதி' முத்துசாமி என்ற அன்பர் பல தனிப்பாடல்கள் பாடியுள்ளார்.

## கல்வெட்டுக்கள் :

இவ்வூர்க் கல்வெட்டுக்களை 18 ஆம் நூற்றாண்டின் இறுதியில் மெக்கன்சியின் உதவியாளர்கள் படியெடுத்தனர். அதில் பவானிக் கோயிலைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது கோயமுத்தூர் சில்லா அந்தியூர்த்தாலுக்காவுக்குச் சேர்ந்த ஒபளி பவானிக் கூடலு மிட்டா

---

* *இவ்விரு பாடல்களும் அச்சேருத சதகத்தில் உள்ளன. சுவடி வித்வான். வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டரிடம் உள்ளது.*

மவ்வுசே நண்ணுவுடையார் கோயில்'' என்று குறிப்பிடப் பெறுகின்றது. இக்கல் வெட்டுக்கள் தென்னிந்தியக் கோயில் சாசனங்கள் மூன்றும் தொகுதி முதல்பாகத்தில் குறிப்பிடப் பெற்றிருக்கின்றன.

கல்வெட்டுக்களில் சங்கமேசுவரன் பெயர் நண்ணுவுடையார் என்றும், வேதநாயகியின் பெயர் பண்ணார் மொழியம்மன் என்றும் குறிக்கப்பெற்றுள்ளன. மூன்று கல்வெட்டுக்கள் சிவாலயத்திலும், ஒரு கல்வெட்டு பெருமாள் கோயிலில் சௌந்தரவல்லித் தாயார் சந்நிதி மகாமண்டப மேல் விதானத்திலும் உள்ளன.

வேதநாயகி கோயில் முன் மண்டப விதானத்தில் உள்ள கல்வெட்டு (கி.பி. 1645) அம் மண்டபத்தைக் கட்டியவர் இம்முடிக் கட்டி முதலியார் மனைவி சின்னம்மையார் என்று கூறுகிறது. இந்தச் சின்னம்மையார் சிறந்த தமிழ்ப் புலவரும் ஆவார்.

சங்கமேசுவரர் கோயிலுக்குச் சுத்தத் திரு நடைமாளிகை, முன் நிருத்த மண்டபம், சிகரம், பண்ணார்மொழியம்மனுக்குக் கர்ப்பக் கிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், அரங்க மண்டபகுமாரர் கோயில், யாகசாலை, வசந்த மண்டபம் கோபுரம் மதில் உண்டாக்கி ஆயிர லிங்கமும் பிரதிட்டை செய்தவர் இம்முடிக் கெட்டி முதலியார். ஆண்டு கி. பி. 1640 இவருடன் நல்லுடையப்பர் என்பவரும் சேர்ந்து திருப்பணி செய்தார்.

மைசூர் அரசர் கிருஷ்ண தேவராயர் (கி.பி. 1734—1765) காலத்தில் தளவாய் தேவராயர் பவானிக் கூடலில் மகாமண்டபத்தின் மேல் கல் தளமிட்டதாகப் பிரகாரச் சுவர்க் கல்வெட்டுக் கூறுகிறது.

குடந்தைய குல வெள்ளாளரில் வடகரை நாட்டிலே மாத்துண் கோட்டை, நல்லாறு, கூத்தன் பூண்டியாரும், தெற்கு மணல் நாட்டில் கொடந்தையூர்க் காணியாட்சி அனுமந்தக் கவுண்டன் மகன் திருமலைக் கவுண்டன தம்பி நாராயணக்கவுண்டன் கர்ப்பக்கிரகம், சிகரம், அர்த்தமண்டபம், மகா மண்டபம் கட்டி வைத்தார்.

இவர் கெட்டி முதலியாரின் அமைச்சராவர். இக்காரியத்தை மேற்பார்வை செய்தவன் (திருப்பணிமணியம்) ஆட்சரகாயன். கட்டிட வேலை செய்தவன் குருவப்ப ஆசாரி மகன் ரங்கப்பஆசாரி.

### வரலாற்றுக் குறிப்புக்கள் :

வரலாற்று யாத்ரிகன் ஸ்வார்ட்ஸ் 14 8.1779 அன்றும், டாக்டர் புக்காணன் 1800 நவம்பரிலும் பவானிக்கு வந்துள்ளனர். 2.9.1790ல் பவானிக்கோட்டை ஆங்கிலேயரால் தகர்க்கப் பட்டது. ஐதர்அலி இந்துக் கோயில் ஒன்றிலும் கைவைக்கவில்லை. ஆனல் திப்பு சுல்தான் பவானிகூடல் கோயில் மானியத்தை நிறுத்தி விட்டான்.

1797ல் கேப்டன் ஓராங் வசத்தில் 22ஆம் கம்பெனிப் பட்டாளம் பவானியில் இருந்தது. ஆங்கிலேயர் கொங்குநாட்டைக் கைப்பற்றி தும் இரண்டு மாவட்டங்களாகப் பிரித்தனர். வடபிரிவிற்குப் பவானி தலைநகராக்கப்பட்டது. 6. 7. 1799ல் மாக்னியாட் பவானியில் முதல் கலெக்டராகப் பொறுப்பேற்ருர். அவரை அடுத்து 22. 5. 1804 அன்று கலெக்டராகப் பொறுப்பேற்ற கேரோவின் 'தந்தக் கட்டில்' திருப்பணி நாம் அறிந்ததுதானே !

# பவானித் திருக்கோயிலும் திருப்பணியும்

முன்னாள் அற நிலைய ஆணையர் அ. உத்தண்டராமன், ஐ.ஏ.எஸ்.

காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனம் மணி
இலிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறைய நீர் அமைய
ஆடிப்
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டி
னோமே.
—அப்பர்

வில்லார் வரையாக மாநாகம் நாணாக வேடங்
கொண்டு
புல்லார் புரமூன் றெரித்தார்க் கிடம்போலும்
புலியும் மானும்
அல்லாத சாதிகளும் அங்கழன்மேற் கைகூப்ப
லடியார் கூடிச்
செல்லா வருநெறிக்கே செல்ல வருள்புரியுந்
திருநணாவே.
—சம்பந்தர்

வடநாட்டில் பிரயாகையில் உள்ள திரிவேணி சங்கமம் போன்று தென்னாட்டில் உள்ள தேவாரப் பாடல்கள் பெற்ற திருத்தலங்களுள் கூடுதுறைகள் இரண்டு உள்ளன. விருத்தாசலத்துக்கு அருகே 14 மைல் தொலைவில் திருமணி முத்தாறும் வெள்ளாறும் கூடுமிடத்தில் கூடலையாற்றூர் என்ற திருத்தலம் உள்ளது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் விருத்தாசலத்தை நோக்கிச் சென்றுகொண் டிருந்த போது கூடலையாற்றூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள நெறிகாட்டு நாயகர் கிழ அந்தண வடிவில் தோன்றி நாயனாரை அழைத்துச் சென்று பதிகம் பெற்ற தலம்.

மற்றொன்று ஈரோடு புகைவண்டி நிலையத்திலிருந்து ஒன்பது மைல் தொலைவிலும் சேலம் கோயமுத்தூர் நெடுஞ்சாலையில் சேலத்திலிருந்து 36 மைல் தொலைவிலும், கோயமுத்தூரிலிருந்து 64 மைல் தொலைவிலும் உள்ள பவானி என வழங்கும் திருநணா என்ற திருத்தலம். இது திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய திருப்பதிகம் பெற்ற தலம். அந்தரவாஹினியாக அமுதநதியும் கூடுவதாகக் கொண்டு இத்தலத்துக்குப் பவானி முக்கூடல், தட்சிணப் பிரயாகை, தட்சிணத் திரிவேணி சங்கமம் என்ற பெயர்களும் வழங்குகின்றன.

இத்தலத்தில் வழிபடும் அடியவருக்கு யாதொரு தீங்கும் நண்ணுதாதலால் நண்ணாவூர் அல்லது (திரு) நணா ஆயிற்று என்பர். 'வினை கெடுக்கும் திருநணாவே' என்பது சம்பந்தப் பெருமான் அருள்வாக்கு. அருணகிரிநாதர் அருளிய திருப்புகழில் இத்தலத்துக்கு 'திருவாணிக் கூடல்' என்ற பெயர் காணப்படுகிறது. அம்பாள் சந்நிதி மண்டபத்தில் உள்ள கல்வெட்டுக்களிலும் திருவானிக் கூடல் என்னும் பெயர் உள்ளது. பவானி நதிக்கு வானி என்ற பெயரே வழங்கி வந்து பிற்காலத்தில் நதிக்கும் இத்தலத்துக்கும் அம்பிகையின்பெயரான பவானி என்ற பெயர் தோன்றியிருக்கலாமெனத் தெரிகிறது.

பவானிக்கு அருகே ஊராட்சி கோட்டைமலை அல்லது நண்ணாமலை என்ற உயரிய செங்குத்தான மலை உள்ளது. திருமலை, திருப்பரங்குன்றம், பழனி, திருவண்ணாமலை முதலிய தலங்களுக்கு ஆங்குள்ள மலைகளின் பெயர்கள் அமைந்ததுபோலத் திருநண்ணாமலை திருநண்ணாவாகி திருநணா ஆகியிருக்கலாம். இத்தலம் பத்மகிரி, நாககிரி, (திருச்செங்கோடு) சங்ககிரி, மங்களகிரி, வேதகிரி என்ற ஐந்து மலைகள் நடுவே இயற்கைவளம் நிறைந்த சூழ்நிலையில் அமைந்துள்ளது. சம்பந்த சுவாமிகள் பதிகத்தில்

"அந்தண் சாரல்
வந்தார் மடமந்தி கூத்தாட
வார் பொழிலில் வண்டு பாட
செந்தேன் றெளியொளிரத்தேமாங் கனியுதிர்க்
குந் திருநணாவே"

"விரைசூழ்வெற்பில்
குன்றேறங்கி வன்றிரைகள்
மோதமயிலாடுஞ் சாரற் செவ்வி
சென்றேங்கி வானவர்களேத்தி யடிபணியுந்
திருநணாவே."

" முன்னைசேர்சியம்
அந்நீர்மை குன்றி அழலால்
வலிகுறைய வழியு முன்னிற்
செந்நீர் பரப்பச் சிறந்து கரியொளிக்கும்
திருநணுவே."

என்று பலவித இயற்கை வருணனைகளைக் காண்கின்றோம்.

இத்தலத்து இறைவன் பெயர்கள் சங்கமேசுரர், சங்கமுகநாதேசுரர், வதரிவனேசுவரர், நண்ணுவுடையார் என்பன. அம்பிகையின் பெயர்கள் — வேதநாயகி, பண்ணார் மொழியம்மை என்பன. சேலம் கோயமுத்தூர் கோட்டங்கள் ஒன்றாயிருந்த போது பவானியே கோட்டத் தலைநகராக இருந்தது. அப்போதிருந்த ஆங்கிலேய கலெக்டருக்கு அம்பிகை அருள் புரிந்ததும் அவர் தேவிக்குத் தந்தத்தால் ஊஞ்சல் அமைத்துக் கொடுத்ததும் உலகறிந்த வரலாறு.

இத்தல விருட்சம் இலந்தை (வதரி). இப்போது கோயிற் சுற்றுவெளியில் இரண்டு இலந்தை மரங்கள் உள்ளன. ஈசருக்கு வதரிவனேசுவரர் என்ற பெயர் வழங்கக் காரணம் இத்தல விருட்சமே.

ஆடி மாதப் பிறப்பன்றும், ஆடி 18-ஆம் பெருக்கன்றும் அமாவாசை, கிரகணம், ஆண்டுப் பிறப்பு முதலிய நாட்களிலும் ஏராளமான மக்கள் கூடுதுறையில் நீராடி இறைவனை வழிபடுவர். ஐப்பசி மாதம் துலாக்காவிரி நீராடுவதும் உண்டு.

பங்குனி, சித்திரை மாதங்களில் தேரோட்ட விழா நடைபெறும். மாசி மாதம் இத்தலத்தில் உள்ள செல்லியம்மன் கோயிலில் தேர்த் திருவிழா நடைபெறும்.

பவானிக்கு மேற்கே பவானியாறும், கிழக்கே காவிரியும் ஓடுகின்றன. கூடுதுறை தெற்கே உள்ளது. பவானியாற்றுக்கும் காவிரிக்கும் பாலங்கள் உள்ளன. பவானிக்குக் கிழக்கே குமாரபாளையம் என்ற ஊர் அமைந்துள்ளது. இத்தலத்து மக்கள் உழவுக்கும் நெசவுக்கும் வந்தனை செய்து வாழ்பவர். பவானி சமுக்காளமும், குமாரபாளையம் நார்ப் பட்டும் புகழ் பெற்றவை. நெல்லும் கரும்பும் விளையும் இவ்வூர் நிலங்கள் பவானியாற்று நீர் வளத்தால் செழித்து விளங்குகின்றன.

இத்தகைய சீரும் சிறப்பும் வாய்ந்த திருத்தலத்தில் உள்ள திருக்கோயில் மிகவும் சிதைவுற்றிருந்தமையால் அவசியமான திருப்பணிகளையாவது செய்து ஆலயத்தைப் பாதுகாக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் சிறு அளவில் முக்கியமாகப் பழுது பார்க்க வேண்டிய இடங்களை மாத்திரம் செப்பனிடுவதற்கான திட்டமொன்றை அரசாங்க உதவியுடன் 1956-ஆம் ஆண்டு தொடங்கினோம். ஆனால் இறைவன் திருவருள் மெய்யன்பர்கள் குமாரசாமி கவுண்டர், சுப்பண்ணக்கவுண்டர், கந்தப்ப கவுண்டர் முதலியோர் உள்ளத்திற் புகுந்து சேய்யும் திருப்பணிகள் திருந்தச் செய்யப்பட வேண்டுமென்ற எண்ணத்தைத் தோற்றுவித்தது. அவர்கள் திருப்பணிக் குழு ஒன்றை அமைத்து இத்திருக்கோயில் திருப்பணி நம் நாட்டு மரபுப்படி நல்ல முறையில் செய்யப் பெறவேண்டுமென்று பெருமளவில் திட்டமிட்டுப் பணியாற்றினர். 17—6—60-இல் இத்திருப்பணியைப் பார்வையிட்ட கோயமுத்தூர் மண்டலப் பொறியியல் அதிகாரி, பணி செய்துகொண் டிருந்த ஸ்தபதியின் செயல் திறத்தையும் திருப்பணிக் குழுவினரின் ஆர்வத்தையும் தன்னலமற்ற சேவையையும் வெகுவாகப் பாராட்டியதுடன் இப்போது அமைக்கப் பெற்றுள்ள சிற்ப வேலைப்பாடுகள் புராதன சிற்பங்களை ஒத்து விளங்கும் சிறப்பினையும் நன்கு விளக்கிக் காட்டியுள்ளார்.

தனிப்பட்ட ஒரு குழுவினரால் செய்யப் பெற்ற திருக்கோயில் திருப்பணிகளுள் இத் திருப்பணியே தலைசிறந்து விளங்குகிறது. திருப்பணிக் குழுவினர் எல்லாருமே நம்முடைய பாராட்டுதலுக்குரியவர்களே. எனினும் சிறப்பாக உயர்திரு கே. கே. சுப்பண்ண கவுண்டரும், திரு எம். ஏ. ஆய்க் கவுண்டரும் தங்கள் உடல் நலத்தைக்கூடப் பொருட்படுத்தாமல் அல்லும் பகலும் ஓய்வின்றி உழைத்து இத்திருப்பணியை நல்ல முறையில் முடித்துக் குடமுழுக்கும் செய்விக்கப் பெருமளவில் பணி புரிந்துள்ளனர்.

இத்திருப்பணிக் குழுவினரின் சாதனையின் அருமை பெருமையும் தனிச்சிறப்பும் இத்திருக் கோயில் 1955-ஆம் ஆண்டு இருந்த நிலைமையையும் இப்போது இருக்கும் நிலைமை யையும் ஒப்பு நோக்கிப் பார்ப்பவர்களுக்கே நன்கு விளங்கும். இத்திருப்பணிக்காக அற நிலையங்களிலிருந்து ரூ. 4, 34,000-ம், பொது மக்கள் நன்கொடையாக ரூ. 9,26,000-ம், தேவஸ்தான நன்கொடையாக ரூ.4,47,000-ம், அரசாங்க நிதி உதவி மூலமாக ரூ. 65,000-ம், உண்டியல் வரவு மூலமாக ரூ. 26,000-ம், கூப்பன் விற்பனை மூலமாக ரூ. 4,400-ம், வட்டி வரவு மூலமாக ரூ. 8,000-மும் ஆக மொத்தம் ரூ. 14,34,000 பெற்று மிக நல்ல முறையில் அரிய சிற்ப வேலைப்பாடுகளுடன் சங்கமேசுரர் ஆலயம் புதுப்பிக்கப் பெற்றுள் ளது. இக்குழுவினருக்கு ஆத்திகப் பெரு மக்கள் பெரிதும் கடமைப் பட்டுள்ளனர்.

*' செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்*
*வானகமு மாற்றலரிது '*
*' நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்*
*பண்பு பாராட்டு முலகு '*
*' கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்டு*
*என்ஆற்றுங் கொல்லோ உலகு '*

என்ற குறட்பாக்களை நினைவு கூறுவதே நாம் செய்யும் கைம்மாறு.

இத்திருக்கோயிலில் இறைவன் சந்நிதி ஒன்றே முற்றுப் பெற்ற நிலையில் உள்ளது. அம்பிகை சந்நிதியும் இத்திருக்கோவிலைச் சார்ந்த பெருமாள் கோயில் சந்நிதிகளும் இன் னும் திருப்பணி செய்யப் பெறவேண்டும். இறைவன் திருவருளால் அத்திருப்பணிகளும் விரைவிலேயே செய்யப் பெறுமென்று நம்பு கிறேன்.

*' கொம்மை வரிமுலைக் கொம்பனையான்*
*கூறனுக்கு*
*செம்மை மனத்தால் திருப்பணிகள்*
*செய்வேனுக்கு*
*இம்மை தரும் பயன் இத்தனையும் ஈங்கு*
*ஒழிக்கும்*
*அம்மை குலாத்தில்லை ஆண்டானைக் கொண்*
*டன்றே*

— திருவாசகம்.

---

# சமுதாய முன்னேற்றமும் சமய சக்தியும்

ச. சச்சிதானந்தம் பிள்ளை பி.ஏ., எல். டி.,

"இசைபயில் சடாக்ஷர மதாலே
இகபர சௌபாக்யம் அருள்வாயே
... ... ... ... ... ...
அசுரர் கிளைவாட்டி மிகவாழ
அமரர் சிறைமீட்ட பெருமாளே!" (அருணகிரிநாதர்)

'சமுதாயம்' என்னும் சொல் மக்களின் திரள் என்னும் பொருளில் இங்கு எடுத்தாளப் படுகிறது. இக்காலத்தில் பல நாடுகள் தங்கள் தங்கள் சமுதாயம் முன்னேற்றம் அடைய வேண்டும் என்று பெரும்பாடுபடுகின்றன. மக்கள் குலம் முழுவதுமே முன்னேற வேண்டும் என்னும் விழுமிய உலகப் பொதுநோக்கமும் ஆங்காங்கே சான்றோர் சிலர் உள்ளங்களில் தோன்றி வளர்ந்து வருகின்றது. சமுதாயம் என்பது பல தனி மனிதர்களைக் கொண்டுதான் ஏற்படுவது. ஆயினும் அத்தனி மனிதர் எல்லாரும் அறிவு, ஆற்றல், அன்பு, பண்பாடு என்னும் நலங்களில் ஒரே அளவு முதிர்ச்சி பெற்றவர்களாயிருப்பதில்லை. ஓரளவாவது ஏற்றத் தாழ்வுகள் இயல்பாகவே என்றும் காணப்பட்டு வந்துள்ளன.

'முன்னேற்றம்' என்பது இன்னும் அடைந்திராத ஓர் உயர்ந்த குறிக்கோளை அடையக் கருதி மக்கள் தமது வாழ்க்கை நடத்தி வருவதாம். முன்னேற்றத்தின் மதிப்பு, குறிக்கோளின் உயர்வு தாழ்வுகளைப் பொறுத்து நிற்கும். விலங்குகட்குரிய குறிக்கோள் பசி, தாகம், காமம், நோய் என்னும் உபாதைகளின்றும் நீங்கியிருப்பதாம். சாதாரண மனிதருள்ளும் விலங்கியல்புகள் பல மறைந்து உடனுறைந்து வருவது தேற்றம். மனிதனுக்கும் இவ்வுபாதை நீக்கம் அவசியமானதே. ஆயினும், மனித வாழ்க்கை ஏணியில் ஓரளவு மேலேறிய மக்கள் இவ்வுபாதை நீக்கத்தோடு சிந்தை நிறைவுறுவதில்லை. (1) குலம் பொல்லேன்; குணம் பொல்லேன்; குறியும் பொல்லேன்; குற்றமே பெரிதுடையேன்; கோலமாய நலம் பொல்லேன்; நான் பொல்லேன்; நல்லாரோடிசைந்திலேன்; நடுவேநின்ற விலங்கல்லேன், விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்; வெறுப்பனவே மிகப் பெரிதும் பேசவல்லேன்; இலம் பொல்லேன்; இரப்பதே ஈயமாட்டேன்; என்செய்வான் தோன்றினேன் ஏழையேனே!" (2) "குறிக்கோளிலாது கெட்டேன்" என்றெல்லாம் நம் பொருட்டாக ஆன்றோர் திருவாக்கில் எழுப்பப் பெற்ற இந்த அலறல்கள் *மேற்குறித்த உண்மைக்குச் சான்று பகரும்.

மக்கள் அறிவிற்கும் உள்ளத்துயர்விற்கும் ஏற்ற அளவில் அவர்தம் குறிக்கோள்கள் அமையும். தனக்கு மேலானதாக ஒன்றிலாத குறிக்கோள் யாது என்னும் கேள்வி எழும். அதனை ஆன்றோர்கள் மிகப் பழைய காலத்திலேயே ஆராய்ந்து முடிவு கட்டியுள்ளார்கள். மனிதரில் பலர் விலங்குகளைவிடச் சிறந்தவர்களாய் விளங்குவதற்குக் காரணம் அவர்கட்கு ஐம்புல உணர்வு மட்டுமின்றி, ஆறுவது அறிவு ஒன்றும் உளதாதலும், அது நிலைத்து வளர்தற்கு ஏதுவாகிய மொழி வளர்ச்சியும் நூற்பெருக்கமும் என்னலாம். இச்சாதனங்களைப் போதிய அளவு பயன்படுத்திக் கொள்ளாதவர்கள் மக்களுடம்பில் வசிப்பினும், உண்மையான மக்களாக மதிக்கப்பட மாட்டார்கள். "மக்கள் தாமே ஆறறிவுயிரே", "மாவும் மாக்களும் ஐயறிவினவே" என்ற தொல்காப்பியச் சூத்திரங்கள் இவ்வுண்மையைக் கட்டுரைப்பவை.

---

* அப்பர் தேவாரம்

மனித உடம்பில் இருப்பவர்கள் யாவருமே சமமான மக்கட் பண்புடையவர்கள் என்று பேசுவது உண்மைக்குப் புறம்பான பேச்சென்பது அறிஞர் யாவர்க்கும் நன்கு தெரிந்ததே. "எல்லாரும் சமம்" என்னும் அன்பார்ந்த வாசகத்திற்கு அறிவார்ந்த பொருள் தந்து பேசுதலே அறிஞர்க்குரிய செயலாகும். "எல்லாரும் ஓர்குலம்" என்பது உண்மையே. ஒரு பெரிய நற் குடும்பத்தில், வயதிலும், கல்வியிலும், அறிவொழுக்கங்களிலும், அநுபவத்திலும் பல்வேறு அடுக்குகளில் உள்ள மக்கள் பலர் அன்பினால் பிணைக்கப்பெற்று ஒன்று சேர்ந்து வாழும் இனிய காட்சியைக் காணலாம். அங்ஙனமே தொடக்கப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி, கல்லூரி இவற்றிலெல்லாம் கற்கும் மாணவர் வளர்ச்சி படி முறையில் அமைந்திருப்பது கண்கூடு. எனவே, ஒரு குடும்பம், கல்வி நிலையம் எனினும், அங்கும் இயற்கையான வளர்ச்சி முறையில் குறையும் நிறையும் காண்பதும், படி முறையில் தாழ்வும் குறையும் நீங்கி உயர்வு சித்திப்பதும் வளர்ச்சி நியதியே எனக் கொள்ளலாம். இப்படி மேல் கீழ்ப்படிகள் அமைந்திருத்தலில் இழுக்கொன்றுமில்லை.

மக்களாய் இன்று புலப்படுபவர்கள், நெடுங்காலத்துக்கு முன்பு உலோக உடம்பிலும், தாவர உடம்பிலும், புழு பூச்சி பறவை விலங்குகளின் உடம்பிலும், பேய்கள், அசுரர் உடம்பிலுமெல்லாம் புகுந்து அறிவநுபவம் பெற்று இப்போது நன்மனிதப் பிறப்பு எய்தியதாக உண்மையை ஞானக் கண்ணினால் உணர்ந்த ஆன்றோர்கள் நவில்கின்றனர். அம்மட்டோ! அம்மனித உடம்பெடுத்த பின்னும் எத்தனையோ குறைகள், சோதனைகள், உடன் போராடித் "தெய்வமென்பதோர் சித்தம் உண்டாகப்" பெற்றவர்களாகின்றனர்.

மனிதனுக்கு இப்பூரண நிலைதான் ஈடும் எடுப்பும் அற்ற மாபெருங் குறிக்கோள். ஆணவமாதி மும்மலங்களின் வலிமை கெட்டு ஒடுங்கிப்போக, திருவருளால் மெய்யறிவு தலைப்பட்டு, பதி, பசு, பாசமென்னும் முப்பொருள்களின் இயல்புகளையும் தொடர்புகளையும் கண்டு, சிவன் இறைவனோடு இரண்டறக் கலந்து, அவன் எண்குணங்களும் தன்னிடம் பதியப்பெற்றுப் பேரானந்தப் பெருவாழ்வை எய்தவரே இவ்விழுமிய குறிக்கோளை அடைவதன் பயனாகும். பிறப்பு இறப்பு முதலிய எல்லாக் குறைபாடுகளினின்று விடுபட்டு அடையும் இப்பெரு நிலையை வீடுபேறு என்பர். ஆன்ம யாத்திரையின் இடைப்பகுதியில் தோன்றி வளர்ந்து வந்த அறிவு, ஆற்றல், அன்பு, அவாவின்மை, அருள், ஆனந்தம் முதலிய நன்மைகள் இந்த இறுதி நிலையில் பூரணமடைந்து பொலிவுறும். 'ஒன்றுநக் காண்பதே காட்சி; புலனைந்தும் வென்றான்றன் வீரமே வீரம்' என்ற ஔவைப் பிராட்டியார் பாடலின்படி தெய்வக் காட்சியும் ஞான வீரமும் விளங்கும். மணிவாசகர் அருளிச் செய்தபடி, "பேரா, ஒழியாப், பிரிவில்லா, மறவா, நினையா, அளவிலா, மாளா, இன்ப மாகட"லாய் இறைவன் இலகுவான்.

இக்காலத்தில் சமுதாய முன்னேற்றத்திற்காகத் திட்டம் வகுக்கும் அறிஞர்களும், அந்திட்டத்தை நிறைவேற்றும் அதிகாரிகளும் சிறப்பு வகையில் பொதுமக்களும்—அம்முன்னேற்றத்தின் குறிக்கோள் ஈதென்றும், பொருளும் இன்பமும் அறத்தின் வழியாகவே அடைவதற்கு உரியன என்றும் நன்றாக உணர்ந்து, அவ்வுணர்ச்சி வழியாகவே தத்தம் பங்குத் தொண்டுகளைத் திருத்தமாகச் செய்ய வேண்டும்.

பல்லாயிரம் ஆண்டுகளாய்த் தெய்விகப் பண்பாடு நிலவி வந்துள்ள நம்நாடும், இன்று வறுமை மிகுந்த ஆசிய நாடுகளில் ஒன்றாய் வீழ்ச்சியடைந்திருப்பது பெரிதும் வருந்தத்தக்க உண்மையாகும். "பத்தும் பசிவந்திடப் பறந்துபோம்" என்பது என்றும் காணத்தக்க உலகியல் உண்மை. நம் நாட்டில் வறுமையும், பசியும் எழுத்தறிவின்மையும் லக்ஷக்கணக்கான மக்களிடையே இன்று குடிகொண்டிருந்து அவர்களது ஆன்மிக வளர்ச்சியைத் தடுக்கப் பார்க்கின்றன. ஆயினும், இவ்வறுமையினிடையிலும் பல்லாயிரவர் அறத்தையும் ஆண்டவனையும் அடியோடு மறவாமல் காலந்தள்ளி வருகின்றனர்.

உண்மையான சமூக நலம் என்பது வெறும் உண்டி உடை உறைவிட வளத்தால் மட்டும் கிடைத்து விடாதென்றும், நல்லொழுக்கமும் ஆன்மலாப நாட்டமும், 'அதற்குரிய தெய்விகப் பண்பாட்டு வளர்ச்சியும்' கூடவே வளர்ந்து வருதல் அவசியம் என்றும் அறிஞர் நினைப்பூட்டி வருகின்றனர். இது பெரிதும் வரவேற்கத்தக்க அறிவுரையாகும். "உடம்பார் அழிந்தால் உயிராய் அழிவார், திடம்படு மெய்ஞ்ஞானம் சேரலும் ஒட்டார்'' என்றது உண்மையே. ஆனால் உடம்பை வளர்ப்பது உயிரை வளர்த்தற்காகவே என்னும் உயர்ந்த உண்மையை மறந்து விடலாகாது. அழியும் உடம்பையும் லௌகிக வசதிகளையும் சாதனமாகக் கொண்டு, அழியாத ஆன்மாவிற்கு நிலைபேறான பூரணத்துவ தெய்வநிலை கிடைக்கும்படி செய்வது நல்ல சமுதாயத்திற்கும் அரசாங்கத்திற்கும் உள்ள தலையாய கடமையாகும்.

விஞ்ஞான வளர்ச்சி மிகுந்த சில நாடுகளில் இப்பேருண்மை போதியவளவு போற்றப்படவில்லை. மேன்மேல் தேவைகளைப் பெருக்கிக்கொள்வதும், அதற்காகப் பரபரப்புடன் மேன்மேற் பொருளைத் தேடுவதும், இம்முயற்சியில் வெற்றியடைதற்கு அவசியமென்று தோன்றும்போது மெலிந்த நாடுகளிடம் அறநெறி திறம்பி நடத்தலும் அங்கே காணப்படுகின்றன Speed, craze, crash (வேகம், வெறி, நாசம்) என்பன நவநாகரிகத்தின் பண்புகளாயுள்ளன என்று மேனாட்டாசிரியர் ஒருவர் எழுதியுள்ளார். விஞ்ஞானம் விபரீதமாக வளர்ச்சியுற்று மக்களினத்தையே விரைவில் அழித்து விடக்கூடிய சம்மாரக் கருவிகளைப் பெருக்கி வருவது யாவரும் கண்டு கலங்கும் பயங்கர உண்மை. விஞ்ஞானம் இவ்வாறு அஞ்ஞான நெறிபுக்கு அனர்த்தம் செய்யும் கருவியாய் இழிவடைந்து ஒருபுறமிருக்க, செல்வவளங்கொழிக்கும் நாடுகளில் மக்களிற் பெரும்பாலோர் சாந்தமும் மகிழ்ச்சியும் உடையவர்களாய் வாழ இயலவில்லை. மூளைக் கோளாற்றுக்காகச் சிகிச்சை பெறச் செல்லும் செல்வர் எண்ணில் பெருகிவருகிறதாம். "ஆசைபடப்பட ஆய்வருந் துன்பங்கள்'' என்ற திருமந்திரப் பகுதியும், "செல்வம் என்பது சிந்தையின் நிறைவே'' என்ற ஸ்ரீ குமரகுருபரர் திருவாக்கும் 'Possesions are our limitations' என்ற டாகூரின் "சாதனம்'' என்னும் நூலின் வாசகமும், "சாந்தமுலேகா சௌக்யமுலேது'' என்ற ஸ்ரீ தியாகையர் திருவாக்கும் இந்நாளில் யாவரும் கூர்ந்து சிந்திக்கத்தக்கன.

" Men or today ruled by the ideal of the High Standard of Living and perturbed by the knowledge that even with about eight hours of steady work for five-and-a half days per week, under conditions of severe industrial discipline unknown to their ancestors, the standard is difficult to attain. They are enormously greedy. . . . . .They dignify it by the name of an impersonal title like the " High Standard of Living ". This greed is at the root of most of the major political problems, domestic and international, of the present day '' என்கின்றார் தற்கால அரசாங்க முறையாராய்ச்சி வல்லுநராகிய Herman Finer என்னும் பேராசிரியர்.

" Our culture is superficial today, and our knowledge dangerous, because we are rich in mechanisms and poor in purposes. . . . .we move about the earth with unprecedented speed, but we do not know, and have not thought, where we are going ; or whether we shall find our happiness there for our harassed souls " என்கின்றார் Will Durant என்னும் மேனாட்டுத் தத்துவப் பேராசிரியர்.

மனிதன் ஐந்து கோசங்களை (உறைகளை)க் கொண்ட உடம்பில் வசிப்பவன். அவனுக்குள்ளே ஆண்டவனும் உளன். மனிதனுக்கு இச்சை, ஞானம், கிரியை என்னும் மூன்று சக்திகள்

ஓரளவு வளர்ச்சி பெற்றுள்ளன. ஆனல், அவை ஒத்த அளவு வளர்ந்து ஒத்து இயங்குவதைப் பலரிடம் காண்பது அரிது. நல்ல கல்வியாலும் வாழ்க்கை முறையாலும் இம்முச்சக்திகள் ஒத்து இயங்கி உயர்வடைய வேண்டும். முருகப்பெருமான் திருக்கோலத்தில், இருபுறமுள்ள தேவிமார்கள் இச்சை, கிரியை என்னும் சக்திகளையும், என்றும் மார்பிற்சார்த்திப் பிடித்திருக்கும் வெற்றிவேல் ஞானசக்தியையும் குறிக்கும் என்பர் ஆன்ருேர். இந்தத் திருக்கோலம் நமக்கு உபதேசிக்கின்றபடி, மனிதன் தன் முச்சக்திகளையும் முறைப்படி வளர்த்து, இறைவன் நியதியோடு ஒத்துச் சென்று, அவன் திருவருள் கூடிடும் உபாயம் அறிந்து வாழவேண்டும். இப்பயனை விளைக்கும் வகையில் கல்வியும் வாழ்க்கைத் தரமும் உயரவேண்டும். தனிமனிதன் இவ்வாறு உயர்ந்தால்தான் சமுதாயமும் உண்மையாக உயரும்.

கடவுளை மறந்த கல்வியோ, அரசியலோ, வாழ்க்கையோ மனித சமுதாயத்திற்கு உண்மையான முன்னேற்றத்தை ஒரு நாளும் உண்டாக்காது. கடவுளைப்பற்றி அறியவேண்டுவன அறிந்து, அவன் திருவுளப்படி நடந்து, வானுறையும் தேவர்களினும் சிறந்தவர்களாய் மண்ணுலகோர் வாழ்தற்குரியர். அக்கடவுளோ நாம் நாடோறும் காணும் உயிர் வருக்கங்கள் பொருள்களில் ஒருவரல்லர். கடவுள் பொருள் மக்கள் முக்கரணங்களையும் இயற்கைப் பொருள்களையும் கடந்து உள்ள பொருள் (கட+உள்). ஆயினும் எல்லாவற்றிலும் கலவாமற் கலந்திருந்து கடவும் பொருள்—(கடவு+உள்). (கடவுதல்=செலுத்தல்) அது ஐம்புலன்கட்கும், மனத்திற்கும், சிவபோத அறிவிற்கும் எட்டாதது என்று அதனை அதனருளால் தரிசித்த அநுபூதிமான்கள் கட்டுரைக்கின்றனர். ஏன் அப்பொருள் நம்மறிவிற்கு எட்டாததாய்—பிறர் கண்ணுக்குக் காட்ட முடியாததாய்—இருக்கின்றது என்பதைச் சிறிது காண்பாம். நாம் நாள்தோறும் கண்ணுற் காணும் பொருள்கள் யாவும்—இயற்கைப் பொருள்கள், செயற்கைப் பொருள்கள், உடம்புகள் முதலிய எல்லாம்—ஒரு காலத்தில் தோன்றி, ஓர் கால அளவு நின்று பின்பு அழிவனவாகும். மேலும் அப்படி நமது கண்ணுக்குப் புலப்படுவன எல்லாம் அறிவற்ற சடப்பொருளேயாகும். கடவுட் பொருளோ, ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் பொருள். அறிவு வடிவான ஆனந்தப் பொருள். "அறிவுக் கறிவே இறைசற் சொரூபம். ஆனந்தப் பொருள்தான் அந்தப் பொருள்" என்றறிவித்தருளுகின்ருர் பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் என்னும் அநுபவ ஞானி. நிலை மாறுவதும் சடத்தன்மையும் ஒரு பொருளுக்கு இருந்தாலன்றி ஒரு பொருளைப் புறக்கண்ணுல் காண முடியாது. கடவுட் பொருளுக்கு இவ்விரு குறையுமில்லை. ஆதலால் அது கண்ணுக்கெட்டாததோர் மெய்ப்பொருள் எனபது உண்மை. மேலடுக்குகளிலுள்ள விஞ்ஞானிகள், கணித நூல் வல்லார், வானநூல் வல்லார் எல்லாம், தாமுணர்ந்து தெளிவுற்றுக் கூறும் பல உண்மைகளை அத்துறைகளில் புலமை பெருத எம்மனோர் மனத்தில் வாங்கிக்கொள்ள முடியாது திணறுவது உண்மை. கடவுட் பொருளைப்பற்றி, "வாக்கு மனங்கழிய நின்ற மறையோன்", "சொற்பதங் கடந்த தொல்லோன்", "மன வாசகங் கடந்தான்"; "நால்வேதத்து அப்பால் நின்ற சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற சூழலாய் இதுவுன் தன்மை"; "இன்ன உரு இன்ன நிறம் என்றறிவதேல் அரிது" என்பன போன்ற எண்ணிறந்த பொன்மொழிகளால் ஆன்ருேர் மெய்ப்பொருளின் இயல்புரைத்துள்ளார்கள.

அங்கிங்கெனுதபடி எங்குமுள்ள இறைவனை நம் அகத்தும் புறத்தும் கண்டு, முதலிற் குறித்த பெருங் குறிக்கோளாகிய வீடு பேற்றை எய்துவதற்குச் சமயம் இன்றியமையாததாகும். சுருங்கக் கூறுமிடத்து, சமயம் என்பது, இறைவனை உயிர்கள் அடைந்து அவனேடு ஒன்றுபடுதற்கென்று அவனுல் நன்ருக வகுக்கப்பட்டதோர் பெருவழி என்னலாம். இவ்வழியில் செல்வோரைச் சிவபுர யாத்திரிகர்கள் என்று கூறலாம். இவர்கள் ஆணவமலத்தால் முற்றும் கட்டுண்டு கிடந்த நிலையாகிய அவபுரத்தினின்றும், ஆண்டவனருளால் சிறிது உந்தப்பட்டு, உலோக உலகம், தாவர உலகம், அஃறிணையுயிர்வாழ் உலகம், மக்கள் உலகம் என்னும் பகுதிகளில் பலபிறவி எடுத்துப் படிப்படியே உயர்ந்து, ஆருவதறிவு துலங்கும் நன்மக்கட் பிறப்பை

